உ

திருவள்ளுவ நாயனார்

திருவாய்மலர்ந்தருளிய

# திருக்குறள்

மூலமும் ஓர் பழைய உரையும்



மகாமகோபாத்யாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்

அடையாறு ● ● சென்னை 20

உ

திருவள்ளுவ நாயனார்

திருவாய்மலர்ந்தருளிய

# திருக்குறள்

மூலமும் ஓர் பழைய உரையும்



பேராசிரியர்

டாக்டர் மு. வரதராசனார், M.A., M.O.L., PH.D. அவர்கள்

அன்புடனளித்த முகவுரை கொண்டது



மகாமகோபாத்யாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்

அடையாறு] 1961 [சென்னை-20

ஸ்ரீராமஜயம்

# முகவுரை

திருக்குறளுக்கு ஒரு பழைய உரை கிடைத்திருப்பதுபற்றி அனைவரும் மகிழவேண்டும். அதைக் காத்துத்தந்த கொண்டப்ப வாத்தியார் என்பார்க்குத் தமிழகம் கடமைப்பட்டதாகும்.

உரையின் அமைப்பும் போக்கும் ஆராய்வார்க்கு, அது பதினேழு பதினெட்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருத்தல் கூடும் என்பது புலனாகும். எவ்வாறாயினும், திருக்குறள்பற்றி ஆராய்ச்சி செய்ய விரும்புவோர்க்கு மற்றொரு துணை நூல் கிடைத்த தாயிற்று.

உணரப்பாற்று (1.), விசும்பிலார் கோமான் (25), ஆகுதல் நீர்மைபிற (34) முதலான பாடவேறுபாடுகள் பொருந்துவனவாக இல்லை. இல்லதென் இல்லவள் மாண்பாயின் (53), அஞ்சும் அகத்தே நகும் (271), உலகம் பழித்தது ஒழித்துவிடல் (280) முதலான பாடவேறுபாடுகள் சில பொருந்துவன. வேட்பன சொல்லி வினைவல எஞ்ஞான்றும் (697) முதலான சில பாட வேறுபாடுகள் சிறந்தனவாகவும் உள்ளன.

உரையில் ஏடெழுதியவரின் தவற்றாலோ வேறு காரணத் தாலோ வாக்கிய அமைப்பு, மேற்கோள் முதலியவற்றில் பிழைகள் சில உள்ளன. (12, 64) மாண்பாயின் (53) என னகர ஈறு கொள்பவர், உடைத்தாயில் (44) என லகர ஈறாகத் திரித்துப் பாடங்கொள்ளுதலின் காரணம் ஆராய்தற்குரியது.

உரை பெரும்பாலும் பரிமேலழகரைத் தழுவியே அமைந்துள்ளது. துறவறத்தில் புண்ணியங் கிடையாது (46) முதலான கருத்துக்கள் வன்மையோடு கூறப்பட்டுள்ளன. நெஞ்சங் கடுத்தது காட்டும் முகம் (706) முதலான குறட்பாக்களின் உரை பரிமேலழகர்க்கு வேறுபட்டு அமைந்துள்ளமையும் காணலாம்.

ஆராய்ச்சிக்கு உதவியாகும் இத்தகைய உரை நூலை அச்சிட்டு வெளியிடும் மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தாரின் நன்முயற்சி போற்றத் தக்கதாகும்.

மு. வரதராசன்.

# பதிப்புரை

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

---

திருவள்ளுவர் உலகம் முழுமைக்கும் உரிமை பூண்டவர். அவர் நூல் இடத்தாலும் காலத்தாலும் கட்டுப்படுவதின்றி எல்லா இடங்களுக்கும் எல்லாக் காலங்களுக்கும் உரியதாக விளங்குவது. தமிழகம் அவரை ஈன்றதும் தமிழிலே அவர் தம் நூலை யாத்ததும நம் அரும் தமிழன்னையின் தவப்பயன். அவரால் நம் நாடும் மொழியும் பொலிவடைகின்றன. படைப்புக்காலம் முதல் எல்லாக் காலத்துக்கும் நிலைத்து நிற்கும் மானிடப் பண்பின் உயிர்நிலையை அவர் நன்கு துருவி ஆராய்ந்து கண்டுகொண்டார். அதன் ஆற்றலையும் அவர் நன்கறிந்தார். மானிட வாழ்க்கையின் பயன் இன்னதென்பதும் அவருக்கு அறுதியாகத் தென்பட்டது; அப்பயனை அடைய மானிடன் தன்முன் நிறுத்திக்கொள்ள வேண்டிய குறிக்கோள்களையும் அவர் விளக்கமாக வகைப்படுத்திக் கொண்டார். பிரபஞ்சத்தின் ஒற்றுமைத் தன்மையையும், இம்மை மறுமைகளின் ஒருமைத் தன்மையையும் அவர் நன்குணர்ந்து, ஆன்மா பேரறிவு பெற்று நல்வழியில் நின்று, அதன் குறிக்கோளை அடைவதற்கு அது பின்பற்ற வேண்டிய முறைகளை வகுத்துக் காட்டியும், அதற்கு நேரக்கூடிய தடைகளைச் சுட்டியும், தக்க காரணங்களைக் காட்டி உலோகோபகாரமாக ஆசிரியர் தம் நூலை அளித்துள்ளார்.

உலகத்திலுள்ள ஒவ்வொருவரும் இந்நூலை ஆழ்ந்து கற்று, அதன்படி நடக்கத் தொடங்கும் காலமே உலகுக்கு உய்வுக் காலமாகும். தமிழர்களேனும் இக்குறட் கருத்துக்கள் யாவற்றை

யும் தம் வாழ்க்கையில் தோயச் செய்ய வேண்டுமென்ற உறுதி கொள்வாரானால் அதுவே தமிழர் உலகுக்கு வழங்கும் பேருதவியாகும். அவ்வாறு செய்யத் தமிழ் மக்களுக்குக் கிடைத்துள்ள வாய்ப்புக்கள் அளவிறந்தனவாகும்.

அவ்வாய்ப்புக்களுள் சிறந்தவை திருக்குறளுக்கு அமைந்த பற்பல உரைகளாகும். இவ்வுரைகள் பல திறப்பட்டவை; பிற்காலத்தில் எழுந்த நூலாசிரியர்கள் அநேகமாக யாவரும் குறள் வெண்பாக்களைத் தத்தம் நூல்களில் சமயோசிதமாகப் பொருத்தி அக்குறள்களின் பொருள் நுட்பங்களைப் புலப்படுத்தியிருக்கின்றனர்; வேறு சிலர் குறட்கருத்துக்களை உதாகரிக்கும் கதைகளைச் சுட்டித் தனித்தனி நூல்களை யாத்திருக்கின்றனர்; சிலர் குறள் நீதிகளை விளக்கித் தனித்தனியே நீதி நூல்களை எழுதியிருக்கின்றனர்; பலர் நூல் முழுமைக்கும் சிறியனவும் பெரியனவுமான உரைகளை இயற்றி உலகுக்கு உதவியிருக்கின்றனர். இவ்வாறு, வடமொழி வேதத்துக்கு அடுத்தபடியாய், பல்லோராலும் கையாளப்பெற்ற வேறொரு நூல் இல்லையென்றே கூறலாம்.

இவ்வாறெழுந்த உரைகளுள் 13-ஆம் நூற்றாண்டினரான பரிமேலழகர் இயற்றிய உரையே சாலச்சிறந்தது என்பது அறிஞர் கொள்கை.

பாலெல்லா நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ—நூலிற்
பரித்த வுரையெல்லாம் பரிமே லழகன்
தெரித்த வுரையாமோ தெளி.

என்றபடி குறளுக்கு எழுந்த உரைகளில் இதுவே பல வகைகளாலும் ஆசிரியர் கருத்தை ஏற்றபெற்றி உணர்தற்குச் சிறந்த உதவியாகத் திகழ்கின்றது. பால், இயல், அதிகாரம் என்ற பாகுபாடுகளில் ஒவ்வொன்றுக்கும் சிறந்த முகவுரையும், அதிகார வரலாறும் எழுதி, ஒவ்வொரு குறளுக்கும் பதங்களை அந்வயப்படுத்தி உரைவகுத்து, அவ்வக்குறளிலும் மறைந்து கிடக்கும்

நுட்பங்களைப் புகுத்தி, சொற்பொருளமைதிகளுக்கு இலக்கணமும் காட்டிச் செல்கின்றார். இவர் காலத்துக்குப் பின் எழுந்த குறள் உரையாசிரியர் யாவரும் இவருரையைப் பெரும்பாலும் பின் பற்றியே செல்வதும், தாம் வேறு உரை எழுதும் இடங்களிலும் இவருடைய உரையைச் சுட்டிச்செல்வதுமாக இருப்பதும் இவருரையின் பெருமையை வற்புறுத்தும்.

இவ்வளவு உரைகள் இருந்தும் வள்ளுவரை முற்றிலும் உணர்தல் அருமையாயிருப்பது அவரது ஒப்பற்ற உயர்நிலையைக் காட்டுவதாகும். திருக்குறளுக்கு எவ்வளவு உரைகள், விளக்கங்கள், விமர்சனங்கள், கட்டுரைகள், மொழிபெயர்ப்புக்கள் போன்றவை எழுந்தாலும், அறிஞர்களால் எழுதப்பெற்ற அவ்வளவினையும் நாம் காணக் கடப்பாடுடையோம். நூலுக்கு உரை, உரைக்கு உரை என்று இவ்வாறு விரிந்து சென்றாலும் ஒவ்வொரு முயற்சியிலும் ஒவ்வொரு பயன் காணக்கூடுமாகையால், அவை ஒவ்வொன்றும் வரவேற்கத் தக்கதேயாகும். தமிழ்க் கல்வியில் ஆர்வம் மிகுந்து வரும் இக்காலத்தில் மாணவர்க்கென்றும் பெரியோர்களுக்கென்றும் பற்பல குறள் உரைப் பதிப்புக்கள் வெளிவருவதை நாம் மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம்.

இந் நிலையில் இந் நூல்நிலையம் தன்னிடமுள்ள ஓர் ஏட்டுச் சுவடியிற் கண்ட இவ்வுரையை வெளியிடும் பேறு பெற்றுள்ளது. மகாமகோபாத்யாய ஐயரவர்கள் சேகரித்த ஏடுகள் யாவும் அவர்களால் பயனுள்ளவை என்று தேர்ந்தெடுக்கப் பெற்றவை. அவற்றுள் மேலே குறித்த சுவடியில் உள்ளவாறே காகிதப் பிரதியொன்றையும் ஸ்ரீ ஐயரவர்கள் தயாரித்து வைத்தார்கள். அப்பிரதியை அவர் ஆராய்ந்து பார்த்ததற்கு அறிகுறிகள் அதனில் காணப்படுகின்றன.

மூலச் சுவடியின் இறுதியில், "...ஷ அற்பசி 2உ ஆதிவார நாள் பூசநக்ஷத்திரம் நவமி இந்தச் சுபதினத்தில் கொண்டப்ப வாத்தியார் எழுதின திருவள்ளுவருரையைப் பார்த்து எழுதிமுடிந்தது. முற்றும். சிவனே துணை. தேவி சகாயம். திருச்சிற்றம்பலம்."

என்று காணப்பெறுகிறது. காகிதப் பிரதியில், ' திருக்குறள் மூலமும் உரையும் பிலவங்கஹு வைகாசிமீ 28வ கும்பகோணம் அ. கிருஷ்ணசாமி நாயக்கனுல் எழுதி நிறைவேறப் பெற்றது. திருச்சிற்றம்பலம் ' என்ற குறிப்பு காணப்பெறுகிறது.

சுவடியில் ஆண்டு இன்னதென்று குறிக்காமல் இடம் விடப் பெற்றிருத்தலால், அச்சுவடியும் பிறிதொரு சுவடியைப் பார்த்து எழுதப்பெற்றதே என்பதும், அதனில் எக்காரணத்தினுலோ ஆண்டு எழுதப்பெற்ற இடம் சிதிலமாகி விட்டது என்பதும், பிரதி செய்தவர் கொண்டப்ப உபாத்தியாயர் என்பவரென்பதும், அவர் பிரதி செய்த காலமே சுவடியிற் காணப்பெறுவதென்பதும், இவ்வுரை, திருவள்ளுவருரை என்ற பெயருடன் எழுந்து, பிரதி செய்தவர் காலத்துக்குமுன்பே புலவர்களால் போற்றப்பெற்று வந்தது என்பதும் தெளிவாகின்றன.

இவ்வுரையின் ஆசிரியரைப் பற்றி யாதொன்றும் தெரிந்து கொள்ள இயலவில்லை. இவர் பெரும்பாலும் பரிமேலழகர் உரையையே பின்பற்றுகின்ருர். எனினும் அதன் உரைப் பகுதியைமட்டுமே இவர் ஏற்று, அதனைத் தெளிவுபடப் பொழிப் புரையாக எளிய முறையில் எழுதியது இவர் செய்த உதவியாகும். பரிமேலழகர் உரையில் நுட்பமாக அமைந்துள்ள பகுதிகளைத் தெளிவுபடுத்தியும், மிகச்சில இடங்களில் தாமே வேறுபட உரை எழுதியும் இவர் தம் உரையை யாத்துள்ளார். பல இடங்களில் இவர் கொண்ட மூலபாடங்கள் அச்சுப் பிரதிகளிற் காணும் பாடங் களுக்கு மாறுபட்டுள்ளன. இப்பாடங்களின் பொருத்தங்களையும் இவர் காட்டும் உரைகளின் நேர்மைகளையும் அறிஞர்கள் ஆராய் வர்களாக.

இப்பதிப்பிற்கும் பரிமேலழகர் உரைப்பதிப்புக்களாக வெளி வந்துள்ள பற்பல பதிப்புக்களுக்கும் உள்ள வேறுபாடுகளிற் சிலவற்றைக் கீழே தருகின்ருேம். இப்பதிப்பில் இவ்வாறு மாறுபட்ட பகுதிகளெல்லாம் தடித்த எழுத்துக்களில் அச்சிடப் பெற்றுள்ளன. பாடபேதங்களும் ஆங்காங்கே சுட்டப்பெற்றிருக் கின்றன.

(எண் : குறளெண்)

1. பரி. உரைக்கு விளக்கம் தருவன : 6, 77, 114, 185, 314, 336, 365, 462, 784, 906, 920, 927, 1029, 1058, 1178, 1220.

2. பரி. உரைக்கு மேலும் ஓர் விளக்கம் தருவன : 23, 44, 210, 223, 323, 392, 400, 46-அதி. அவ, 790, 909, 999.

3. உரைச் சிறப்பு : 13, 3 , 110, 130, 229, 268, 272, 285, 377, 395, 403, அவ, 1025, 1062, 1221.

4. உரை மிகவும் அருமை வாய்ந்தது : 404, 817, 887, 947, 1021.

5. பரி. உரைக்கு மாறுபாடு : 79, 185, 402, 440, 465, 548, 603, 631; 643, 655, 706, 716, 1016, 1021, 1030, 1311.

6. பிரதிபேதம் : 116, 188, 194, 465, 548, 596, 697, 786, 799, 886, 1015, 1031.

இப்பதிப்பு வெளிவருவதற்கு இந்நூல் நிலையத்திலுள்ள பணியாளர் அனைவரும் உதவி புரிந்தனர்; அவர்களுக்கு எம் நன்றி உரியது.

இந்திய மத்திய அரசியலின் பகுதியனரான அறிவியல், பண்பாட்டியல் ஆராய்ச்சிக்குரிய அமைச்சியலார் (Ministry of Scientific Research and Cultural Affairs) இப்பதிப்பின் செலவின் பாதித் தொகையை மானியமாக அன்புடன் அருளி இம்முயற்சிக்கு ஊக்கமளித்தனர். அவர்களுடைய உதவியே இவ்வெளியீட்டுக்குக் காரணமாகும். அவர்கள்பால் இந்நிலையம் தன் ஆழ்ந்த நன்றியையும் கடப்பாட்டையும் தெரிவிக்கின்றது. சென்னை, குமரன் அச்சகத்தார் மிகக் குறுகிய காலத்தில் இதனை அச்சிட்டு உதவியதற்கு அவர்களுக்கும் எம் நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

சென்னைப் பல்கலைக் கழகப் பேராசிரியரும், திருக்குறளுக்குத் தாமே ஓர் உரை கண்டவருமான மேன்மைதங்கிய டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் இவ்வெளியீட்டுக்கு முகவுரை ஒன்றெழுதி ஆசி கூறியிருக்கின்றனர். அவர்க்கும் எம் மனமார்ந்த நன்றி உரியது.

இப்பதிப்பு வள்ளுவரைத் தமிழுலகம் அறிய ஒரு சிறு கருவியாய்ப் பயன்படுமென்று நம்புகிறோம். பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுக்குச் சில பழைய உரைச் சுவடிகள் இந்நூல் நிலையத்தில் உள்ளன. அவைகளும் நாளடைவில் வெளிவர இறைவன் அருளை வேண்டுகிறோம்.

குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.

*12—8—1961*

# பொருளடக்கம்

## அங்கவியல்

## 3. காமத்துப்பால்

### களவியல்



### கற்பியல்

## அநுபந்தங்கள்

உ

கடவுள் துணை

திருவள்ளுவ நாயனர் திருவாய் மலர்ந்தருளிய

# திருக்குறள்

மூலமும் ஓர் பழைய உரையும்

---

# 1. அறத்துப் பால்

## பாயிரம்

### 1. கடவுள் வாழ்த்து

1. அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

*என்பது - கடவுள் வாழ்த்து.*

*அஃதாவது வழிபடு கடவுளென்றும்*, பொதுக் கடவுளென்றும் *இரண்டு வகை.* இது, எல்லா உலகுக்கும் எல்லாச் சமயத்துக்கும் பொதுக் கடவுளைக் கூறியது. *வாழ்த்தென்பது*, கடவுள் மகிமை கூறி வணக்கஞ் செய்தல்.

*அகரமாகிய முதலையுடைய எழுத்துக்களெல்லாம்; அதுபோல ஆதி பகவனாகிய முதலை யுடைத்து உலகம்.*

*உலகமாவது*, பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் சூரியன் சந்திரன் காலம் உயிர்களெல்லாம் எனக் கொள்க. *அகரமானது*, நாதமாக நின்று எல்லா எழுத்துக்களையும் தோற்றுவிக்குமாறு போலக் கடவுள் தான் முதலாக நின்று ஏல்லா உலகமுந் தோற்றுவிக்கும் எனக் கொள்க. *1*

2. கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றா டொழாஅ ரெனின்.

*எல்லா நூல்களையுங் கற்ற அக் கல்வியறிவினுைய பயன் யாது, தூய அறிவை உடையவன் நல்ல பாதங்களைத் தொழா தொழிவாராயின்,*

கொல்லென்பது அசைநிலை. கல்வியினற் பூசனை செய்ய வேண்டு மெனக் கொள்க. 2

3. மலர்மிசை யேகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

உயிர்களுடைய இதய கமலத்திற் சென்றவனுடைய மாட்சிமைப்பட்ட பாதங்களைச் சேர்ந்தார். எல்லா உலகுக்கும் மேலாகிய மோட்ச வீட்டுலகின்கண் அழிவில்லாமல் வாழ்வார்.

எல்லா மகிமையையு முடைய பாதம் நினைக்கு முன்னே இதய மலரின் மேல் வருவான் எனவுங் கொள்க. சேர்தல் இடைவிடாமல் நினைத்தல்.

4. வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.

ஒரு பொருளை வேண்டுதலும் ஒரு பொருளை வேண்டாமையு மாகிய விருப்பும் வெறுப்பு மில்லாதவன் பாதங்களைச் சேர்ந்தார்க்கு எக்காலத்தும் பிறவித் துன்பமில்லை.

வேண்டுதலும் வேண்டாமையும் வ..................மக் குண மில்லாதவனெனக் கொள்க. அவனடி சேர்ந்தவர்க்கு எவ்விடத்தும் எக்காலத்தும் துன்பமில்லை யென்க. 4

5. இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

பிறவி மயக்கத்துக்கு ஏதுவாகிய இன்பத் துன்பங்களை யுண்டாக்கும் நல்வினையுந் தீவினையு மாகிய விரண்டு வினையுஞ் சேராமல் நீங்கும், இறைவனுடைய மெய்ம்மை சேர்ந்த புகழை விரும்பினரிடத்து.

மற்றப் புகழ் பொருள் சேர்ந்த புகழல்ல, இறைவன் புகழே பொருள் சேர்ந்த புகழெனக் கொள்க, மோட்சத்துக்கு நல்வினையுந் தீவினையுமாகா வாதலால் இருவினையுஞ் சேராவென்க. புரிதல் - விரும்புதல். எப்போதும் இறைவன் புகழை விரும்பிச் சொல்லுதல் எனக் கொள்க. 5

6. பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

மெய் வாய் கண் மூக்குச் செவிகளென்னும் பொறிகள் வழியாக வுடைய ஐந்தவாவினையும் விட்டு நீங்கின கடவுளுடைய மெய்யான

ஒழுக்க நெறியின்கண் வழுவாது நின்றார் பிறவித்துன்பமில்லாமல் எக்காலத்தும் ஒரு தன்மையராய் வாழ்வார்.

ஒழுக்க நெறி, அவன் சொன்ன வேதாகமப்படி நடத்தல். எல்லார்க்கும் ஐந்தவாவுண்டு; கடவுளனுக்கு ஐந்து அவாவில்லை யெனக் கொள்க. இவை ஆறு பாட்டும் இறைவனை நினைத்தலும் வாழ்த்தலும், அவன் நெறியின்கண் நிற்றலுமுடையார் வீடு பெறுவர் என்றலும் கூறுவன.

**7. தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால்**
**மனக்கவலை மாற்ற லரிது.**

ஒரு காரணத்தினாலுந் தனக்கு நிகரில்லாதவனுடைய திருவடிகளைச் சேர்ந்தவர்க் கல்லது மற்றவர்க்கு மனக்கவலையை நீக்கிக் கொள்ளப்படாது. 7

**8. அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லால்**
**பிறவாழி நீந்த லரிது.**

தருமக் கடலாகிய அந்தணனுடைய திருவடியாகிய தெப்பத்தைச் சேர்ந்தவர்க் கல்லது, பிறவிக் கடலை நீந்திக் கரையேறுதல் அரிது.

கடவுளுக்குத் தருமமே வடிவாதலின் அறவாழி என்றார். தரும சக்கர மென்றுமாம்; அந்தணன் என்பது கடவுள்; அவனுடைய திருவடித் தெப்பத்தைச் சேர்ந்தவர், பிறவிக் கடலைக் கடப்பர்; மற்றவர் பிறவிக் கடலுள் அழுந்துவர் என்க. 8

[குறிப்பு: பிறவாழி; பிறவு ஆழி, எனப் பிரித்துப் பொருள் கொள்ளப் பெற்றது].

**9. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்**
**தாளை வணங்காத் தலை.**

மெய், வாய், கண், மூக்குச் செவி என்னும் பொறிகளுக்கேற்ற செயலில்லாத சித்திரப் பாவை, மரப்பாவை, கற்பாவைகளாகிய (வற்றிற்குப்) பொறிகளுக்குண்டாகிய குணமுமில்லை; (போன்ற); எட்டு வகைப்பட்ட குணங்களையுடைய திருவடிகளை வணங்காத் தலைகள்.

பொறிகளுக்குக் குணம் பிறர்க்கு விருப்பமுள (வாதல்); வணங்காத் தலைக்கு அக்குணமுமில்லை எனக் கொள்க. எண் குணத்தானுவது: பயமின்மை. பிறவியின்மை, பற்றின்மை, பேரின்மை,

உவமையின்மை; ஒரு வினையின்மை, குறைவில் அறிவுடைமை, கோத்திர மின்மை. *இறைவனிடத்து எண்குணமிவை என்பதனால் அறிக.* 9

**10. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்.**

*இறைவன் திருவடியென்னும் தெப்பத்தைச் சேர்ந்தார் பிறவியாகிய கடலை நீந்துவர். திருவடியாகிய தெப்பத்தைச் சேராதார் பிறவிக் கடலை நீந்த மாட்டார்; அழுந்திக் கிடப்பார்.*

*சேர்ந்தவர் நீந்துவர்; சேராதார் நீந்தா ரென்க. இவை நான்கு பாட்டும் இறைவனடி சேராதவர் குற்றங் கூறுவன.* 10

கடவுள் வாழ்த்து முற்றும்.

---

## 2. வான் சிறப்பு

*அஃதாவது, மழையினது சிறப்புக் கூறியது. அக்கடவுளாணையான் வந்து பெய்யும் மழையினது சிறப்பெனக் கொள்க.*

**11. வானின் றுலகம் வழங்கி வருதலால்
தானமிர்த மென்றுணரற் பாற்று.**

*மழை இடையறாது நிற்ப உலகம் நிலைபெற்று வருதலால், அம்மழை உலகத்திற்கு அமிர்தமென்று அறியும் பான்மை உடைத்து.*

மழை பெய்யாதாகில் உலகத்துள்ள உயிர்களிறந்துபோம். மழை பெய்யின் உலகத்து உயிர்கள் எக்காலமும் உளவாம் ஆதலால், அமிர்த மென்றறிய வேண்டும் எனக் கொள்க. *அமிர்தம் உண்டார்க்குச் சாவில்லை. மழை உண்டு உலகம் நிலைபெற்று வருதலால் அமிர்தமென்றார் எனக் கொள்க.* 1

[குறிப்பு: *உணரற் பாற்று என்பது அச்சுப் பதிப்புக்களிற் காணும் பாடம்.*]

**12. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை.**

*உண்பார்க்கு நெல் முதலாகிய சகல புசிப்புக்களையும் உண்டாக்கி, அப்புசிப்புக்களை உண்பார்க்குத் தானும் ஒரு புசிப்பாகி,* நிற்பதற்குப் பெய்யும் *மழை.*

சகல புசிப்புக்களையு முண்டாக்கி, அதனைக் கழுவுதற்குஞ் சமைப்ப தற்கும் தானிற்ப, அதனை உண்பார்க்கு உடல் முதலியன சுசி செய்யுந்தான் கலந்தும், உடலினின்றும் தாகத்துக்குத் தண்ணீராகத் தானின்றும், இவ்வாறு உயிர்களை வளர்க்குமென மழையினது சிறப்புக் கூறியது. 2

**13. விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்**
**துண்ணின் றுடற்றும் பசி.**

மழை வேண்டுங் காலத்து நின்று பெய்யாது பொய்க்கு மாகின், கடல் சூழ்ந்த உலகத்தின்கண் நிலைபெற்று உயிர்களை வருத்தும் பசி.

உடலினின்று வருத்தும் பசி யென்றுமாம். கடலிலிருந்தும் அதனாற் பயனில்லை; அக்கடல் நீரை எடுத்துவரப்போக்கி மழை பெய்யா தாகிவிடின் எனக் கொள்க. 3

**14. ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்**
**வாரி வளங்குன்றிக் கால்.**

உழவர் ஏர் கட்டி உழுந் தொழிலைச் செய்யார், மழை என்னும் புனல் பொழியுங் காலத்து வழங்குதல் குன்றியவிடத்து.

வாரி - வருவாய். வளம் - வழங்குதல். குன்றியக் காலெனக் கொள்க. 4

**15. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே**
**எடுப்பதூஉ மெல்லா மழை.**

பூமியில் வாழுமுயிர்களை மழை பெய்யாமற் கெடுப்பதும், அவ்வாறு கெட்டார்க்குத் துணையாய் மழை பெய்து முன் கெடுத்ததுபோல எடுப்பதுவும், இவையெல்லாம் வல்லது மழை.

ஆங்கென்பது அப்படியெனக் கொள்க. 5

**16. விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே**
**பசும்புற் றலைகாண் பரிது.**

மேகத்தின் துளி வீழிற் காண்பதல்லது, துளி வீழாதாயின், பசும்புல்லினது நுனியுங் காண்பது அரிது.

மற்று ஆங்கு என்பன வினைமாற்று. பசும்புல் என்பது, பனையினது கள்ளுங் காண்பதரிது என்றுமாம். 6

**17. நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்.**

*நெடிய அளவில்லாத கடலுந் தன் குணங் குறையும்; அக் கடலையுண்டு குறைத்து அக்கடலிற் பெய்யாது விடுமாயின்.*

*கடலுங் குணங் கெடுதல், நீர்வாழு முயிர்கள் இறத்தலும், பிறவாமையும், முத்து முதலாயின படாமையும் எனக் கொள்க. தடிந் தெழிலி யென்பது மின்னி யென்றுமாம். நெடுங்கடல் குறைபட முகந்தது மேகமென்று அறிக.* 7

**18. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.**

*தேவர்க்கும் இவ்வுலகின்கண் மக்களாற் செய்யப்படுந் திருநாளும் பூசையும் நடவா, மழை பெய்யாதாயின்.* 8

**19. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.**

*அகன்ற உலகின்கண் தானங் கொடுத்தலும் தவஞ் செய்தலுமாகிய இரண்டறமுமுண்டாகா மழை பெய்யாதாயின்.* 9

**20. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.**

*நீரையின்றி உலகும் விளைய மாட்டாது; ஆதலால் யார்யார்க்கும் உலக வியல்பு நடவாது. அந்நீரு மழையையின்றி இடையறுது ஒழுக மாட்டாது.*

*மழையில்லாமல் நீரில்லை; நீரில்லாமல் விளைவில்லை; விளைவில்லாமல் உலக வியல்பில்லை யெனக் கொள்க.* 10

வான் சிறப்பு முற்றும்,

---

## 3. நீத்தார் பெருமை

*அஃதாவது முழுவதும் விட்டு நீங்கின துறவறத்தை யுடைய பெரியோரது பெருமை.*

**21. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.**

தமக்குரிய ஒழுக்கத்தின் கண்ணே நின்று, சகலமும் விட்டு நீங்கின துறவறத்தை யுடையவர் பெருமையை விழுமிய பொருள்கள் பலவற்றினுள்ளும் இதுவே விழுமிதென்று விரும்பும் நூல்களது துணிவு.

ஒழுக்கம், தத்தம் வர்ணுசாரத்துக் கேற்ற ஒழுக்கம். அவர் பெருமையே பெருமைக்குளெல்லாம் பெரிய பெருமை, என்று சாத்திரங்களெல்லாம் துணிந்து சொல்லுமெனக் கொள்க. 1

22. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
இறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.

இருவகைப் பற்றினையும் விட்டு நீங்கினரது பெருமைக்கு அளவில்லை. அது எப்படி என்னில், இவ்வுலகத்திற் பிறந்திறந்தார்க்கு அளவுண்டாயின், அவர் பெருமைக்கும் அளவுண்டு.

இருவகைப் பற்று, உடற்பற்றும் பொருட்பற்றும் எனக் கொள்க. 2

23. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

பிறப்பு, மோட்சமென்னும் இரண்டினது துன்பங்களை ஆராய்ந்து பிறப்பறுக்க வேண்டி, இப்பிறப்பின் துறவறத்தைப் பூண்டாரது பெருமையே உலகின்கண் உயர்ந்தது.

இருமை யென்பது, இம்மை மறுமை என்றுமாம். 3

24. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து.

அறிவென்னும் அங்குசத்தினலே, சத்தப் பரிச ரூப ரச கந்த மென்னும் ஐந்து யானைகளையும், ஐம்பொறியின் வழிச் செல்லாமற் காப்பான், எல்லா நிலத்தினும் மிக்கதென்று சொல்லப்படும் வீடு பேறென்னும் நிலத்திற்கு ஓர் விதையாம்.

வீடு பேறென்னும் நிலத்தில் முளைத்தலால் வித்தெனக் கொள்க. 4

[குறிப்பு: 'வைப்பிற்கோர்' என்பது அச்சிட்ட பதிப்புக்களிற் காணப்படும் பாடம்].

25. ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பி லார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.

சத்த, பரிச, ரூப, ரச, கந்த மென்னும் ஐந்தினையும் அடக்கினனது வலிய பெருமைக்குச் சாட்சி யாரென்னில், அகன்ற வானத்துத் தேவர்களுக்கெல்லாம் இறைவனாகிய இந்திரனே போதுஞ் சாட்சிக்கு.

ஐந்து மடக்கிய கௌதமருடைய சாப வலிமையும், அடக்கமாட்டாத இந்திரன் எளிமையும் அறிந்து கொள்க. 5

[குறிப்பு : *விசும்புளார் கோமான் என்பது, அச்சுப்பதிப்புக்களிற் காணும் பாடம்*].

**26. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்**
**செயற்கரிய செய்கலா தார்.**

*ஒத்த பிறப்பினராய மக்களுட் செய்தற்கு அரியவற்றைச் செய்வார் பெரியராவார். எளியவற்றைச் செய்து அரியவற்றைச் செய்ய மாட்டார் சிறியராவார்.*

எளியன இல்லறம்; அரியன துறவறம்; இல்லறத்தும் அரியன வுள; துறவறத்தும் அரியன வுள. அவை தெரிந்து செய்யிற் பெரியராவர் என்க. இது துறவறத்தின் எளியனவும் அரியனவுங் கூறியது. 6

**27. சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்**
**வகைதெரிவான் கட்டே யுலகு.**

*சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னுஞ் சத்த, பரிச, ரூப, ரச, கந்தம் ஆகிய பஞ்ச இந்திரிய வகைத் தோற்றமும் ஒடுக்கமும், அதன் மூலப் பகுதியும், விகுதியும், அதன் விரிவாகிய தத்துவங்களும், ஆராய்ந்தறியின், அதுவே உலகமாதலால், அதனை ஆராய்ந்து, அதன் வகை தெரிவான் கண்ணே உலகு.*

ஆராய்வானுக்கு உலகு தோன்றும் எனக் கொள்க. 7

**28. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும்.**

*நிறைந்த மொழியினையுடைய துறந்தாரது பெருமை பூமியின் கண் அவர் சொல்லும் மந்திர மொழிகளே கண்காணக் காட்டும்.*

ஒருவருக்கு மறை நிற்கும் செல்வமும் கேடும், அத்துறவின் கருணையுஞ் சாபமுங் காட்டுமெனக் கொள்க. *மறை மொழி - மந்திரமும் அருளும், சாபமும்* என்க. 8

29. குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.

*துறவு, மெய்யுணர்வு, அவாவின்மை முதலிய நற்குணங்களாகிய மலை முடிவின்கண் நின்ற பெரியோரது வெகுளியை ஒருவன் தன்கண் வாராமல் ஒரு கணப்பொழுதாகிலும் அவன் காத்தல் அரிது.*

எல்லாக் குணத்தையுங் கீழ்ப்படுத்தித் தாம் மேலேயேறி நின்றவர் கோபத்தைச் சகரர் குமாரர் காக்கப் படாமற் சாம்பலாகியவாறு காண்க. 9

30. அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்.

*எல்லா உயிர்கள் மேலுஞ் செவ்விய தண்ணளி சுரந்து கருணை பூண்டு நடத்தலான், அந்தணரென்று சொல்லப்படுவார் துறவறத்தி னின்றோராம்.*

அந்தணர் - துறவறத்தை யுடையோர். *எல்லா உயிர்கள்மேலும் அருள் சுரந்திருத்தலான் எனக் கொள்க.* 10

நீத்தார் பெருமை முற்றும்.

---

## 4. அறன் வலி யுறுத்தல்

*அஃதாவது, தருமத்தினது வலிமை தெரியச் சொல்கின்றது.*

31. சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு.

*மோட்சமுந் தரும்; சுவர்க்க முதலாய செல்வத்தையும் தரும்; ஆதலான் உயிர்க்கு அறத்தின் மிக்க செல்வம் யாது?*

*பெறும் பேறுகளுக்குட் சிறப்பாகிய பேறு வீடு பேறு; ஆதலாற் சிறப்பென்பது மோட்ச மெனக் கொள்க.* ஊங்கு என்றதால், இப்பிறப்பில் செய்யில், மறுமைக்குப் பெறும் பேருக வீடு பேறு தருமென்க. ஆதலால், பொருள் தருமென்றது, பொருளழியும், தருமம் அழியாது நின்று பேறு தருமெனக் கொள்க. 1

[குறிப்பு : *ஊங்கு - மிகை.*]

**32. அறத்தினூங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.**

*ஒருவனுக்கு அறஞ் செய்தலின் மேற்பட்ட செல்வமுமில்லை; (அதனை) மயக்கத்தான் மறத்தலின் மேற்பட்ட கேடுமில்லை.*

பொருளிருந்தும் தருமஞ் செய்யாதொழியிற் பொருளும் அழியும்; இம்மை மறுமைக்கும் கேடு வரும். *கேடு வருதல்; தருமஞ் செய்யா தொழியில் தரித்திரம் வருமென்றது.* 2

**33. ஒல்லும் வகையா லறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்.**

*தமக்கியலு மாத்திரம் அறமாகிய நல்வினையை ஒழியாதே தருமங் கிடைக்கு மிடத்தெல்லாம் செய்க.*

மனம், வாக்கு, காயம், இடம், பொருள், ஏவல் இடத்தெல்லாம் ஒழியாமல் அறஞ் செய்க எனக் கொள்க. 3

**34. மனத்துக்கண் மாசில னாத லனைத்தறன்
ஆகுதல் நீர்மை பிற.**

*அறஞ் செய்வான் தன் மனத்தின் மாசில்லாமலிருப்ப, அவ்வளவே அறனாவது. அதுவில்லாமல், சொல்லும் வேடமும் அற மெனப்படா; அவை* வேறுபடும் நீர்மை யுடையது.

ஆகுதல் நீர்மை பிற வென்பது, சொல்லும் வேடமுமப்படி அறமாகாது வேருமெனக் கொள்க. மனத்தின் மாசு வைத்து அறஞ் செய்வது அறமெனப் படாது என்றாரென்க. 4

[குறிப்பு: ஆகுல நீர *என்பது அச்சுப்பதிப்புகளிற் காணும் பாடம்.*]

**35. அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ னான்கும்
இழுக்கா வியன்ற தறம்.**

*அறம் செய்யுமிடத்து மனத்து அழுக்கும், கொடுக்கும் பொருள்மேல் அவாவும், கொடுக்கும்போது கோபமும், இன்னாச் சொல்லும் இந்நான்கும் கூடாவியல்பினை யுடையது அறமாவது.*

*அழுக்காறு* - மனத்தழுக்கு; *அவா* - கொடுத்த பொருள்மேலாசை; *வெகுளி* - *கோபம்; இன்னாச்சொல்* - வசைச்சொல் எனக் கொள்க. 5

**36. அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை.**

*'யாமிப்போது இளமை; முதுமையிற் செய்தும்'* எனக் *கருதாது அறத்தினை நாடோறுஞ் செய்க.* அவ்வாறு செய்த அறம் இவ்வுடம்பினின்று உயிர் போங்காலத்துத் தான் அழியாமல் துணையாய் வரும்.

*அறஞ் செய்த உடம்பழிய அறம் அழியாது* எனக் கொள்க.

[குறிப்பு: செய்க *என்பது அச்சுப் பிரதிகளிற் காணும் பாடம்.*]

**37. அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை.**

அறஞ் செய்யின் (அது) தன்னை வந்தடையுமோ அடையாதோ என்று ஐயப்பட வேண்டா; *சிவிகையைக் காவுவானையும் ஏறிச் செலுத்து வானையும் அறிந்து கொள்க.*

பாவமும் புண்ணியமுங் கண்ணினுற் கண்டு கொள்க. 7

**38. வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.**

*அறஞ் செய்யாது ஒயும் நாளில்லாமல் நாடோறும்,* நல்லறம் *ஒருவன் செய்யுமாயின்,* அச் செயல் அவன் சுவர்க்கத்திலிருந்து வாழும் நாள்களைப் போகாமல் வழியை யடைக்கும் கற்கதவாம்.

*நாடோறும் அறம் செய்வான்* எக்காலமும் *போக பூமியி லிருந்து வாழ்வான் எனக் கொள்க.* அறஞ் செய்வான் நல்வினையே அனுபவிப்பான்; தீவினை அனுபவிக்க வரும் வழியை அடைக்குங் கல்லாம் அவ் வறம் என்க; இதனால் அறமே மொட்சம் என அறிக. 8

**39. அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில.**

அறத்தினாலே வருவதே இன்பம்; அவ்வற மல்லாத மறத்தினாலே வரும் துன்ப மெல்லாம்; அத் துன்பமும் புகழ்பட வாராது, வசைபட வரும்.

*அறம்:* புண்ணியம்; *மறம்:* பாவம். புண்ணியத்தினாலே வருமின்ப மெல்லாம்; பாவத்தினாலே வருந் துன்ப மெல்லாம்; *அதற்குப் புகழு மில்லை என்றறிக.* 9

40. செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி.

ஒருவனுக்குச் செய்யும் பான்மை யாதெனில் நல்வினையே; ஒருவனுக்கு ஒழியும் பான்மை யாதெனில், தீவினையாம்.

செய்யத் தொடங்குவது புண்ணியம்; செய்யாமலிருப்பது பாவம் எனக் கொள்க. எச்செயல் செய்யினும் பாவச் செயலொழிக என்றது. 10

அறன் வலியுறுத்தல் முற்றும்.

பாயிர வியல் முற்றும்.

---

## இல்லற வியல்

### 5. இல் வாழ்க்கை

அஃதாவது, இல்லாளோடு கூடி வாழும் வாழ்க்கை அறஞ் செய்யும் பொருட்டெனக் கொள்க.

41. இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை.

இல்லறத்திேனாடு கூடி வாழ்வானென்று சொல்லப்படுவான் இயல்புடைய மூவருக்கும் அவர் செய்யும் அந் நல்லொழுக்க வழிக்கும் நின்ற துணையாம்.

இயல்புடைய மூவர்: ஓதலு மொழுக்கமும் விரதங் காத்தலு முடைய பிரமசாரி; இல்லை விட்டு வனத்தின்கட் சென்று மனையாள் தொடாமல் வழிபடத் தவஞ் செய்யும் வானப்பிரத்தன்; முழுவதுந் துறந்த சந்நியாசி யெனக் கொள்க. இவர் மூவர்க்கும் இல்லற முடையவன் துணை என்க. 1

42. துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கும்
இல்வாழ்வா னென்பான் றுணை.

அரசனால், நாட்டாரால், ஊராரால் விலக்கப்பட்டவர்க்கும், இட்டுப் பிறவாமல் தரித்திரப்பட்டிரப்பவர்க்கும், அனுதைப் பிரேதமாக இறந்தவர்க்கும் இல்வாழ்வானென்று சொல்லப்படுபவனே துணையாம்,

பிராயச்சித்தப்பட்டவரைப் பாவ மொழிய நிறுத்தலும், இரப்பவர்க் குபகாரஞ் செய்தலும், இறந்தார்க்குப் பிதிர்க்கடன் செய்தலும் இல்வாழ்வான். என்க. 2

[குறிப்பு : துவ்வாதவர்க்கும் என்பது அச்சுப் பதிப்பிற் காணும் பாடம்.]

**43. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லானென்றாங்**
**கைம்புலத்தா றோம்ப றலை.**

பிதிர்க்கள், தேவர், விருந்தினர், சுற்றத்தார், தானென்று சொல்லப்பட்ட ஐந்திடத்துஞ் செய்யும் அறநெறியை வழுவாமற் செய்யின் அதுவே தலைமையான தருமமென்று இல்வாழ்வானுக்குச் சொல்வர்.

தென்புலத்தார் - பிதிர்க்கள். தெய்வம் - தான் வழிபடும் தெய்வம். விருந்து - தன்னை நாடிப் புதிதாய் வந்தவர். சுற்றத்தார் - மனைவி மக்க ளுறவின் முறையார். எல்லா அறங்களும் தானிருந்து செய்ய வேண்டு மாதலின், தானுக ஐந்திடமெனக் கொள்க. ஆறுவது பங்கு, அரசனுக்கு எனக் கொள்க. 3

**44. பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயில் வாழ்க்கை**
**வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.**

பாவம் வராமல் அஞ்சித் தேடிய பொருளைப் பிரமசாரி, வானப் பிரத்தன், சந்நியாசி, துறந்தார், துவ்வாதவர், இறந்தார், தென்புலத்தார், தெய்வம், விருந்து, சுற்றத்தார் என்னும் பதின்மருக்கும் பகுத்திட்டுப் பின்பு தானுண்டானுகில் அவன் இல் வாழ்க்கையிடத்து எந் நாளும் ஒரு குறையும் இல்லை.

பாவத்தால் வந்த பொருளை அறஞ் செய்யின், பொருளுடையார் மேலே புண்ணியமேறத் தன்மேல் பாவமேறும் ஆதலான், பழியஞ்சி யென்றார். பாத்தூண் - பகுத்துண்ணும் ஊண். 4

[குறிப்பு : உடைத்தாயின் என்பது, அச்சுப் பிரதியிற் காணும் பாடம்.]

**45. அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கைப்**
**பண்பும் பயனு மது.**

ஒருவன் இல்வாழ்க்கை, துணையாகிய மனையாள்மே லன்பும், பிறர்க்குப் பகுத்துண்டலாகிய அறத்தினையும் உடைத்தாயின், இல்வாழ்க்கைப் பண்பும் அதனுல் வரும் பயனும் அதுவாம்.

அதுவென்பது, அப்படித்தா னிருப்ப தெனக் கொள்க. மனைவிமேல் அன்பில்லை யாயின் அறஞ் செய்வதற்கு இயலாது என்க. 5

**46. அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றில்**
**போஒய்ப் பெறுவ தெவன்.**

*ஒருவன் இல்வாழ்க்கையை அறத்தின் வழியே செலுத்துவானாயின், அவன் அதற்குப் புறமாகிய வழியிலே போயென்ன பேறு பெறுவன்?*

*அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றலாவது :* எல்லார்க்கும் பகுத்திட்டுத் தானுண்ணல். *புறத்தாறு : வனத்தின்கட் சென்று தவஞ் செய்தல்.* இல்லறத்தில் புண்ணியங் கிடைக்கும் : துறவறத்தில் புண்ணியங் கிடையாது *என்றவாறு.* 6

**47. இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்**
**முயல்வாரு ளெல்லாந் தலை.**

*இல்வாழ்க்கையினிருந்து, அதற்கேற்ற இயல்போடு கூடி வாழ்பவன் தவஞ் செய்ய முயல்வாருளெல்லா மிக்கவன் ஆவான்.*

தவஞ் செய்வாரில் அதிகம் இல்லறஞ் செய்வான் எனக்கொள்க. இயல்பு : இடம் பொருள் ஏவலுடைத்தாய் அறஞ் செய்வது. 7

**48. ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை**
**நோற்பாரி னோன்மை யுடைத்து.**

*தவஞ் செய்வாரையும் தவவொழுக்கத்தின் நடக்கச் செய்வித்து, தானும் தன்னில்லறத்தில் தவறில்லாது அறஞ் செய்து வாழும் வாழ்க்கை, தவஞ் செய்வார்* வலியிலும் வலியுடைத்து. 8

**49. அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்**
**பிறன்பழிப்ப தில்லாயி னன்று.**

*இல்லறம் துறவறம் என்னும் இரண்டறங்களின் இல்லறமே அறனென்று சொல்லப்படுவது. துறவறமோ வென்னில், அதுவும் பிறரால் பழிப்பில்லாயின் நன்று.*

இல்லறத்திற்குப் பழிப்பு வரினுங் குற்றமில்லை, துறவறத்திற்குப் பழிப்புவரிற் குற்றம் நீங்காது என்றது. 9

50. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்.

இல்லறத்தோடு கூடிப் பெருஞ் செல்வத்தோடும் பேரறத் தோடும் வாழுமியல் புடையவன் வையத்தானே யெனினும், வான கத்தின் வாழும் தேவருள் ஒருவனாக வைத்து நன்கு மதிக்கப் படுவான். 10

இல் வாழ்க்கை முற்றும்.

---

## 6. வாழ்க்கைத் துணை நலம்

அஃதாவது, இல்வாழ்க்கைக்குத் துணையாகிய இல்லாளது நலங் கூறுகின்றது.

51. மனைத்தக்க மாண்புடை யளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

மனை யறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கையுடையளாய்த் தன்னைக் கொண்டவனுடைய பொருள் வரலாற்றுக்குத் தக்க வாழ்க்கை யுடையாள் இல் வாழ்க்கைக்குத் துணையாம்.

நற்குணமாவது, துறவறத்தை யுடையார்க்கும், விருந்திற்கும், வறியார்க்கும், அறிந்து செய்தல்; நற்செய்கையாவது, மனை வாழ்க்கைக்கு வேண்டும் பொருளறிந்து சேர்த்தல், அடிசில் நன்கு படச் சமைத்தல், முதலுக்குத் தக்க செலவு செய்தல் எனக் கொள்க. 1

• 52. மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினு மில்.

மனையறத்துக்குத் தக்க நற்குண நற்செய்கை ஒருவன் இல்லா ளிடத்து இல்லையாயின் அவ்வில்வாழ்க்கைச் செல்வம் எத்துணை மிகுதியாயினும் வறுமையேயாம். 2

53. இல்லதெ னில்லவள் மாண்பானா லுள்ளதென்
இல்லவள் மாணாக் கடை.

ஒருவனில்லாளிடத்து நற்குண நற்செய்கை இருக்கின் அவ் வில்லகத்து இல்லாப் பொருள் யாதொன்றுமில்லை; எல்லாப்

பொருளுமுண்டு; இல்லாளிடத்து நற்குண நற்செய்கை யில்லை யாயின் அவ்வில்லகத்து எல்லாப் பொருளும் இருந்தாலும் யாதொன்று மில்லா வறுமை மனையாம்.

மாண்பாவது அமைதி யெனக் கொள்க. 3

[குறிப்பு: மாண்பானல் என்பது அச்சுப் பிரதியிற் காணும் பாடம்].

**54. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்**
**திண்மையுண் டாகப் பெறின்.**

ஒருவன் எய்தும் பொருள்களுள் மனையாளின் மேம்பட்ட பொருள் யாதொன்று மில்லை; அவளே மேம்பட்ட பொருள்; அவளிடத்துக் கற்பென்னுங் கலங்கா நிலைமை யுண்டாகப் பெறின். 4

**55. தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யு மழை.**

பிற தெய்வம் தொழாள்; தன் தெய்வமாகிய கொழுநனைத் தொழுதெழுவாள்; (அவள்) பெய்யெனச் சொல்லப் பெய்யுமழை.

தெய்வங்களும் கற்புடையாளுக்கு ஏவல் செய்யும் எனக் கொள்க. 5

**56 தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற**
**சொற்காத்துச் சோர்விலாள் பெண்.**

கற்பினின்றும் வழுவாமல் தன்னைக் காத்துத் தன்னைக் கொண்டானை உண்டி முதலியவற்றான் பேணிக் கணவனிடத்தும் தன்னிடத்தும் அமைந்த புகழ் நீங்காமற் காத்து, பிறர் சொல்லும் வசைச் சொல் வாராமற் காத்து, நற்குண நற்செய்கையிற் சோர்வில்லாள் பெண்ணாவாள்.

சோர்வு: மறவி. 6

**57. சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்**
**நிறைகாக்குங் காப்பே தலை.**

மகளிரைக் கணவன் காக்கும் சிறைக்காவல் என்ன பயனைச் செய்யும்? அம்மகளிர் தமது நிறையாற் காக்குங் காவலே தலைமை யான காவல்.

மகளிரென்பது மனையாளெனக் கொள்க. சிறைக்காவல் மனையும் மனையிலுள்ளாருமென்க. நிறை - நெஞ்சிற் கற்பு. 7

58. பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.

தன்னைக் கொண்ட கணவனைப் பெருஞ்சிறப்புச் செய்யப்பெற்ற பெண்டிர் பின்பு பெறுவர் தேவர் வாழும் உலகத்தை.

கணவனை வழிபடும் பெண்டிர் இறந்த பின்பு தேவருலகத்து வாழ்வார் எனக் கொள்க. 8

59. புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை.

புகழை விரும்பிய இல்லாளை இல்லாதார்க்கு இல்லை, தம்மை யிகழ்ந்துரைக்கும் பகைவர் முன் ஆண் சிங்கம்போல நடக்கும் பெருமித நடை.

தகைசான்ற சொற்காவாப் பெண்டிரையுடையார்க்கு வரும் இழுக்குக் கூறியது. 9

60. மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கல நன்மக்கட் பேறு.

ஒருவர்க்கு நல்ல மங்கலமென்று சொல்லுவர் பெரியோர் நற்குண நற்செய்கையுடைய மனையாளை; அம் மங்கலத்துக்கு நல்ல ஆபரணமென்று சொல்லுவர் அவர் பெற்ற நன்மக்களை. 10

வாழ்க்கைத் துணைநலம் முற்றும்.

---

## 7. புதல்வரைப் பெறுதல்

அஃதாவது, நன்மக்களைப் பெறுதல்.

61. பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

ஒருவன் பெறும் பேறுகளுள் அறிவறிந்த பிள்ளைப் பேறல்லது, யாமறிந்த பேறுகளுள் நிகரான பேறு வேறில்லை எனக் கொள்க.

மகன் வீடுபேறு கொடுக்குமென்பது கருத்து. 1

**62. எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.**

*எழுவகைப் பிறப்பினும் துன்பத்துக் கேதுவான தீவினை வந்தடையாது, பிறரால் பழிக்கப்படாத நற்குணப் பண்புடைய புதல்வரைப் பெறுவனாயின்.*

*எழுவகைப் பிறப்பாவன : தேவர் பதினொன்று ; மானிடம் ஒன்பது, நாற்கால் விலங்கு பத்து, பறவை பத்து, நீர் வாழ்வன பத்து, தாவரம் பத்தொன்பது ; ஊர்வன பதினைந்து.* 2

**63. தம்பொரு ளென்பர்தம் மக்க ளவர்பொருள்
தந்தம் வினையான் வரும்.**

*தம் புதல்வரைத் தம் பொருளென்று சொல்வர் பெரியோர் ; புதல்வர் செய்த பொருள், மாதா பிதாவை நோக்கிச் செய்யும் நல்வினையினால் நினைத்தவை யெல்லாம் வரும்.* 3

[குறிப்பு : என்ப என்பது அச்சுப் பிரதிகளில் காணும் பாடம்.]

**64. அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்.**

*அமிழ்தினும் இனிமையுடைத்துத் தம் மக்கள் சிறிய கையினால் அளாவிய கூழ்.*

*‘இட்டுந் தொட்டுஞ் சிதறியுங் குதறியுங்
கவ்வியுங் கறித்து முதைத்து மிறைந்து
நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்துச்
சிறுகை யளாவிய தேவ ரமுதம்’ என்பதனாலறிக.* 4

[குறிப்பு : *இங்குக் காட்டிய மேற்கோள் புறநானூறு 188-ஆம் செய்யுளில் பின் வருமாறு காண்கிறது.*

*‘குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்தும்’* (188 3—5)]

**65. மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.**

*தம்மக்கள் தம்மைத் தழுவுதல் உடலுக் கின்பம்; மற்றும் அப் புதல்வர் மழலைச் சொல்லைக் கேட்டல் செவிக்கின்பமாம்.* 5

**66. குழலினி தியாழினி தென்பதம் மக்கள்**
**மழலைச்சொற் கேளா தவர்.**

*'குழலிசை யினிது; யாழிசை யினிது' என்று சொல்வர், தம் மக்கள் மழலைச் சொல்லைக் கேட்டு அதனின்பத்தை அறியாத மடவர்.*

**67. தந்தை மகற்காற்று நன்றி யவையத்து**
**முந்தி யிருப்பச் செயல்.**

*தகப்பன் புதல்வனுக்குச் செய்யும் நன்மையாவது, கற்றவர் கூட்டத்தின் மிக்கிருக்குமாறு கல்வியுடையனாக்குதல்.*

பொருளுடையனாக்குதலின் மிகவும் நன்று கல்வியுடையனாக்குதல். பொருளுக்குத் துன்பமுண்டு; கல்விக்குத் துன்பமில்லை எனக் கொள்க.

**68. தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க் கெல்லா மினிது.**

*தம்மக்கள் அறிவுடைமை பெரிய நிலத்து மன்னி நின்ற உயிர்கட்கெல்லாந் தம்மினிமையினும் இனிதாம்.*

தம்மக்களறிவுடைமை தமக்கினிமை யன்றிப் பிறர்க்கும் இனிமையாம் எனக் கொள்க. 8

**69. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்**
**சான்றோ னெனக்கேட்ட தாய்.**

*தான் பெற்ற போதின் மகிழ்ச்சியினும் மிகவும் மகிழ்ச்சியளாம், தன் மகனைக் கல்வி கேள்வியின் மிகுந்தவனென்று அறிவுடையோர் சொல்லக் கேட்ட தாய்.* 9

**70. மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை**
**என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.**

*தன்னைப் பெற்று வளர்த்துக் கல்வியுடையனாக்கிய தகப்பனுக்கு மகன் செய்யும் நன்றி, இவன் தகப்பன் இப்புதல்வனைப் பெறவென்ன தவஞ் செய்து வருந்தினானோவென்று சொல்லும் புகழைப் பெறுதல்.*

தந்தைக்குச் செய்யும் உபசாரத்தினும், கல்வியினும், செல்வத்தினும், தரும தானத்தினும், நல்லொழுக்கத்தினும் தன்னைக் கண்டு பிறர் சொல்லும் சொல் சிறப்புடையது எனக் கொள்க. 10

புதல்வரைப் பெறுதல் முற்றும்.

---

## 8. அன்புடைமை

*அஃதாவது*, சகல உயிர்களிடத்தும் அன்புடையனாதல்.

71. அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும்.

*அன்புக்கும் பிறரறியாமல் அடைக்குங்* கதவும் *தாழு முண்டோ? தமக்கு அன்புடையா ரிடத்துத் துன்பங்கண்டால் அன்புடையார் கண் பொழிகின்ற புல்லிய கண்ணீரே உள்ளே நின்ற அன்பினை எல்லாரும் அறிய* வெளிப்படுத்தும்.

தாழென்றதனாற் கதவுங் கொள்க. 1

72. அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு.

அன்பில்லாதாரால் பிறர்க்குபகார மில்லை; *எல்லாப் பொருளும் தமக்கே உரியர்; அன்புடையார்* பொருள் எல்லார்க்கும் உரித்து; அதுவன்றி, அன்புடையார் எலும்பும் பிறர்க்கு உரித்தாம்.

தசையுரித்தன்றி, என்புமுரித் தென்றார். *சோழன் புறவுக்குத் தசை கொடுத்ததுந்* ததீசி இந்திரனுக்கு என்பு கொடுத்ததும் *அறிந்து கொள்க.*

73. அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

*உயிருக்கு எலும்பொடு தொடர்ந்த உடம்புண்டாகிய தொடர்ச்சியினை, அன்போடு* பொருந்துதற்கு வந்ததாமென்று *சொல்லுவர் பெரியோர்.*

உடம்பினா லுபகாரம் இல்லை; அன்புண்டானால் உபகாரமுண்டு; அதனால், அன்பு தொடர்ந்த உடம்பே உயிருக்குத் தொடர்ச்சி *யெனக் கொள்க.* 3

74. அன்பீனு மார்வ முடைமை யதுவீனும்
நண்பென்னு நாடாச் சிறப்பு.

அன்பினல் பிறக்கும் ஒருவர்மேலாசை; அந்த ஆசையினல் பிறக்கும் நண்பு; அந்த நண்பினற் பிறக்கும் நாடுதற்கரிய சிறப்பு.

*அன்பினன் வரும் ஆசை; ஆசையினல் வரும் நண்பு; நண்பினல் வருஞ் சிறப்பெனக் கொள்க.* ஒருவருக் கொருவர் நண்பு வரு முறைமை கூறியது. அன்பில்லாதவர்க்கு நண்புமில்லை, சிறப்புமில்லை யென்க. நண்பு : சிநேகம்; ஒருவருக் கொருவர் உதவி. 4

75. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
இன்புற்றா ரெய்துஞ் சிறப்பு.

அன்புற்று அமர்ந்திருந்த வழக்கைப்பற்றிச் சொல்வர் *பெரியோர்; உலகத்தில் இல்வாழ்க்கை* இன்பமுற்றவர் சுவர்க்கலோகம் *பெறுவதாம்.*

*இம்மை இல்வாழ்க்கையில் அன்புற்று இருந்து வாழ்ந்தால் மறுமைக்குச் சுவர்க்கம் பெறுவர் எனக் கொள்க.* அன்பு இல்லை ஆகில் நரகில் வீழ்வர் என்க. அன்பினற் புண்ணியம் வரும். புண்ணியத்தாற் சுவர்க்கம் வரும் என்றுர். *சிறப்பு - சுவர்க்கம்.* 5

76. அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை.

*நன்மை ஆகிய அறத்திற்கே அன்பு நின்று துணையாக வேண்டும் என்பர் சிலர், அறியார்; கொடுமையாகிய மறத்திற்கும் அந்த அன்பே துணையாம்.*

*அறியாதவர்கள் அறத்திற்கு அன்பு வேண்டும் என்பர்.* அறிந்தவர் அறத்திற்கும் அன்பு வேண்டும்; கொடுமைக்கும் அன்பு வேண்டும் என்பர்; அறஞ் செய்தற்கு அன்பு வேண்டும்; கொடுமை தவிர்த்தற்கும் அன்பு வேண்டும் என்று கூறியது எனக் கொள்க. *செய்தற்கும் தவிர்தற்கும் என்க.* 6

77. என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை யறம்.

*எலும்பு இல்லாத கிருமி கிடங்களை வெயில் காய்ந்து வருத்துவது போல, அன்பு இல்லாத உயிர்களைக் காய்ந்து வருத்தும் தன்ம தேவதையாம்.*

அன்பு இல்லாதவர்களை மனிதரன்றித் தேவரும் வருத்துவர் எனக் கொள்க. 7

78. அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று.

*மனத்தின்கண் அன்பில்லாத உயிர்கள் இல்லறத்தோடு கூடி வாழ்தல்,* வலிய கற்பாறையின் கண் *வற்றலாகிய மரம் தளிர்த்தாற் போலும்.*

*வற்றல் மரந் தளிர்த்தல்,* நச்சனுல் பட்ட மரம் தளிர்த்தது போலு மென்றுமாம். 8

79. புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பில் லவர்க்கு.

*யாக்கையின் அகத் துறுப்பாகிய அன்பு இல்லாதவர்க்கு யாக்கையாகிய புறத்துறுப்பு எல்லாம் யாவர்க்கும் என்ன உபகாரத்தைச் செய்யும்? செய்யமாட்டாது.*

உடம்பகத்து அன்பு இருந்தால் உடம்பு உபகாரம் செய்யும்; அன்பு இல்லாத வெறுங்கூடு செய்யாது *என்றவாறு.* அன்பு கூடாதவழிப் பயன் இல்லை *என்க.* உறுப்பு, கை, கால் முதலியன. 9

80. அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த உடம்பு.

அன்பென உறுப்பாக நின்ற உடம்பே உயிர் நின்ற உடம்பாவது; அன்பு இல்லாதவர் உயிர் இருந்தாலும் எலும்பும் தோலும் போர்த்த உடம்பு என்னும் கூடாம்.

*உயிரிருந்தும் அன்பு இல்லையாயில் உடம்பு வெறுங் கூடாம்.* 10

அன்புடைமை முற்றும்.

---

## 9. விருந்தோம்பல்

*அஃதாவது,* புதிதாகத் தன்னை விரும்பி வந்தவர்க்கு அடிசில் முதலாயின இட்டு வேண்டியன கொடுத் தோம்பல். *ஓம்பல் - காத்தல்.*

81. இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

வனத்தின் கட் சென்று தவம் செய்யாமல், இல்லறத்திலிருந்து பொருள்களைப் போற்றி வாழுஞ் செய்கை எல்லாம், விருந்தினரைப் பேணி அவர்க்கு உபகாரம் செய்தற் பொருட்டு எனக் கொள்க.

வேளாண்மை - உபகாரம். 1

82. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

உண்ணப்படும் பொருள் அமிர்தமே எனினும் தன்னை விரும்பி வந்த விருந்தினரைப் புறமாக வைத்துத் தானுண்டல் வேண்டு முறைமை அன்று.

சாவா மருந்து, தேவ அமுதம். 2

83. வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று.

தன்னிடத்து வந்த விருந்தை நாடோறும் புரந்து அருளுவான் இல்வாழ்க்கை தரித்திரத்தால் வருந்திக் கெடுதல் இல்லையாம்.

புரத்தல்: விருந்தினரை மனமகிழ்ச்சி செய்தல். 3

84. அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்.

திருமகள் மனமகிழ்ந்து வாழ்ந்திருப்பள், முகமினியனாக நல்ல விருந்தினரைப் பேணுவான் இல்லினிடத்து.

நல் விருந்து - கல்வி, கேள்வி, ஞான, ஒழுக்கமுடைய விருந்து. 4

85. வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்.

முந்தி விருந்தினரை உண்ணச் செய்து, பின்பு விருந்திட்டு மிஞ்சி யிருந்ததனை உண்பானுடைய நிலத்துக்கு, விதையும் இட்டு விதைக்க வேண்டுமோ? சும்மா விளையும்.

மிச்சில் - மிஞ்சி இருந்தது. மிசைதல் - உண்ணல். வித்து மிடல் வேண்டுங் கொல்லோ என்பது, விருந்திடுவான் புண்ணிய விசேடங் கூறியது. 5

86. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

*வந்த விருந்தினர்க்கு இட்டுப் பின் மேல்வரும் விருந்தினரைப் பார்த்து அவரோடு உண்ண இருப்பான், மறுமையில் தேவனாய் வானிலுள்ள தேவருக்கு நல்ல விருந்தாம்.* 6

87. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன்.

*விருந்தோம்பலாகிய வேள்வியின் பயனின்ன அளவிற்று என்பதோர் அளவில்லை; அவ் விருந்தினர் தகுதியளவே யளவு.*

'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்று ஐம்புலத்தாறு' செய்வதற்கு வேள்வியென்று பெயர். உபகாரத்திற்கும் வேள்வியென்று பெயர். விருந்தின் புண்ணியத்திற்கு அளவில்லை; அளவுமுண்டு. அதெப்படியென்னில், அவ்விருந்தினர் தகுதியளவே யளவாம்; 'தான் சிறிதே யாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான்சிறிதாய்ப் போர்த்தும் விடும்' எனவும், 'தில மத்தனை பொன் சிவஞானிக் கீயின் பலமுந்திசித்திப போகம் நல்கும்' எனவும், 'கருமிகட்கீகை நிற்குங் கலந்தொரு பிறப்புக் கற்ற, பெரியதாந் தவத்தோர்க் கீகை பிறப்பொருநூறு நிற்கும், அரிய மந்திரத்தார்க் கீகை யாயிரம் பிறப்பு நிற்கும், உரிய யோகிக்கு ஞானிக் கூழிபேரூழி நிற்கும்' எனவும் நல்விருந்தினளவே யளவெனக் கொள்க. 7

88. பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பார் விருந்தோம்பி
வேள்வித் தலைப்படா தார்.

*உடம்பு வருந்திப் பொருளைத் தேடிப் பரிந்து காத்து, முழுதும் இழந்தோம் என்று சொல்லுவர், அப்பொருளால் விருந்தை யோம்பி வேள்வியின் பயனை எய்தும் அறிவில்லாதவர்.*

*வேள்வி என்பது, முன் சொன்ன உரையிற் கண்டுகொள்க.* 8

[*குறிப்பு:* பற்றற்றே மென்பர்; வேள்விதலைப் படாதவர்: *என்பன அச்சுப் பதிப்புகளிற் காணும் பாடங்கள்*].

89. உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்க ணுண்டு.

*பொருளுடைமைக் காலத்து இன்மையாவது, விருந்தோம்பலை ஓம்பாமை. அந்த மடமை அறியாரிடத்தே உண்டாம்.*

செல்வம் உண்டான காலத்தில் வறுமையாவது, விருந்து வந்தவரை, செல்வச் செருக்கினால் விருந்திடாமல் புறங்கொடுத்தல். அந்த மடமை மடவோரிடத்தே உண்டென்று உரைத்தது. மடமை - அறியாமை. 9

**90. மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.**

அனிச்சப் பூவை மோந்தவுடனே (அது) வாடிப்போம்; முகம் வேறுபட்டு நோக்கினவுடனே விருந்து வந்தவரும் வாடிப்போவர்.

விருந்தைக் கண்டவுடனே முகம் மலர்ந்து மகிழ்ந்து நோக்கில் விருந்து வாடாது. முகம் வேறுபடில் அவர் வாடுவர் எனக் கொள்க. 10

விருந்தோம்பல் முற்றும்.

---

## 10. இனியவை கூறல்

அஃதாவது, இனிய சொற்களைச் சொல்லுதல்.

**91. இன்சொலா லீர மளைஇப் படிறிலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.**

இனிய சொல்லால் அன்பொடு கலந்து பொய்யில் வாயிருக்கிறனவாம், செவ்விய பொருளை உணர்ந்தவர் வாயிற் சொற்கள்.

செம்பொருள் கண்டார்: அறத்தினைப் பொருளாகக் கண்டவரென்க. இது, இனிய சொல்லினிலக்கணங் கூறியது. 1

**92. அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின்.**

நெஞ்சு உவந்து ஒருவருக்கு வேண்டியவை கொடுத்தலினும் நன்மையுடைத்து, முகமினியனாய் அதனோடு இனிய சொல்லையும் உடையனாகப் பெறின்.

கொடுத்தலே நன்மை என்பதனால் கொடுத்தலினும் நன்று இன்சொல்லைக் கொள்க என்பது இதன் கருத்து. 2

93. முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானும்
இன்சொலி னஃதே யறம்.

யாவரையு முகத்தான் விரும்பி, இனிதாக நோக்கிப் பின் மனமும் வாக்கும் ஒத்து இனிய சொல்லைச் சொல்லுதல் அதுவே அறமாவது. 3

[குறிப்பு : இன்சொ லினதே யறம் என்பது அச்சுப் பதிப்புக்களிற் காணும் பாடம்].

94. துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉ மின்சொ லவர்க்கு.

எல்லாரிடத்தும் இன்பம் விளைவிக்கும் இன்சொல்லை உடையார்க்குத் துன்பத்தை விளைவிக்கும் தரித்திரம் இல்லையாம்.

யாவர் மாட்டும் என்றமையால், அவர்க்குப் பகைவரில்லை என்க. 4

95. பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றும் பிற.

ஒருவனுக் கணியாவது, தாழப்பட்டவரிடத்துத் தான் தாழ்ச்சியுடையனாய், எல்லாரிடத்தும் இனிய சொல்லை யுடையனாதல்; இவை இரண்டும் அன்றி, மெய்க்கணியும் பிறவணிகள் அணியாகா.

அணி, ஆபரணம் எனக்கொள்க. ஒருவரைத் தாழ்வதும், இனிய சொல்லுதலுமே ஆபரணம்; மற்ற ஆபரணமல்லவெனக் கொள்க. உடம்புக்கழகு பணிதலும் இனிய சொல்லுமே யாம் என்றவாறு. 5

[குறிப்பு : மற்றுப் பிற என்பது அச்சுப் பதிப்புக்களிற் காணும் பாடம்].

96. அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின்.

பாவந் தேயப் புண்ணியம் பெருகும், யாவரிடத்தும் நல்ல சொற்களை நாடி இனியவாகச் சொல்லின். 6

97. நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

ஒருவனுக்கு இம்மைக்குப் பொருள்களை உண்டாக்கும்; மறுமைக்கும் நன்மையை விளைவிக்கும்; பொருளாற் பிறர்க்கு நன்மையைக் கொடுத்து, இனிமைப் பண்பின் நீங்காத சொல். 7

98. சிறுமையு ணீங்கிய வின்சொல் மறுமையும்
இம்மையு மின்பந் தரும்.

பொருளாற் பிறர்க்கு மனவருத்தம் நீங்கிய இன் சொல்லைச் சொன்னவனுக்கு மறுமையும் இம்மையும் இன்பந்தரும்.

பொருள் - சொல்லினது பொருள். சிறுமை - மனவருத்தம். 8

[குறிப்பு: சிறுமையுணீங்கிய' என்பது அச்சுப் பதிப்புக்களிற் காணும் பாடம்.]

99. இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

பிறர் கூறிய இன்சொல் தனக்கு இன்பம் பயத்தலை அறிந்து இருந்தும், பிறர் இடத்து வன்சொல்லைச் சொல்லுவது என்னை கருதியோ?

பிறர் வன்சொல் தனக்கு மனவருத்தஞ் செய்தல் அறிந்தும் ஒன்றுமாம்.

100. இனிய வுளவாக வின்னுது கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

அறம் பயக்கும் இனிய சொல் தன்னிடத்து எளிதாக இருக்கவும், அவற்றைக் கூருது, பாவம் பயக்கும் இன்னுச் சொல்லை ஒருவன் கூறுதல், நன்ருய்க் கனிந்து தித்திக்கும் கனியிருப்ப, அதனைத் தின்னுது, நாவிற்குக் கசப்புத்தரும், நெஞ்சுக்கு வெறுப்புத்தரும் காய்களைத் தின்றதனேடொக்கும். 10

[குறிப்பு: இன்னுத கூறல் என்பது அச்சுப் பதிப்புக்களிற் காணும் பாடம்].

இனியவை கூறல் முற்றும்.

## 11. செய்ந்நன்றியறிதல்

*அஃதாவது, தனக்குப் பிறர் செய்த நன்றியை மறவாமை.*

**101. செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.**

*தனக்கு முன்னொருதவி செய்யாமலிருப்ப, பிறன் செய்த உதவிக்கு மண்ணுலகும் விண்ணுலகும் கைம்மாருகக் கொடுத்தாலும் ஒத்தல் அரிது.*

*கைம்மாறு* ஒருவருக்கு ஒருவர் செய்யும் உபகாரமாதலில் *காரணமில்லாமல் செய்த உதவிக்கு, உதவி செய்து மாற்றலரிது* எனக் *கொள்க.* 1

**102. காலத்தி ஞற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.**

*ஒருவனுக்கு இறுதி வந்த காலத்தில் ஒருவன் செய்த நன்றி சிறிதாயினும், அக்காலத்தை நோக்க, அந்நன்றி இந்த ஞாலத்தினும் பெரிதாம்.*

அந்நன்றிப் பயன் அவனுக்கு இறுதியைக் காத்தலின், பின்பு ஞாலங் காக்கமாட்டாதாதலின், ஞாலத்தினும் பெரிது எனக் கொள்க. 2

**103. பயன்றூக்கார் செய்த உதவி நயன்றூக்கின்
நன்மை கடலிற் பெரிது.**

*நாமின்னது செய்தால் நமக்கின்னது செய்வார் என்று எண்ணுமல் செய்த உதவிப் பயனைத் தூக்கிப் பார்க்கில், நன்மை கடலினும் பெரிது.* 3

*குறிப்பு:* பயன்றூக்கார் செய்த *என்பது அச்சுப் பதிப்புக்களிற் காணும் பாடம்].*

**104. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாய்க்
கொள்வர் பயன்றெரி வார்.**

*தனக்கு ஒருவன் தினை அளவு நன்றி செய்தாலும், அதனைப பனையளவாகக் கருதிக் கைக்கொள்வர், மறுமைப் பயனைத் தெரிந்தவர்.*

திணை, பனை யென்பன சிறுமை பெருமைக்கு அளவு எனக் கொள்க. 4

[குறிப்பு: பனைத்துணையா என்பது அச்சுப் பதிப்புக்களிற் காணும் பாடம்].

105. உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

காரணத்தானும், பொருளானும், காலத்தானும், கைம்மாற்றானும் முன்செய்த உதவிக்கு உதவி ஒப்பில்லை, அளவுமில்லை; அவ் உதவிப் பயன் பார்க்கில், உத்தமர், மத்திமர், அதமர் அளவே அளவு எனக் கொள்க.

சால்பு என்பது அவரவர் குணத்தன்மை கூறியது. முன் சொன்ன விருந்தோம்பலின் இனைத்துணைத் தென்ப தொன்றில்லை விருந்தின் றுணைத்துணை என்னும் குறளின் உரையிலும் இப்பொருள் கண்டு கொள்க. 5

106. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு.

துன்பக் காலத்துத் தனக்கு உதவியாயினார் நட்பை விடாது கொள்க. மாசற்றார் கேண்மையை விடாது கொள்க.

மாசற்றார்: கல்வி, கேள்வி, ஒழுக்க ஞான முடையவர் எனக் கொள்க. கேண்மை - உறவு. 6

107. எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு.

தன்னிடத்தில் வந்த துன்பத்தை நீக்கினவருடைய நட்பினை எழுமையினையுடைய எழுபிறப்பினும் நினைப்பார் நல்லோர்.

எழுமை, எண்பத்து நான்கு நூறாயிரம் பேதமாகிய பிறப்பென முன் (62, உரை) சொன்ன உரையிற் கண்டு கொள்க. 7

108. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லா
தன்றே மறப்பது நன்று.

ஒருவர் செய்த நன்றியை மறப்பது நன்றன்று; நன்றி செய்தவர் நன்றல்லாது செய்ததனை அப்போதே மறப்பது நன்று. 8

[குறிப்பு: நன்றல்ல நன்றே என்பது அச்சுப் பதிப்புக்களிற் காணும் பாடம்].

**109. கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்.**

தமக்கு முன்னொரு நன்றி செய்தவர் பின் தன்னைக் கொன்றாலொத்த தீமை செய்தாராயினும், அவர்செய்த நன்றி ஒன்றினையும் நினைக்க, அவர்செய்த துன்பமெல்லாம் கெடுமாம். 9

**110. எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.**

என்ன என்ன நன்றிகளைக் கொன்றவர்க்கும் அப்பாவம் நீங்கப் பிராயச்சித்தமுண்டு. ஒருவன் செய்த செவ்விய நன்றியைக் கொன்ற மகனுக்கு அப்பாவம் தீரப் பிராயச்சித்தமில்லை; நரகே கதியாம்.

பிரமகத்தி முதலாய பாவந் தீரும் வழியுண்டு; ஒருவன் தனக்குச் செய்த நன்றியை மறந்தவனுக்கு அந்தப் பாவந் தீரும் வழி இல்லை எனச் சொல்லியது என்க. 10

செய்ந் நன்றி யறிதல் முற்றும்.

---

## 12. நடுவு நிலைமை

அஃதாவது, பகை, உறவு, பொது என்னும் மூவகையாரிடத்தும் சார்பில்லாமல் பொதுவாக நின்று, வழக்கு முதலானவும், வாணிகம் முதலானவும் கூறுதல், செய்தல் முதலாயின காரியங்களில் நடுவு நிற்றல்.

**111. தகுதி யெனவொன்று நன்றே பகுதியால்
பாற்பட் டொழுகப் பெறின்.**

நடுவு நிலைமை எனச் சொல்லப்படும் ஓர் அறமுமே நன்று; அது, பகை, உறவு, பொது, நண்பு என்னும் பகுதிதோறும் பொதுவாய் நிற்கும் முறைமை விடாது ஒழுகப் பெறின்.

தகுதி என்பது: நடுவு நிலைமை. இது நடுவு நிலைமை இலக்கணம். 1

**112. செப்ப முடையவ னுக்கஞ் சிதைவின்றி**
**எச்சத்திற் கேமாப் புடைத்து.**

*நடுவு நிலைமை உடையவன் செல்வம், பிறர் செல்வம்போல் அழிவு இன்றி, அவன்* மக்கள் பேரன் முதலாக அவன் வழியின் உள்ளார்க்கு எல்லாம் *வலியுடைத்து.*

*செப்பம் - நடுவு நிலைமை.* 2

**113. நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை**
**அன்றே யொழிய விடல்.**

*தீமை இல்லாமல் நன்மை தரினும், நடுநிற்றலை ஒழிந்து, வருகின்ற பொருளை அப்போதே ஒழிய விடுக.* 3

**114. தக்கார் தகவில ரென்ப தவரவர்**
**எச்சத்தாற் காணப் படும்.**

*நடுவு நிலைமை உடையவர், நடுவு நிலைமை இல்லாதவர் என்பது, அவர் சந்தான பாரம்பரியத்தால் அறியப்படும்.*

*எச்சம் - அவன் வழியினுள்ள சந்தானம்;* நன்மக்கள் புன்மக்களாற் காணப்படும் என்க. 4

**115. கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்**
**கோடாமை சான்றோர்க் கணி.**

*கெடுதலும் வாழ்தலும் இல்லாதவல்ல; யாவர்க்கும் முன்னே அமைந்து கிடந்தன.* அவற்றை *அறிந்து, மனத்தின்கண்* நடுவு நிலைமையே *அறிவுடையார்க்கு அழகு.*

*கோடாமை - மனம் கோணுமல் இருப்பது; அது நடுவு நிலைமை எனக் கொள்க. சான்றோர் - அறிவுடையோர்.* 5

**116. கெடுவலியா னென்ப தறிகதன் னெஞ்சம்**
**நடுவொரீஇ யல்ல செயின்.**

*ஒருவன் தன் நெஞ்சம் நடுவு நிற்றலை ஒழிந்து நடுவல்ல அவற்றைச் செய்ய நினைக்குமாயின், அந்த நினைப்பு தன்னை* வலியன கெடுக்கும் *உற்பாதம்.* 6

[குறிப்பு : கெடுவல்யான், *என்பது அச்சுப்* பதிப்புக்களிற் *காணும் பாடல்*].

**117. கெடுவாக வையா துலக நடுவாக**
**நன்றிக்கட் டங்கியான் றாழ்வு.**

*நடுவாகிய நன்மையினிடத்துத் தங்கி நின்றவன் வறுமையை வறுமையாகக் கருதார் உயர்ந்தோர்.*

*நடு நின்று கெட்டாலும் கெட்டதன்று;* பின்பு செல்வந் தரும் எனக் கொள்க. உலகம் என்பது, பெரியோருக்கும் உலகத்தாருக்கும் பெயர். 7

**118. சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபால்**
**கோடாமை சான்றோர்க் கணி.**

*முன்னே தான் சமனாக நின்று, வைத்த பாரத்தை இரண்டு தட்டும் சமன் செய்து வரையறுக்கும் துலாக்கோல்போல் இலக்கணம் உடைத்தாய் அமைந்து, ஒருபாற் சாயாமல் நடுவு நிற்றல் சான்றோர்க்கு அழகாம்.*

*சமன் செய்தலும், சீர்தூக்கலும், ஒருபாற் சாயாமல் நிற்பதும் பெரியோர்க்கு அழகு எனக் கொள்க. துலாக் கோல்* நடுமுட்போல் *நடுவு நிலைமை என்க.* 8

**119. சொற்கோட்ட மில்லாது செப்ப மொருதலையா**
**உட்கோட்ட மின்மை பெறின்.**

*• நடுவு நிலைமையாவது சொல்லின்கட்* சார்பு இல்லாமல் *நிற்பதாம்; அது, மனத்தின்கட்* சார்பு இல்லாமல் இருக்கப் *பெறின்.*

ஒருதலையாக மனத்தில் சார்பு இல்லாமல் இருக்கிற சொல்லின் கண்ணும் சார்பு இல்லை எனக் கொள்க. *சார்பு* - பகை, உறவு, பொது, நட்பு; இவற்றைச் சார்ந்து நில்லாமல் நடு நிற்றல் நடுவு நிலைமையாம். 9

**120. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**
**பிறவுந் தமபோற் செயின்.**

*பிறர் பொருளையும் தம் பொருள்போல் பேணி* வாணிகம் *செய்வார்க்கு* நன்றும் *வாணிகம்.*

*வாணிகம் செய்வதாவது,* கொள்வது மிகையும், கொடுப்பது குறையும் ஆகாமல் ஒப்ப நாடிச் செய்தல். 10

நடுவு நிலைமை முற்றும்.

---

## 13. அடக்க முடைமை

*அஃதாவது, மனம், வாக்கு, காயம் தீநெறிக்கட் செல்லாமல் நல்வழியிற் செல்ல அடக்குதல்.*

**121. அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
ஆரிரு ளுய்த்து விடும்.**

*ஒருவனை அடக்கமாகிய புண்ணியம் அமரருள்ளே கொண்டு போய் வைக்கும். அடங்காமையாகிய பாவம் நரகத்துள்ளே கொண்டுபோய்த் தள்ளிவிடும்.* 1

**122. காக்க பொருளா வடக்கத்தை யாக்கம்
அதனினூங் கில்லை யுயிர்க்கு.**

*உயிர்கட்கு அடக்கத்தின் மிக்க செல்வம் இல்லை; ஆதலால், அடக்கத்தைத் தனக்கு உறுதிப் பொருளாகக் காக்க.* 2

**123. செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின்.**

*அடங்குதலே நமக்கு அறிவாவதென்றறிந்து, நன்னெறியாக ஒருவனடங்கப் பெற்றானாகில் அவ்வடக்கம் நல்லோர் அறியப்பட்டு அவனுக்குச் செல்வத்தைக் கொடுக்கும்.* 3

**124. நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினு மாணப் பெரிது.**

*இல்வாழ்க்கை ஆகிய நன்னெறியின் வேறுபடாது நின்றடங்கினவன் தோற்றம் மலையினும் மிகப் பெரிது.*

*திரியா தடங்குதல் - மெய் வாய் கண் மூக்குச் செவியாகிய ஐம்பொறிகளையுஞ் செல்லுமிடத்தே செலுத்திச் செல்லாவிடத்தே அடக்கல். தோற்றமாவது - மலைபோலே விளங்குதல், அவனை ஒருவராலும் அசைக்கப்படாது என்க.* 4

**125. எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.**

*பெருமிதமின்றி அடங்குதல் எல்லார்க்கும் நன்மை யெனினும், செல்வமுடையார் அடங்கில் செல்வத்தின் மேற் செல்வமாம்.* 5

126. ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து.

ஆமைபோல ஒருவன் ஒரு பிறப்பின் ஐம்பொறிகளையும், அடக்க வல்லவனாயின், அவனுக்கு எழு பிறப்பின் கண்ணும் மேம்பாடுடைத்து.

ஆமை நாற்காலுந் தலையும் ஒருமிக்க அடக்குதல் போல ஐம்பொறியும் அடக்குதல். 6

127. யாகாவா ராயினு நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

தம்மால் காக்கப்பட்டன எல்லாம் காக்க மாட்டார் ஆயினும் நாவொன்றினையும் காக்க; அதனைக் காக்க மாட்டாராயிற் சொற் குற்ற இழுக்குப் பட்டுத் தாமே சோம்பிப் போவார். 7

128. ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயின்
நன்றாகா தாகி விடும்.

தீச் சொல்லின் பொருட்பயன் பொல்லாங்கு ஒன்றாயினும் உண்டாயின், தன்னிடத்திலுண்டான நன்மை எல்லாம் பொல்லாதாய் விடும்.

ஒரு பொல்லாச் சொல்லின் பயன் ஒரு பொல்லாதாயிருக்கில் எல்லா நன்மையும் பொல்லாதாய் விடுமெனக் கொள்க. எல்லாச் சொல்லும் நல்ல சொல்லாயிருக்க, ஒரு சொல் பொல்லாச் சொல்லாகில், நல்ல சொல்லெல்லாம் கெடும் என்றுமாம். நன்று ஆகாதாகி விடும் எனப் பிரித்துக் காண்க. தீயவாகிய சொற்களாற் பிறர்க்கு வருந் துன்பம் ஒன்றாயினும் எனவும், தீய சொல்லால் பொருளொன்றானும் வரின் என்றுமாம் எனக் கொள்க. 8

129. தீயினாற் சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு.

ஒருவனை ஒருவன் தீயினாற் சுட்டபுண் தழும்புவடு மெய்யிற் கிடப்பினும், மனத்தின் (கண்ணே அஃது) ஆறிப்போம்; அப்படி ஆறாது, நாவினாற் சுட்ட வசையாகிய வடு; நினைக்குந் தோறும் சுடும் எந்நாளும். 9

130. கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
அறம்பார்க்கு மாற்றி னுழைந்து.

*மனத்தின் கோபந் தோன்றாமற் காத்துக் கற்க வேண்டியன எல்லாம் கற்றடங்க வல்லவனுடைய நன்மையைத் தன்ம தேவதை பார்த்து நிற்கும், அவன் நன்மையாக நடக்கும் வழியே வந்து.* 10

[குறிப்பு: *வழியே வந்து பார்த்து நிற்கும் என்க.*]

அடக்க முடைமை முற்றும்.

---

## 14. ஒழுக்க முடைமை

*அஃதாவது, தத்தம் வருணத்தினிற்கும் நிலைமைக்கும் ஓதப் பட்ட நல்லொழுக்கத்தினை உடையராதல்.*

131. ஒழுக்கம் விழுப்பந் தரலா லொழுக்க
முயிரினு மோம்பப் படும்.

*ஒழுக்கம் எல்லார்க்கும் சிறப்பினைத் தருதலால் அவ் வொழுக்கத்தை உயிரினும் அதிகமாகப் பாதுகாக்கப் படும்.* 1

132. பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை.

*ஒழுக்கத்தினை ஒன்றினும் அழிவுபடாமல் பேணி வருந்தியுங் காக்க, தன்மங்கள் பலவற்றுள்ளும் ஆராய்ந்து, இவற்றுள் இருமைக்கும் துணையாவது யாதென்று தேர்ந்தாலும், துணையாய் முடிவது, தான் நடந்து கொண்ட நல்லொழுக்கமேயாகும்.* 2

133. ஒழுக்க முடைமை குடிமை யிழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

*எல்லார்க்கும் தந்தம் வருணத்திற்கேற்ற ஒழுக்க முடைமை குலனுடைமையாம்; அவ் ஒழுக்கில் தவறுதல் சாதிகளில் தாழ்ந்த சாதியாய் விடும்.*

*சாதி ஒழுக்கம் தப்ப நடக்கலாகாது என்றவாறு;* அவை கொள்வன கொடுப்பன முதலாயின எனக் கொள்க. 3

**134. மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.**

*கற்ற வேதம் மறந்தானாயினும் வருணம் கெடாமையால், பின்னும் ஓதிக் கொள்ளலாகும்; அந்தணன் உயர்ந்த சாதி ஒழுக்கம் கெட்டானாகில்,* சாதியில் கூட்டப்படான்.

சாதிக்குப் புறம்பாம் எனக் கொள்க. அவர்க்குப் பிராயச் சித்தம் இல்லை என்க. 4

**135. அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
ஒழுக்க மிலான்க ணுயர்வு.**

*அழுக்காறு உடையானிடத்துச் செல்வம் நில்லாவாறுபோல, ஒழுக்கம் இல்லாதவனிடத்தும் உயர்ச்சி நில்லாது.*

*அழுக்காறு - பொறாமை; மனத் தழுக்கு.* 5

**136. ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து.**

*ஒழுக்கத்தில் சுருங்கார் அறிவுடையார், இழுக்கத்தால் தமக்கு இழிகுலமாகிய குற்றமுண்டாமாற்றை யறிந்து.*

*உரவோர்* - அறிவுடையோர்; வலியுடையோரென்க. 6

**137. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தின்
எய்துவ ரெய்தாப் பழி.**

*நல்லொழுக்கத்தின் எல்லா மேம்பாடும் எய்துவர்; அந்த ஒழுக்கநெறி தப்பின வழுக்கினாலே தாமடையத் தகாத பழிப்பு எல்லாம் (எய்துவர்).* 7

**138. நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்கம்
என்று மிடும்பை தரும்.**

*ஒருவனுக்கு நல்லொழுக்கம் அறத்திற்குக் காரணமாய் இம்மை மறுமையினும் இன்பந்தரும்; தீய ஒழுக்கம் பாவத்திற்குக் காரணமாய் இம்மை மறுமையிலும், எக்காலமும் துன்பம் விளைவிக்கும்.*

*நல்லொழுக்கந் தீயவொழுக்கம் நன்மை தீமைக்கு வித்தாம் எனக் கொள்க. வித்து - விதை.* 8

**139. ஒழுக்க முடையவற் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.**

*மறந்துந் தீய சொற்களைத் தம் வாயாற் சொல்லுதல் ஒழுக்க முடையவற்குப் பொருந்தாது.*

*தீய சொல் - பிறர்க்குத் தீங்கு விளைக்குஞ் சொல் என்க.* 9

[குறிப்பு: உடையவர்க் கொல்லாவே என்பது *அச்சுப் பதிப்புக் களிற் காணும் பாடம்*].

**140. உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லா ரறிவிலா தார்.**

*உலகத்தோடு பொருந்த ஒழுகுதலைக் கல்லாதார் பல நூல்களைக் கற்றாராயினும் அறிவிலாதாராம்.* 10

ஒழுக்க முடைமை முற்றும்.

---

## 15. பிறனில் விழையாமை

*அஃதாவது, காம மயக்கத்தாற் பிறனில்லாளை விரும்பாமை.*

**141. பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில்.**

*பிறனுக்குப் பொருளாந்தன்மை உடையாளை ஆசைப்பட் டொழுகும் அறியாமை ஞாலத்தின்கண் அறநூலையும் பொருள் நூலையும் ஆராய்ந்து அறிந்த அறிவுடையாரிடத்து இல்லை.*

*காமம் உடையார்க்கு அறமும் பொருளும் இல்லை எனக் கொள்க.* 1

**142. அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்.**

*காமம் காரணமாகப்* புண்ணியத்திற்குப் புறமாகிய *பாவத்தின்கண் நின்றார் எல்லாருள்ளும், பிறன் இல்லாளுக்கு ஆசைப் பட்டு, அவள் கடைத்தலை வாசற் சென்று நின்றாரைப் போலொத்த பேதையாரில்லை.*

பொது மகளிரோடும் இழிகுல மகளிரோடும் செல்வாரின் தீது வரைவுடை மகளிரோடு சேறல் எனக் கொள்க. 2

[குறிப்பு: வரைவுடை மகளிர் - பிறரால் வரையப்பட்டு அவர்க்குரிய மகளிர்.]

143. விளிந்தாரின் வேறல்ல மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்தொழுகு வார்.

உயிரோடு இருந்தும் செத்தவரே அல்லாமற் சாகாதவரல்லர்; அறிந்தால் தப்பாமல் கோல்வார் என்று அறிந்து அவர் இல்லாளோடு தீய காமம் அனுபவிப்பவர். 3

144. எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல்.

எத்துணைப் பெருமை உடையவராயினும் ஆகுவது என்னை கண்டால் கொல்வர். அதனைத் தினையளவாகிலும் தேர்ந்து கொள்ளமாட்டான் பிறன் இல்லாளிடத்துச் செல்வான்.

இந்திரன்போல் எல்லாப் பெருமையும் போம்; பெருமை யுடையவன் வறியவன் இல்லாளிடத்துச் சென்றால் பெருமையைப் பாரான் கொல்வன் என்கின்றது. 4

145. எளிதென வில்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

எய்துதல் எளிதென்று கருதிப் பின் விளைவு கருதாது பிறன் இல்லாளிடத்துச் செல்வான் எந்நாளும் நிலை நிற்கும் பழிப்பினை யெய்தும்.

இல்லிறத்தல் என்பது, பிறனில்லாளிடத்துச் செல்லுதல் என்க. 5

146. பகைபாவ மச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண்.

பகையும், பாவமும், அச்சமும், பழியுமென்னு மிந்நான்கும் நீங்காது நிற்கும், பிறனில்லாளிடத்துச் செல்வான்கண். 6

147. அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

புண்ணிய இயல்பாய் இல்வாழ்வானென்று சொல்லப்படுபவன் யாரெனில், பிறனுக்கியல்பாகி உரிமை பூண்டவள் அழகைப் பார்த்து ஆசைப் படாதவன். 7

**148. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனென்றோ ஆன்ற வொழுக்கு.**

பிறன் மனையாளைக் கருத்துட் கொள்ளாத பேராண்மையைச் சால்புடையவர்க்கு அறனென்று சொல்வமோ? நிறைந்த ஒழுக்கமென்று சொல்வமோ?

சால்புடையவர் - பெரியவர். காமத்தை அடக்குதல் அருமையாதலாற் பேராண்மை என்றார் என்க. அறனுமாம் ஒழுக்கமுமாம் என்க. 8

**149. நலக்குரியார் யாரெனி னுமநீர் வைப்பில்
பிறர்க்குரியா டோடோயா தார்.**

அச்சமுடைய கடல்சூழ்ந்த உலகத்து எல்லா நன்மையும் எய்துதற்குரியார் யாரென்னின், பிறனுக்குரிய மனையாள் தோளைச் சேராதவர். 9

**150. அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.**

ஒருவன் தனக்கு அறத்தை உரித்தாகச் செய்யாது, பாவத்தைச் செய்தானாயினும், பிறன்மனையாள் பெண்மையை விரும்பானாயின் அதுவே நன்று.

எல்லாப் பாவம் செய்தாலும் நீங்கும்; பிறன் மனையாளை விரும்பாமை (நன்று) எனக் கொள்க. 10

பிறனில் விழையாமை முற்றும்.

---

## 16. பொறை யுடைமை

அஃதாவது, எல்லாப் பிழையும் பொறுத்தல்.

**151. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்த றலை.**

தன்னைப் பள்ளமாக வெட்டுவாரை வீழாமல் தாங்கும் நிலம் போலத் தம்மை யிகழ்ச்சி செய்வாரைப் பொறுத்தல் தலைமையாய தவம். 1

**152. பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று.**

பிறர் செய்த மிகையைப் பொறுத்தல் நன்று; தனக்கு வலிமை இல்லாத காலத்துப் பொறுத்த பொறையினும் வலிமை உடைய காலத்தில் பொறுத்த பொறுமை அதனினும் மிக நன்று.

*இறப்பு - மிகை செய்தல்.* 2

**153. இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.**

*ஒருவருக்கு வறுமையுள் வறுமையாவது விருந்தினரை ஓம்பாது நீக்குதல்; அதுபோல், வன்மையுள் வன்மையாவது, அறிவில்லாமையால் மிகை செய்தாரைப் பொறுத்தல்.* 3

**154. நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும்.**

*ஒருவனிடத்து நிறையுடைமை நீங்காமல் நிற்க வேண்டுமாகில், (அவன்) பொறுமையைத் தன்னிடத்தில் அழியாமற் போற்றி யொழுகப் படும்.* 4

**155. ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.**

*ஒருவன் ஒரு தீங்குசெய்யில் அவனைப் பொறாமல் ஒறுத்தாரை அறிவுடையோர் ஒரு பொருளாகக் கொள்ளார். பொறுமையுடையவரைப் பொன்போற் பொதிந்து கொள்வர்.* 5

**156. ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.**

*தீங்கு செய்தவனை ஒறுத்தார்க்கு அன்றைக்கு மாத்திரம் இன்பமாக இருக்கும்; பொறுத்தார்க்கு உலகழியும் அளவும் புகழுண்டாயிருக்கும்.*

*நினைத்தபடி முடித்தோமென அன்றைக்கு மனந்தருக்கி யிருக்குமது பொய்யின்பம்; மெய்யின்பம் எக்காலமும் புகழுண்டாதல் எனக் கொள்க.* 6

**157. திறனல்ல தற்பிறர் செய்யினும் நோய்நொந்**
**தறனல்ல செய்யாமை நன்று.**

*செய்யத் தகாத கொடியவற்றைத் தன்னிடத்துப் பிறர் செய்தாராயினும், மறுபடி அவர்களுக்கு நோயை நொந்து தாம் அறனல்லாத செயலைச் செய்யாதிருப்பது ஒருவருக்கு நன்று.* 7

[குறிப்பு : நோநொந்து *என்பது அச்சுப் பதிப்புக்களில் காணும் பாடம்.*]

**158. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்**
**தகுதியால் வென்று விடல்.**

செல்வச் செருக்கினால், மனச் செருக்கினாற், *பொல்லாங்கு செய்தவரை நல்லோர் தாந்தம் பொறுமையினால் வென்று விடுக.*

*தாமுந் தீயவற்றைச் செய்யின் அவர் மிகவுஞ் செய்வாராதலால், பொறுமையினால் வெல்க வென்றது.* 8

**159. துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வாய்**
**இன்னாச்சொல் நோற்கிற் பவர்.**

*இல்வாழ்க்கையிலிருந்தே துறந்தாரைப் போலத் தூய்மை யுடையவராவர், பொல்லாதவர் இன்னாதச் சொல்லைப் பொறுப்பவர்.*

*இன்னாச் சொல் - வசைச் சொல். இறந்தார் -* நல்லொழுக்கம் இல்லாதவர். 9

**160. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்**
**இன்னாச்சொல் நோற்பாரிற் பின்.**

*உண்ணாமல் விரதங்களை நோற்பார் பெரியவர்; அவர் தாமுந் தம்மைப் பிறர் சொல்லும் பொல்லாச் சொல்லைப் பொறுப்பார்க்குப் பின்.*

பொறுமையே தவமெனக் கொள்க. 10

பொறை யுடைமை முற்றும்.

---

## 17. அழுக்காறாமை

அஃதாவது, அழுக்காற்றைச் செய்யாமை. அது (அழுக்கறுத்தல்) பிறர் செல்வம், பெருமிதம் கண்டு பொறாமைப்படுதல்.

**161. ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு.**

ஒருவன் தன் நெஞ்சில் பிறர் செல்வங் கண்டு பொறாமையென்னும் குற்றத்தை வாராமல் (காப்பதை) ஒழுக்க நெறியாகக் கொள்க. 1

**162. விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டும்
அழுக்காற்றி னன்மை பெறின்.**

யாவரிடத்தும் பொறாமை யென்னு மழுக்காறில்லாமற் பெறுவானாயின், மற்று அவன் பெறும் பெரிய பேறுகளின், இப்பேற்றினை ஒப்பதில்லை.

அழுக்காறில்லாமலிருப்பதே பெரிய பேறென்கின்றது. 2

**163. அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான்.**

மறுமைக்கும் இம்மைக்கும் அறமுஞ் செல்வமும் வேண்டாமென்று சொல்வான், பிறன் செல்வங் கண்டவுடனே மனம் பொறுமலிருப்பவன்.

பேணா தழுக்கறுத்தல் என்பது, அவர் செல்வங் கண்டவுடனே மனமகிழாது எப்போது கெடுவானோ இவனென்னுஞ் சிந்தையெனக் கொள்க. அது தனக்கே கேடு வருமென்கின்றது. 3

**164. அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றின்
ஏதம் படுபாக் கறிந்து.**

பிறர் செல்வங் கண்டவிடத்துப் பொறாமையால் அறமல்லாதவற்றைச் செய்யார் அறிவுடையார்; அப்படிச் செய்யின் தமக்கு இழுக்கு வழியாகிய துன்பம் வருதலறிந்து.

பாக்கென்பது இடைச் சொல். 4

**165. அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்**
**வழுக்கியுங் கேடீன் பது.**

*மனத்தின் அழுக்காறுடையார்க்கு அந்த அழுக்காறு தானே போதும், பகைவர் வேண்டா, அழுக்காறு உடையானைக் கெடுப்பதற்கு.*

*பொறாமை யுடையானைப் பொறாமைதானே கெடுக்கும், பகைவர் வேண்டா வென்றது.* 5

**166. கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉம்**
**உண்பதூஉ மின்றிக் கெடும்.**

*ஒருவன் பிறருக்குக் கொடுப்பதனைக் கண்டு பொறாமையினால் விலக்குவானுடைய சுற்றத்தார் உடுப்பதுவும் உண்பதுவும் இல்லாமற் கெடுவர்.*

*கொடுப்பதனை அழுக்கறுப்பது : கொடாமல் விலக்குவது. சுற்றத்தாரே கெடுமென்பதனால் அவன் கெடுவது சொல்ல வேண்டாமென்பதாயிற்று.* 6

**167. அவ்வித் தழுக்கா றுடையானைச் செவ்வியாள்**
**தவ்வையைக் காட்டி விடும்.**

*பிறர் செல்வங் கண்டவழிப் பொறாமை யுடையானைத் திருமகள் தான் பொறாது அவனை விட்டு நீங்கித் தனக்கு மூத்தவளாகிய மூதேவிக்கு அவனைக் காட்டிப் பிடிக்கச் சொல்லி விடுவாள்.*

*அவ்வித்தழுக்காறு, பொறாமையும் மனங் கோணுதலுமெனக் கொள்க.*

*செவ்வியாள் : திருமகள் ; தவ்வை : மூதேவி.* 7

[குறிப்பு : செய்யவள் என்பது *அச்சுப்பாடம்*].

**168. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்**
**தீயுழி யுய்த்து விடும்.**

*ஒருவனிடத்துப் பொறாமை யென்பதொரு பாவியிருந்தால், (அஃது) அவன் செல்வத்தைக் கெடுத்து வறுமையிலே தள்ளி விடும்.*

இம்மையிற் செல்வத்தைக் கெடுத்து, மறுமையில் நரகத்தில் தள்ளுமென்றுங் கொள்க. 8

**169. அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடு நினைக்கப் படும்.**

*பிறர் செல்வம் கண்டவழிப் பொறாமையாகிய கோணலை யுடைய நெஞ்சத்தான் செல்வமும் செவ்விய மனத்தையுடையவன் வறுமையும் உளவாயின் அவை யாராய்ந்து பார்க்கப்படும்.*

*ஆராய்ந்து நினைக்கப்படுதல்* - பழவினையால் வந்ததென்று நினைப்பார் அறிவுடையோரெனக் கொள்க. *அவ்வியம்* - அழுக்காற்றின் மேற்கோள். 10

**170. அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்.**

*அழுக்காறு செய்து பெருமையடைந்தவருமில்லை; அழுக்காறில்லாரவர் பெருக்கத்தை விட்டு நீங்கினாரு மில்லை.*

அழுக்காற்று என்பது குறுகி அழுக்கற்று என நின்றது. *அழுக்காறு* - பொறாமை. *அழுக்காறுடையார்க்குப் பெருமை வருவதில்லை. அழுக்காறில்லாதவர்க்குப் பெருமை போவதில்லை யென்க.* 10

அழுக்காறாமை முற்றும்.

---

## 18. வெஃகாமை

*அஃதாவது, பிறர் பொருளுக்கு* ஆசைப்படாமலிருப்பது.

**171. நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும்.**

*நடுவு நிலைமையில் ஒருவன் பொருளை ஒருவன் ஆசைப்படுமாயின் அவன் குடியைக் கெடச் செய்து பல குற்றங்களையும் விளைவிக்கும்.*

*நன்பொருள்* நல்வழியிற்றேடிய பொருள். ஆங்கே *தருமென்பது,* ஆசைப்பட்டவுடனே தருமென்றது. 1

**172. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்.**

*பிறர் பொருளினால் தனக்கு வரும் பயனை விரும்பி அப் பொருளைத்தான் கொள்வதற்குப் பழிப்பான காரியங்களைச்*

செய்யார், நடுவு நிலைமையில்லாத காரியத்தில் நாணத்தை யுடையவ ரென்றவாறு.

பிறர் பொருளினால் நமக்கு வரும் இன்பத்தைக் குறித்துப் பொல்லாத செயலைச் செய்யார், நடுவல்லாத செயலுக்கு நாண முடையவர் என்க. பிறர் பொருளுக்கு ஒருவன் உரியன் அல்லன் என்பது, நடுவு நிலைமை. 2

**173. சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.**

சிறிய இன்பத்தைக் கருதிப் பிறர் பொருளுக்கு ஆசைப்படார், மற்றைப் பேரின்பத்தை வேண்டியிருப்பவர்.

இம்மை இன்பத்தைக் கருதார், மறுமை இன்பத்தை வேண்டினவரென்க. அறனல்ல செய்தல் - புண்ணியமல்லாத பாவஞ் செய்தல், அது, ஆசையினால் வருதல். 3

**174. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.**

யாம் வறியமென்று கருதி வறுமை தீர்தற் பொருட்டு, பிறர் பொருளை விரும்புதல் செய்யார், ஐம்புலன்களையும் வென்ற குற்றம் இல்லாத பெரியவர்.

காட்சியவரென்பது, அறிவினாற் புண்ணிய பாவம் இவையெனக் கண்டவர் என்க. 4

**175. அஃகி யகன்ற வறிவென்னும் யார்மட்டும்
வெஃகி வெறிய செயின்.**

நுண்ணிதாய் விசாலமாகிய அறிவினாற் பயனென்னும் யாவரிடத்தும் பொருட்காசைப்பட்டு அற்பச் செயல்களைச் செய்வா ராயின்.

வெறிய செய்தல் - தகாத செயல்களைச் செய்தல். 5

**176. அருள்வெஃகி யாற்றின்க ணின்றார் பொருள்வெஃகிப்
பொல்லாது சூழக் கெடும்.**

அருளாகிய அறத்தை விரும்பி அதற்கு வழியாகிய இல்லறத் தின்கண் நின்றவர், பிறர் பொருளுக் காசைப்பட்டு பொல்லாத நினைப்பு நினைப்பத் தாமே கெடுவர்,

அருள்வெஃகி நின்றார் துறவறத்தினின்றாருமாம். 6

[குறிப்பு: நின்றான் என்பது அச்சுப்பாடம்.]

177. வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

பிறர் பொருளுக் காசைப்பட்டுக் கவர்ந்து கொள்ளும் செல்வத்தை விரும்பாதொழிக; அப்பாவம் விளையுமிடத்துத் தள்ளப்படாது, பெரிய துன்பப் பயனைத் தரும். 7

178. அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

தன் செல்வம் குறையாமலிருப்பதற்குக் காரணம் யாதெனில், பிறன் கைப்பொருளை ஆசைபபடாமலிருப்பதே ஆம். 8

179. அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேரும்
திறனறிந் தாங்கே திரு.

இது அறத்தாறென்றறிந்து, பிறர் பொருளை அசைப்படாத அறிவுடையாரைச் சேரும், அவர் திறத்தை யறிந்து அவரிடத்தே, திருமகள். 9

180. இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு.

ஒருவன் பொருளை வெளவக் கருதின், அக்கருத்து அவனுக்குச் சாதலைக் கொடுக்கும். ஒருவன் பொருள் வேண்டாமென்னுஞ் செருக்கு, வெற்றியைக் கொடுக்குமென்றவாறு. 10

வெஃகாமை முற்றும்.

---

## 19. புறங் கூறாமை

அஃதாவது, காணாத விடத்திகழ்ச்சி கூறல், கோட் சொல்லுதல் முதலாகிய புறங் கூறுதல், இல்லாமை; எனக் கொள்க.

181. அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது.

*புண்ணிய மென்றும் நாவினுற் சொல்லான், பாவங்களைச் செய்யுமாயினும், ஒருவன், கோள் முதலாயின, காணுத விடத்து இகழ்ச்சி முதலாயின புறங்கூறுனென்று உலகத்தால் சொல்லப படுவதே நன்று.* 1

**182. அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே**
**புறனழீஇப் பொய்த்து நகை.**

*புண்ணியங்களை அழித்துத் தீதுசொல்லிப் பாவங்களைச் செய்தலினும் தீமையுடைத்து, ஒருவனைக் காணுதவழி இகழ்ச்சி செய்து, கண்டவழி அவனேடு பொய் செய்து நகுதல்.* 2

**183. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்**
**அறங்கூறு மாக்கந் தரும்.**

*ஒருவருக்குக் கோட் சொல்லி, ஒருவரைக் காணுத வழி இகழ்ச்சி கூறி, கண்டவழி அவர்க் கினியனுகப் பொய் சொல்லி,* அதனுல் வரும் பொருளினுல் உயிர் வாழ்தலின், *செத்தாணுகில், அவனுக்கு அற நூல் சொல்லும் செல்வத்தைத் தரும்.*

நெடுங் காலமிருந்து புறங்கூறுமல் உடனே செத்தானுகில் நன்மையாம் *என்கின்றது.* 3

**184. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க**
**முன்னின்று பின்னேக்காச் சொல்.**

*ஒருவன் எதிரே நின்று, கண்ணேட்டம் முகவாட்டம் இல்லாமல் சொன்னுனுயினும், முன்னே நின்று நல்ல வார்த்தை சொல்லி, அவன் போன பின்பு இகழ்ச்சி சொல்ல வேண்டாம் என்றுமாம்.* 4

**185. அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்**
**புன்மையாற் காணப் படும்.**

*வாயினுல் தன்ம சாத்திரங்கள் சொன்னுலும் அவன் நெஞ்சின் நன்மையைப் புறங்கூறும் புன்மையினுலே அறியப்படும்.*

*புறங்கூறுவானுயின் நெஞ்சத்தின் நன்மையிலன் எனக் கொள்க. புண்ணியமுடைய நெஞ்சத்தை யுடையவனல்லனென்பது, புறங்கூறும் பாவச் சொல்லினு லறியப்படு மென்றுமாம்.* நன்மை யென்றும் அன்மை யென்றும் ஓதிப் பொருள் காண்க. 5

**186. பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளும்**
**திறந்தெரிந்து கூறப் படும்.**

*பிறன் இழுக்கை அவனில்லாத இடத்திற் கூறுமவனிடத்து இழுக்கையும் விசாரித்துப் பிறர் அறியும்படி அத்திறம் உடையவற்றைத் தெரிந்து அவனும் கூறப்படும்.*

*பிறன் பழியை ஒன்று சொல்லில், நூறாக விசாரித்துத் தன் பழியையும் அவன் சொல்லும் என்கின்றது.* 6

**187. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி**
**நட்பாட றேற்றா தவர்.**

*ஒருவருக் கொருவர் நட்பும் உறவுமாய் இருப்பதனைப் பிரியும்படி, பகைக்கேற்ற சொற்களைச் சொல்லிப் பிரியப் பண்ணுவர், கூடிக் கலந்து மகிழ்ச்சி(யுறு)மாறு சொற்களைச் சொல்லிஉறவாடல் அறிந்து சொல்லத் தெரியாதவர்.*

*புறங்கூறுவார்க்கு இயல்பு, பகையாக்குதலே; அன்றி, உறவாக்கும் குணம் அவர்க்கு இல்லை.* 7

**188. துன்னியார் குற்றமுந் தூற்று மியல்பினர்**
**என்னைகொ லேதிலார் மாட்டு.**

*தம்மொடு சேர்ந்து கலந்திருப்பவர் குற்றத்தையும் காணாதவிடத்துத் தூற்றும் இயல்பினை யுடையார், என்ன பயனைக் குறித்தோ அயலாரிடத்து?*

*துன்னியாரைத் தூற்றுமவர் அயலாரை யென்ன தூற்றார் என்றுமாம்.*

[குறிப்பு : தூற்று மரபினோர் என்பது அச்சுப்பாடம்.] 8

**189. அறனோக்கி யாற்றுங்கொல்வையம் புறனோக்கிப்**
**புன்சொல் லுரைப்பான் பொறை.**

*அவரவரைக் காணாதவிடத்துப் பழிப்புரைகளைச் சொல்லித் திரிவாருடலை இப்பூமி சுமப்பது தனக்கு அறனென்றோ?*

*பூமி எல்லாவற்றையும் பொறுத்தாலும் இது பொறுக்கலாகாது; தனக்குத் தரும நோக்கியோ (பொறுக்கிறது)? எனக் கொள்க.* 9

**190.** **ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பின்**
**தீதுண்டோ மன்னு முயிர்க்கு.**

*புறங் கூறுவார்கள் அயலார் குற்றமறிந்து சொல்வது போலத்* தான் புறங் கூறுவதுங் குற்றம் என்று(ம்), 'தன்னையும் அடங்கா நாவுடையான் புறங்கூறுவான்' என்று சொல்லுவார் *என்று(ம்), கூறாமல் ஒழிந்தானாகில் தீதுண்டோ* அவனுயிர்க்கு.

*உயிர்க்குத் தீதுண்டோ (என்றது), நரகமில்லை (என்று கூறியதாம்)* 10

புறங்கூறாமை முற்றும்.

---

## 20. பயனில சொல்லாமை

*அஃதாவது, தமக்கும் பிறர்க்கும் அறம், பொருள், இன்பமில்லாத சொல்லைச் சொல்லாமை; பொய், குறளை, கடுஞ் சொல், பயனில் சொல் என நான்கு சொல்லின், பயனில் சொல்லெனக் கொள்க.*

**191.** **பல்லார் முனியப் பயனில சொல்லுவான்**
**எல்லாரு மெள்ளப் படும்.**

*அறிவுடையார் பலரும் கேட்டு வெறுப்பப் பயனில்லாத சொல்லைச் சொல்லுவான், எல்லாராலும் இகழ்ச்சிப்படும்.* 1

**192.** **பயனில பல்லார்முற் சொல்ல னயனில**
**நட்டார்கட் செய்தலிற் றீது.**

*பயனில்லாத சொல்லை அறிவுடையார் பலர் முன்னே ஒருவன் சொல்லுதல், விருப்பமில்லாத செயல்களைத் தன்னட்புடையாரிடத்துச் செய்தலின் தீது.* 2

**193.** **நயனில னென்பது சொல்லும் பயனில**
**பாரித் துரைக்கு முரை.**

*பயனில்லாத பொருளை ஒருவன் விரித்துரைக்கும் உரை இவன் நீதியிலனென்பதனை வெளிப்படுத்தும்,*

பாரித்துரைக்கு முறை - அடுத்தடுத்துறுதி பெறச் சொல்வது. 3

194. நயன்சாரா நன்மையு நீங்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து.

பயன் சாராத பண்பில்லாத சொல்லை ஒருவன் பலரிடத்தும் சொல்லுமாயின், அவனிடத்து நீதியும் சேராது, நன்மையும் நீங்கிப்போம். 4

[குறிப்பு : நன்மையின் நீக்கும் என்பது அச்சுப்பாடம்.]

195. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

பயனில்லாத சொல்லை இனிய நீர்மையுடையார் சொல்லுவாராயின் அவர் சீர்மையும் சிறப்பும் நன்கு மதிப்பும் உடனே நீங்கும்.

நற்குண முடையவர் பயனில்லாத சொல்லின் அவமதிப்புப் படுவ ரென்கின்றது. 5

196. பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்.

பயனில்லாத சொல்லைப் பலகாலும் பாராட்டிச் சொல்லுவானை மகனென்று சொல்ல வேண்டா; மக்கட் பதரென்று சொல்லுக.

மக்கட் பதர், மனிதப் பதர் என்க. 6

197. நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று.

நீதியொடு படாத சொல்லைப் பெரியோர் சொன்னாலும் சொல்லுக; அதனால் குற்றமில்லை. பயனில்லாத சொல்லைச் சொல்லாமல் இருப்பதே நன்று. 7

198. அரும்பய னாயு மறிவினார் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல்.

அறிதற்கு அரிய பயனை ஆராயவல்ல அறிவுடையார் மிக்க பயனில்லாத சொல்லைச் சொல்லார்.

அறிதற் கரிய பயன் - வீடுபேறு; மேற்கதிக்குச் செலவு முதலாய் அறிவு. 8

199. பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர்.

*பயன் படும் பொருள் இல்லாத சொல்லை மறந்தும் சொல்லார், மயக்க நீங்கிய தூய அறிவை உடையார்.*

*மாசறு காட்சி - மாசற்ற அறிவு.* 9

200. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

*சொற்களில் பயனுடைய சொல்லைச் சொல்லுக; சொல்ல வேண்டா, சொல்லிற் பயனிலாத சொல்லை.* 10

பயனில சொல்லாமை முற்றும்.

---

## 21. தீவினை யச்சம்

*அஃதாவது, பாவங்களாயின செய்தற்கு அஞ்சுதல்.*

201. தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு.

*தீவினை யென்னும் செருக்கினாலே தீவினை செய்தற்குத் தீவினையார் அஞ்சார்; அத்தீவினை இல்லாமையால் நல்லவர் தீவினை செய்தற்கு அஞ்சுவார்.* 1

202. தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்.

*தனக்கு இன்பம் வருதல் கருதிச் செய்யும் தீவினைகள் பின் துன்பம் விளைவிக்கும்; ஆதலால், தீவினை கண்ட இடத்து நெருப்பினும் பயப்படவேண்டும்.*

*நெருப்பைத் தொடின் தப்பாமல் சுடும். ஆதலால் தீவினையும் தப்பாமல் சுடும் என்றது.* 2

203. அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்.

தமக்கு உறுதி நாடும் அறிவினுள் எல்லாம் தலைமையான அறிவென்று சொல்லுவார் நல்லோர், தமக்குத் தீவினை செய்யும் சத்துருக்களிடத்தும் தீவினை செய்யாது விடுதல்.

தீய செறிவார்க்குச் செய்யாவிடல் என்று பாடம் ஓதித் தீவினையாளர்க்கு உபகாரம் செய்யாது ஒழிதல் தலையறிவென்று சொல்லுவாரும் உளர். 3

**204. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்**
**அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.**

ஒருவனுக்குக் கேடுவரும் தீவினையை மறந்து எண்ணாது ஒழிக; எண்ணுவானாயின், எண்ணுவானுக்குக் கேடுவரும் தீவினையைத் தன்மதேவதை எண்ணும்.

சூழ்தல் - எண்ணல்.

ஒருவன் குடிகெடுக்க எண்ண வேண்டா; எண்ணுவான் குடியைக் கெடுக்க எண்ணும் தன்மதேவதை என்றது. 4

**205. இலனென்று தீயவை செய்யற்க**
**இலனாகும் மற்றும் பெயர்த்து.**

தான் வறியவன் என்று கருதி, அது தீரும் பொருட்டுப் பிறர்க்குத் தீவினைகளைச் செய்யாது ஒழிக; தீவினை செய்தானாயின் பெயர்த்தும் மிகவும் வறியனாவன். 5

**206. தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால**
**தன்னை யடல்வேண்டா தான்.**

தீயனவாகிய பாவங்களைப் பிறரிடத்துச் செய்யா தொழிக, நோயாகிய துன்பம் தன்னை வந்து வருத்த வேண்டாதவன்.

தீயனவாகிய செயலைப் பிறரிடத்துச் செய்யில், அத் தீயன தன்னை வந்து வருத்தும் என்றது. 6

**207. எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை**
**வீயாது பின்சென் றடும்.**

எத்துணைப் பெரிய பகை உடையாரும் அப் பகையைத் தப்பி நீங்குவர்; பிறருக்குச் செய்த தீவினைப்பயன் நீங்காது; பிறகே தொடர்ந்து வந்தடிக்கும். 7

208. தீயவை செய்தார் கெடுத னிழறன்னை
வீயா தடியுறைந் தற்று.

*பிறர்க்குத் தீவினைகளைச் செய்தார் தாம் கெடுதல், எது போலும்? எப்போது? என்னில், ஒருவன் நிழல் நெடிதாகப் போயும் அவன் தன்னை விடாது வந்தடியினிடத்து உறைந்தது போலும்.*

*தீவினை போகாது* வருங்காலத்து வந்து அழிக்கும் என்றது. *8*

209. தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்.

*தான் துன்பப்படாமல் (இருக்கத்) தன்னைத் தான் ஆசைப் படுவானாகில், தீவினைப் பகுதிகளை எவ்வளவும் செய்யாது ஒழிக.*

எனைத்தொன்றும் என்பது, எத்துணையும் சிறிதாயினும் செய்ய வேண்டா என்றது; தான் துன்பப்படாமல் இருக்க ஆசைப்படுவன், பிறர்க்கும் துன்பம் செய்ய வேண்டா என்றது. *9*

210. அருங்கேட னென்பதறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின்.

*ஒருவரிடத்து ஓடித் தீவினை செய்யாது ஒழிவனாயில், அவனுக்குக் கேடு இல்லை என்று அறிக.*

*அருங்கேடு என்பது, கெடுதல் அருமை எனக் கொள்க.* *10*

தீவினை யச்சம் முற்றும்.

---

## 22. ஒப்புர வறிதல்

*அஃதாவது, உலக நடையறிந்து ஒருவருக்கொருவர் உதவி செய்து ஒப்புரவாக நடத்தல்.*

211. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு.

பருவமறிந்து மழை பெய்யும் *மேகத்திடத்து உலகுள்ள உயிர்கள் என்ன கைம்மாறு செய்கின்றன? ஆதலால், அம்மேகம் போல்வார், அவரவர்* பருவம் அறிந்து ஒப்புரவு செய்வதும் *கைம்மாறு* நோக்குவன வல்ல. *1*

212. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

*தகுதியுடையார் தாளாண்மை செய்து தேடிய பொருள் எல்லாம் தக்கவர்களுக்கு ஒப்புரவு செய்தற் பொருட்டு.*

*தாளாண்மை - தொழில். வேளாண்மை - உபகாரம். தேடுதல் எல்லாம் தாமே யுண்ணவும் வைத்திழக்கவுமல்ல, உபகாரம் செய்தற் பொருட்டென்றவாறு.* 2

213. புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
ஒப்புரவி னல்ல பிற.

*தேவருலகத்தும் இவ்வுலகத்தும் ஒப்புரவு போல நல்லன பிற செயல்களைப் பெறுதலரிது.*

*இம்மை மறுமைக்கு நல்லன ஒப்புரவே; மற்றில்லை என்றவாறு.* 3

214. ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

*உயிரோடு கூடி வாழ்வானுவான் உலகநடை அறிந்து ஒப்புரவு செய்வான்; அது அறிந்து செய்யாதவன் முன் செத்தாரோடு ஒன்ருக வைக்கப்படுமாம்.*

முன் செத்தவர் இருப்பவர்க்கு உபகாரம் இல்லை; ஆதலால் உயிரோடு இருந்தும் செத்தவனும். 4

215. ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு.

*உலகத்தில் உள்ளார்க்கு எல்லாம் உபகாரமும் பெரிய அறிவும் உடையான் செல்வம், ஊருள் வாழ்வாரெல்லா முண்ணுங் குளம் நீர்நிறைந்தாற் போலும்.* 5

216. பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்ருற் செல்வம்
நயனுடை யான்கட் படின்.

*நயனுகிய ஒப்புரவுடையானிடத்துச் செல்வம் உண்டாயின் அச் செல்வம் பயன்படுதல் மரம் ஊர்நடுவே பழுத்தாற்போலும்.* 6

217. மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்.

செல்வம் ஒப்புரவு செய்யும் பெரிய தகைமை உடையானிடத்து உண்டாயின், அது பூ இலை, தளிர், காய், கனி, வேர்கள், மூலமும் தப்பாமற் பிணிகள் தீர்க்கும் மருந்தாகிய மரம் போலப் பயன்படும்.

218. இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

இடம், பொருள், ஏவல் சுருங்கிய காலத்தும் ஒப்புரவு செய்தற்கு மனமொடுங்கார், தம்மாற் செய்யத் தகுவனவற்றைச் செய்வார், உலக முறைமை அறிந்த அறிவுடையார்.

காட்சி - அறிவு. 8

219. நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர்மை
செய்யா தமைகலா வாறு.

ஒப்புரவு செய்யும் நயனுடையான் வறுமை உடையான் ஆதல், உலகத்துச் செய்யும் செயலைச் செய்து அமையாது தவிர்ந்து கிடந்தது போலும்.

உலகத்துச் செய்யும் செயலைச் செய்யாது தவிர்ந்தவன் வருந்துவது போல, ஒப்புரவு செய்வான் வறுமை யடைந்தானாயின், வறுமையாற் கிலேசப் படான். ஒப்புரவு செய்யக் கூடாமையாற் கிலேசப்படுவான் எனக் கொள்க. 9

[குறிப்பு : செயும்நீர என்பது அச்சுப்பாடம்.]

220. ஒப்புரவி னல்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து.

ஒப்புரவு செய்தலால் ஒருவனுக்குப் பொருட் கேடு வரும் என்பாருளராயின், அக்கேடு தன்னை விற்றாயினுங் கொள்ளும் தகுதி யுடைத்து.

தன்னை விற்று, கொள்ளும் ஒரு பொருளில்லை ; இது தன்னை விற்றுக் கொள்ளலாம் என்றது. ஒப்புரவு செய்து கேடாகிய வறுமை வரும் புகழைப்(ப் பெற) தன்னை விற்றும் கொள்ளலாம் எனக் கொள்க. 10

ஒப்புர வறிதல் முற்றும்.

## 23. ஈகை

அஃதாவது, வறுமையானேற்றார்க்கு மாற்றாது கொடுத்தல்.

221. வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

ஒன்றும் இல்லா வறுமையால் ஏற்றார்க்குக் கொடுப்பதே கொடை; அது அன்றி, மற்றைக் கொடை எல்லாம் ஒன்றைக் குறித்துக் கொடுக்கும் எதிர்ப்பை நீர்மையை யுடைத்து.

எதிர்ப்பையாவது, ஒருவரால் வரும் பயனைக் குறித்துக் கொடுப்பது. 1

222. நல்லா றெனினுங் கொளறீது மேலுலகம்
இல்லெனினு மீதலே நன்று.

வீடு பேறு பெறுதற் கேற்ற அறநெறி எனினும், ஒருவர் கொடுப்ப, ஒருவர் கையினால் ஏற்றல் தீது. கொடுத்தலால் மேல் உலகம் இல்லை எனினும் ஒருவர் ஏற்ப ஒருவர் கொடுத்தலே நன்று.

இது, கொடுத்தலின் மேம்பாடும், ஏற்றலின் இழிவும் கூறியது. 2

223. இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள.

ஏற்பான் தன் வறுமை வருத்தம் உரையாத முன்னே கொடுப்பது நற்குலம் உடையானிடத்தே உள.

இன்னும் அதற்கே உரை: ஏற்பான் வறுமையாற் சொல்லும் இளிவரவைப் பிறர்க்குச் சொல்லாமற் கொடுத்தல் நல்ல குலம் உடையானிடத்து உள.

இன்னும்: கொடுப்பான்றன் வறுமையை ஏற்பானுக்குச் சொல்லாமல் கொடுப்பது குலனுடையான் இடத்தே உள.

இம் மூவகைப் பொருளுரையும் இக் குறளகத்துக் கண்டு கொள்க.

எவ்வம் - வருத்தம். 3

224. இன்னா திரக்கப் படுத லிரந்தவர்
இன்முகங் காணு மளவு.

இரக்கப் போமவனுக்கு மனவருத்தம் இன்னுது, கொடுப்பவன் இனிய முகங்காணுமளவும்; இனிய முகங் கண்ட இடத்து அவன் வருத்தந் தீரும் என்றவாறு.

*இன்னும் அதற்கே உரை: கொடுப்பானுக்கு மனவருத்தம் இன்னுது, ஏற்பவன் தான் கொடுத்த பொருளினுல் இனிய முகம் காணும் அளவாம்.*

*ஏற்பவன் மனமகிழ்ந்து முகமலரும் அளவும் கொடுப்பவனுக் கும் இன்னுது; ஏற்பவன் முகம் இனிய ஆனபின்பு கொடுப்பனுக் கும் இனிதாம் எனக்கொள்க.*

*இன்னுது என்பது,* மனவருத்தம் பொல்லாது என்றது. 4

225. ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின்.

*தவம் செய்வார்க்கு வலியாவது தம் பசியைப் பொறுத்துத் தவம் செய்தல்; அவர் வலியாற் பொறுத்தற்கரிய பசியை ஈகையால் ஒழிப்பார் வலிமைக்குப்பின் அத் தவத்தோர் வலிமை.*

*தவம் செய்வார் வலிமையினும் கொடுப்பார் வலிமை பெரிது என்றது,* தவம் செய்வதற்கு மனம் கூடும், கொடுப்பதற்கு மனம் கூடாது; மனம் கூடிக் கொடுப்பவனே தவம் செய்வாரில் அதிகம் என்றது. 5

226. அற்ரு ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்ருன் பொருள்வைப் புழி.

*வறியார் மிக்க பசியைத் தீர்க்கப் பெற்ருல் அது ஒருவன் பொருள் வைக்குமிடம் பெற்ருனும்.*

தனக்கு அழியாப் பொருளைப் பெற்ருன் எனக் கொள்க. 6

227. பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னும்
தீப்பிணி தீண்ட லரிது.

*எல்லார்க்கும் பகுத்திட்டு உண்ணுதல் மருவினவனை, வறுமை யால் வரும் பசியென்னும் தீப்பிணி தீண்டுதலில்லை.*

பசி, யாவர்க்கு முள அப்பசியன்●; வறுமையால் வரும் பசியென்னும் தீய பிணி வாரா தென்றவாறு. 7

228. ஈத்துவக்கு மின்ப மறியார்கொ ருமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

8

தம்முடைய பொருளை வறியவற்கு ஈந்து அதனால் வரும் இன்பத்தை அறியார் கொல்லோ, பொருளை வைத்திழந்து செத்துப்போம் வன்கண்மை யுடையவர்?

வன்கண்மை - ஈதலிரக்கம் இல்லாத தறுகண்மை. ஈந்துவக்கும் என்பதை ஈத்துவக்குமென்று வல்லொற்றுகக் கூறினர். ஈந்துவக்குதல், ஈந்து மகிழ்ச்சி அடைதல். 8

229. இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல்.

பொருள் நிறைய உடையவர் இரப்பவர்க்கு இட்டு உண்ணாது, தானே தனித்து உண்ணல், இரந்து உண்டு உயிர் வாழ்தலினும் பொல்லாது.

இரந்து உண்டு உயிர் வாழ்தல் பொல்லாது; அதனிலும் பொல்லாது செல்வர், இடாது உண்டு உயிர் வாழ்தல் என்க. 9

230. சாதலி னின்னாத தில்லை யினிததூஉம்
ஈத லிசையாக் கடை.

ஒருவனுக்குச் சாவது போலப் பொல்லாது ஒன்றும் இல்லை; வறுமையால் வந்து இரந்தவர்க்குப் பொருள் இசையாத வழி பொல்லாதாகிய சாதலே இனிது.

கொடுத்து வாழ இல்லாத பொல்லாதிலும், சாதலாகிய பொல்லாது நல்லதாம் என்றவாறு. 10

ஈகை முற்றும்.

---

## 24. புகழ்

அஃதாவது, கீர்த்தி, மனம், வாக்கு, காயத்தாற் கொடுத்தலால் வரும் கீர்த்தி எனக் கொள்க.

231. ஈத லிசைபட வாழ்த [illegible]துவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு.

வறியார்க்கு ஈதல், அதனால் வரும் புகழ் உண்டாதல். அப்படி வாழ்தலல்லது, உயிருக்குப் பிறிது பயனில்லையாம்.

கல்வி, ஆண்மை, முதலாகிய எல்லாம் உண்டு உடுத்தல் காரணம் ஆதலால், ஈதல் சிறப்பு எனக் கொள்க. எல்லாக் கீர்த்தியும் ஈதல் கீர்த்திக்கு ஒவ்வாது எனக் கொள்க. 1

**232. உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்**
**றீவார்மே னிற்கும் புகழ்.**

உலகத்து உரைப்பார் உரைப்பன எல்லாம், வறுமையான் இரப்பார்க்கு ஒரு பொருள் கொடுப்பார்மேல் நிற்கும் புகழாம்.

உரைப்பார் உரைப்பவை என்பது, சொல்லுவார் சொல்லுவன என்றுமாம். அதுவன்றி, உரையும் பாடலுமாகிப் பாடுவார் பாடுவன எல்லாம் இரப்பார்க்குக் கொடுக்கும் புகழ் எனக் கொள்க. 2

**233. ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்**
**பொன்றாது நிற்பதொன் றில்.**

தனக்கு ஒப்பில்லாத ஓங்கிய புகழல்லது உலகத்துத் தவறாது நிற்பது பிறிதொன்றில்லை. 3

**234. நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்**
**போற்றாது புத்தே ளுலகு.**

ஒருவன் நிலவெல்லையில் நெடுங்காலம் நிற்கும் புகழைச் செய்யுமாயின், புத்தேளுலகம் புகழ் செய்தவனையல்லது தேவரைப் போற்றாது.

புத்தேளுலகம் - தேவர் உலகம். தேவரைப் போற்றாமல் புகழாளரைப் போற்றுதல், தேவரால் புகழாளரைச் சிறப்புச் செய்வித்தல். "புலவர் பாடும் புகழுடையோரே, வலவனேவா வானவூர்தியிற், றேவருலகிற் சிறப்பினெய்துவர்' (புறம்.) என்பதனால் அறிக. 4

**235. நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்**
**வித்தகர்க் கல்லா லரிது.**

புகழ் உடம்பிற்குச் செல்வமும், பூத உடம்பிற்குக் கேடும் உண்டாகும் சாக்காடும், சதுரப்பாடு உடையார்க்கல்லது மற்றவர்க்கு அரிது.

போல் என்பது உரையசை. இன்னும் அதற்கே உரை: நத்தம் என்னும் சொற்குப் பொருள் கேடும் ஆக்கமும் ஆதலினால், நத்தம் என்னும்

சொல்போலக் கேடும் ஆக்கமும் உளதாகும்; பூத உடம்பு கெடப் புகழ் உடம்பு செல்வம் உளதாகும்; அப்படியாகும் சாக்காடு புகழ் செய்தவர்க்கு அல்லது மற்றவர்க்கு அரிதெனவும் கொள்க.

நந்தம் - சங்கம். அதுபோல, கேடும் உளதாகும்; சாக்காடும் என்பது, சங்கினை அரிதல், கேடு; உளதாகுவது முத்துண் டாதல்; அப்படியாகிய சாக்காடு பூத உடம்பு கெட, முத்துண் டாகுவதுபோலப் புகழ் உடம்பு உண்டாதல்.

அச் சாக்காடு புகழ் உடையார்க்கு அல்லது மற்றவர்க்கு அரிது எனக் கொள்க. இப்படி மூன்றுவகை உரையும் கண்டு கொள்க.

நந்து, நத்தம் என வல்லொற்றும் அம்முச் சாரியையும் கொள்க. 5

236. தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

மக்களாய்ப் பிறக்கிற புகழுக்கு ஏதுவாகிய குணத்தோடு பிறக்க, அக் குணம் இல்லாதார் மக்களாய்ப் பிறத்தலின் மிருக மாய்ப் பிறத்தல் நன்று. 6

237. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவ தெவன்.

தமக்குப் புகழ் உண்டாக வாழமாட்டாதாரைப் பிறர் இகழ்ச்சி செய்த வழி இவ்விகழ்ச்சி நாம் புகழ்பட வாழாமையான் வந்தது என்று தம்மை நோவாதே தம்மை இகழ்வாரை நோவதென் கருதி? 7

238. வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னும்
எச்சம் பெறாஅ விடின்.

புகழ் என்னும் பிள்ளையைப் பெறலாயிருக்க, அப் புகழ் என்னும் பிள்ளையைப் பெறாது ஒழிவாராயின், வையத்தார்க்கு எல்லாம் அதுதானே வசையாய்ச் சொல்வர் அறிவுடையார்.

எச்சமென்றார் பிள்ளை பெற்றான் இறந்துபோகப் புகழ் என்ற பிள்ளை, இருந்தவன் பேரை விளக்[illegible]வைக்கும் என்பதாதலின். 8

239. வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

புகழ் இல்லாத உடம்பைச் சுமந்த பாவத்தால் நிலமானது வசையில்லாத விளைவும் குன்றிப்போம்.

பாவ உடம்பைச் சுமக்காமல் உடனே போடாத பாவத்தால் நிலமும் விளைவு குன்றும் என்றது. 9

240. வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

தம்மிடத்து வசை இல்லாமல் வாழ்பவரே உயிரோடு கூடி வாழ்வார். புகழ் உண்டாக வாழமாட்டாது வாழ்ந்தாலும் இறந்து போனவராம்.

வசை ஒழிய வாழ்தலே இல்வாழ்க்கை. புகழ் ஒழிய வாழ்தலே வாழ்ந்தாலும் இல்வாழ்க்கை அல்ல என்றவாறு. 10

புகழ் முற்றும்.

இல்லற வியல் முற்றும்.

---

## துறவற வியல்

### 25. அருளுடைமை

அஃதாவது, தொடர்ச்சி பற்றுது இயல்பாக எல்லா உயிர்கள்மேலும் மனம் செல்லும் கருணை எனக் கொள்க. இல்லறத்துக்கு அன்புடைமையும், துறவறத்துக்கு அருளுடைமையும் முதலுறுப்பு என்கிறது.

241. அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.

செல்வங்கள் பலவற்றுள்ளும் ஆராய்ந்து எடுக்கப்பட்ட செல்வமாவது, அருளாகிய செல்வமே. மற்ற பொருளாகிய செல்வம் இழிந்தாரிடத்தும் உளவாம். 1

242. நல்லாற்று னாடி யருளாள்க பல்லாற்றுன்
தேரினு மஃதே துணை.

நல்ல ஆகம சாத்திரங்களினால் நாடி, நல்ல சமயங்களிலே நின்று, நமக்குத் துணையான அறன் யாதென்று ஆராய்ந்து, அருளை உடையவராக ; ஒன்றையொன்று ஒவ்வாத சமய நெறிகள் எல்லா

வற்றுளும் ஆராய்ந்தாலும் உயிர்க்குத் துணையாவது அருளே; பிறிதொன்று இல்லை. 2

243. அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல்.

இருள் செறிந்த துன்ப உலகத்துச் சென்று புகுதல், அருள் செறிந்த நெஞ்சினை உடையார்க்கு இல்லை.

இருள் செறிந்த பொல்லா உலகமாகிய நரக உலகம் இல்லை, அருளுடைய நெஞ்சினார்க்கு எனக் கொள்க. 3

244. மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை.

நிலை பெறுடைய உயிர்களைப் பேணி, உயிர்களிடத்து அருளுடையன் ஆவானுக்குத் தன் உயிர் அஞ்சும் துன்பமாகிய தீவினை இல்லை. 4

245. அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி.

அருளுடையார்க்கு இம்மையினும் மறுமையினும் ஒரு துன்பமும் இல்லை. அதற்குச் சாட்சி யார் என்னில், காற்று வழங்கும் பெரிய பூமியே சாட்சியாம். 5

246. பொருணீங்கிப் பொச்சாந்தார் என்ப ரருணீங்கி
அல்லவை செய்தொழுகு வார்.

உயிர்களிடத்துச் செய்யும் அருளைத் தவிர்ந்து, கொடுமை செய்து திரிவார், தமக்கு முன் செய்த நல்வினையாகிய பொருளைத் தவிர்ந்து, துன்புறுகின்றதை மறந்தவர் என்று சொல்வர் அற நூல் அறிந்த பெரியோர்.

அருள் இல்லாமல் கொடுமை செய்பவர், நல்வினைப் பொருளை இழப்பதை மறந்தவர் எனக் கொள்க. 6

247. அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளிலார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு.

உயிர்கள்மேல் அருள் இல்லாதவர்க்குச் சுவர்க்க லோகத்து இன்பம் இல்லை; பொருள் இல்லார்க்கு இவ்வுலகத்து இன்பம் இல்லாதுபோல.

*இவ்வுலகத்து இன்பத்திற்குப் பொருள் காரணமானதுபோல, அவ்வுலகத்து இன்பத்திற்கு அருள் காரணம் எனக் கொள்க.* 7

**248. பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றார்
அற்றார்மற் றாத லரிது.**

*ஊழ்வினையால் வறியர் ஆனவரும் ஒரு காலத்துச் செல்வர் ஆவர். அப்படி ஆகமாட்டார்,* அருள் இல்லாதவர்; பாவம் *தீராமையால் அழிந்தார் பின்னொரு காலத்தும் ஆகுதல் அரிது.* 8

**249. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரின்
அருளாதான் செய்யு மறம்.**

*உயிரிடத்து அருள் செய்யாதவன், செய்கின்ற துறவறம், ஆராயின், ஞானம் இல்லாதவன் மெய்ப்பொருளைக் கண்டது போலும்.*

ஞானம்-மெய்ப் பொருள்; நூல் அறிந்து மெய்க் குருவினால் வரும் ஞானம். அஃது இல்லாதவன் மெய்ப் பொருளைத் தன் மயக்க உணர்வினால் உணர்ந்தது போலும். *9*

**250. வலியார்முற் றன்னை நினைக்கத்தான் தன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.**

*தன்னின் வலியார் தன்னை நலிய வரும்பொழுது, அவர் முன் தான் அஞ்சி நிற்கும் நிலையை நினைக்க; அருள் இல்லாதவன், தன்னின் எளியார்மேல் தான் வலியச் செல்லும்போது.* 10

அருளுடைமை முற்றும்.

---

## 26. புலால் மறுத்தல்

*அஃதாவது, புலாலை உண்ணாமல் விடுதல்.*

**251. பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
ஆங்கில்லை யூன்றின் பவர்க்கு.**

பொருளை வருந்தித் தேடிப் போற்றாதவனுக்குப் பொருள் இல்லை. *அது போல,* அருளைச் செலுத்துதலும் அவ்விடத்து இல்லை ஊனைத் தின்பவர்க்கு.

ஆங்கில்லை என்பது, ஊனை உடைய உயிரிடத்து அருள் இல்லை, ஊன்றின்பவர்க்கு எனக் கொள்க. 1

[குறிப்பு: *251, 252 செய்யுட்கள் அச்சுப் பிரதிகளில் முன் பின்னாக அமைந்துள்ளன.*]

**252. தன்னூன் பெருத்தற்குத் தான்பிறி தூனுண்பான்**
**எங்ஙன மாளு மருள்.**

*தன் உடம்பு பெருத்தற்குப் பிறிதோர் உயிரின் உடம்பைத் தின்பவன் எவ்விடத்து அருளை உடையவனாவான்?*

*தன் உடம்பிற்கு அருள் வைப்பான், பிறிதோர் உடம்புக்கு அருள் இல்லாமையால்; எங்ஙனம், யாண்டு போயதோ அருள்? என்றுமாம்.* 2

[குறிப்பு: பெருக்கற்குத் *என்பது அச்சுப் பாடம்.*]

**253. படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்றின்**
**உடல்சுவைத் துண்டார் மனம்.**

*கொலை செய்யும் கருவியைத் தம் கையில் கொண்டவர் மனம், அவ்வூனை நோக்குவது அல்லது, அருளை நோக்காது. (போல), பிறிதோர் உயிரின் உடலைச் சுவைத்து உண்டவர் மனம் அருளை நோக்காது.*

*சுவைத்து உண்ணல் - சுவை உண்டாகப் பல காயங்கூட்டிச் சமைத்துச் சுவைபட உண்ணுதல்.* 3

[குறிப்பு: சுவையுண்டார் *என்பது அச்சுப் பாடம்.*]

**254. அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்**
**பொருளல்ல தவ்வூன் றினல்.**

*அருள் யாதெனில், கொல்லாமை. அருளல்லதி யாதெனில், கொல்லுதல். ஆதலால் கொல்லுதலான ஊனைத் தின்னுதல் பொருள் அல்லாத பாவமாம்.*

*பொருள் - புண்ணியம். பொருளல்லது - பாவம் என்றது.* 4

**255. உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண**
**அண்ணாத்தல் செய்யா தளறு.**

ஊன் உண்ணுமையான் உள்ளது உயிர்நிலையாகிய ஊன் உடம்பு. அந்த ஊனை ஒருவன் உண்ண, அவனை நரகம் உண்ணும். பின் உமிழ்ந்துவிட அந்த நரகம் வாயைத் திறவாது.

அண்ணுத்தலாவது : அண்ணுந்து வாயைத் திறத்தல். 5

**256. தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்**
**விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.**

ஊன் உண்ணல் காரணமாக உலகத்து உள்ளவர் கொல்லாராயின், பொருள் காரணமாக ஊன் விற்பார் யாவரும் இல்லை.

ஊன் தின்பாரைக் குறித்து உயிரைக் கொன்று ஊன் விற்பாரும் உளர் எனக் கொள்க. ஆதலால் தின்பார்மேல் கொன்ற பாவம் ஒன்றும் எனக் கொள்க. 6

**257. உண்ணுமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றின்**
**புண்ண துணர்வார்ப் பெறின்.**

புலாலாவது பிறிதோர் உடம்பின் தசை; தூயதன்று; என்று உணர்வான் அறிவாரைப் பெறின், இத் தன்மைத்தாய ஊனை உண்ணுது ஒழிக என்று மறுக்கலாம்.

அப்படி அறியாதார் சொன்னல் கேளார் என்றவாறு. 7

**258. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணுர்**
**உயிரிற் றலைப்பிரிந்த வூன்.**

மயக்கமாகிய குற்றத்தை நீங்கித் தெளிந்த அறிவுடையார் ஓர் உயிரினைவிட்டு நீங்கிய ஊனை உண்ணுர். 8

**259. அவிசொரிந் தாயிரம் வேட்டலி னென்றன்**
**உயிர்செகுத் துண்ணுமை நன்று.**

தீயின்கண் நெய் முதலிய அவிகளைச் சொரிந்து, ஆயிரம் வேள்வி செய்யினும், ஒரு மிருகத்தின் உயிரைப் போக்கி நின்ற ஊனை உண்ணுமை நன்று.

ஆயிரம் வேள்வி செய்த புண்ணியத்திலும் அதிகம் கொல்லாமை, புலால் உண்ணுமை விரதங்களை அனுட்டிக்கும் புண்ணியம், என்றவாறு.

**260. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா வுயிருந் தொழும்.**

ஓர் உயிரையும் கொல்லானுமாய், புலாலையும் உண்ணாதவனு மாய் இருப்பானை, மறுமையில் அவனை எல்லா உயிரும் தொழும் என்றவாறு.

அவ்விரதத்தால், தேவனுவன் என்றது. 10

புலால் மறுத்தல் முற்றும்.

---

## 27. தவம்

அஃதாவது, புலன் பொறிவழி போகாது நிற்றல்; விரதங் களை அனுட்டித்தல்; உண்டி சுருக்குதல்; கோடையில் வெய்யிலி னிற்றல்; மாரியினும் பனியினும் நீரிடை நிற்றல்; யோகத்தின் இருத்தல்; ஞானத்தின் ஒழுகுதல்; முதலாய அனுட்டிக்கும் இடத்து வரும் துன்பங்களைப் பொறுத்தல் **தவம்** என்றது.

**261. உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை**
**அற்றே தவத்திற் குரு.**

விரதங்களை அனுட்டித்து, உண்டி சுருக்கல் முதலியவற்றால் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்தலும், தாம் பிற உயிர் கட்குத் துன்பம் செய்யாமையுமாகிய அவ்வளவிற்றே தவத்திற்கு வடிவு என்றவாறு.

மற்றுள்ளனவும் இவற்றுள்ளே அடங்கும் எனக் கொள்க. 1

**262. தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை**
**யஃதிலார் மேற்கொள் வது.**

முன் தவம் செய்தவர்க்கே தவம் பலிக்கும்; முன் தவம் இல்லாதவர் தவம் செய்ய முயல்வது அவமாம்.

முன் தவம் செய்தார்க்குத் தவம் ஈடேறும்; முன் தவம் இல்லார்க்குத் தவத்துக்கு இடையூறு வரும். 2

**263. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்**
**மற்றை யவர்க டவம்.**

முழுவதும் துறந்தவர்க்கு உண்டி முதலிய வேண்டி இல்ல றத்தை உடையவர், துறவறத்தை மறந்தார்கொல்?

இல்லறத்தை உடைய மற்றையவர், தவத்தை உடையவர்க்குத் துய்த்தலை விரும்பித் தவத்தை மறந்தார் கொல்லோ எனக் கொள்க. 3

264. ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலும்
எண்ணிற் றவத்தான் வரும்.

தன்மத்திற்குப் பகை செய்வாரைக் கெடுத்தலும், தன்மத்திற்கு உவந்தாரைச் செல்வர் ஆக்குதலும், தவத்தை உடையவர் நினைப்பின், அவர் தவப் பலத்தினால் உடனே வரும்.

தவம் செய்வார்க்கு ஒன்னாரும் உவந்தாரும் இல்லையாயினும், அவர் எண்ணில், கேடும் செல்வமும் அவர்க்கு வரும் என்றது. 4

265. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்.

தவம் முன் தான் வேண்டிய வேண்டிய பயன்கள் எல்லாம் மறுமைக்கண் ஆங்கு வந்து கிடைத்தலால், செய்யப்படுவதாய தவம் இம்மையிலே செய்ய வேண்டும். 5

266. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வா ராசையுட் பட்டு.

தம் கருமம் செய்வார் ஆவார் துறந்து தவத்தைச் செய்வார்; அவரல்லாத மற்றவர்கள், பொருளும் இன்பமும் ஆகிய ஆசை வலையுட்பட்டுத் தமக்குக் கேடு செய்வார். 6

267. சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

நெருப்பின்மேல் வைத்து உருக்க உருக்க, பொன்னொடு கலந்த மாசு நீங்கி, மாற்றேறி ஒளி வீசுதல் போலத் தவத்துன்பம் சுடச்சுட நோற்பாற்குத் தன்னொடு கலந்த பாவம் நீங்கி ஞானம் மிகும். 7

[குறிப்பு: நோக்கிற் பவர்க்கு, என்பது அச்சுப்பாடம்.]

268. தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.

தன் உயிரைத் தான் தனக்கு உரித்தாகப் பெற்றானை, அப்படிப் பெறாதனவாகிய மன்னுயிர்கள் எல்லாம் தொழும்.

தன் உயிர் தனக்கு உரித்தாகப் பெறலாவது, தன் கருமம் செயல் என்க. அல்லதூம், தன் உயிர் தானறப் பெற்றானை என்பது தன் உயிர் தான் என்னும் சம்பந்தமறத் தவம் செய்து பெற்றானை என்றுமாம். 8

**269. கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலின்**
**ஆற்றல் தலைப்பட் டவற்கு.**

கூற்றுவன் தன்னை வந்து பிடியாமல் கடத்தலும் உண்டாம், தவத்தான் வரும் வலியைத் தலைப்பட்டவற்கு. 9

[குறிப்பு: தலைப்பட்டவர்க்கு என்பது அச்சுப் பாடம்.]

**270. இலர்பல ராகிய காரண நோற்பார்**
**சிலர்பலர் நோலா தவர்.**

உலகத்துச் செல்வர்கள் சிலராகவும், வறுமையாளர் பலராகிய காரணம் யாதென்னில், நோற்பார் சிலர், நோலாதவர் பலர்.

தவம் செய்வார் சிலர்; தவம் செய்யார் பலர் எனக் கொள்க. தவம் செய்தல் செல்வம்; தவம் செய்யாமை வறுமை என்றது. 10

**தவம் முற்றும்.**

---

## 28. கூடாவொழுக்கம்

அஃதாவது, தவங் கூடாத ஒழுக்கம்; பொய்யொழுக்க மெனக் கொள்க.

**271. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்**
**அஞ்சு மகத்தே நகும்.**

வஞ்சம் பொருந்திய மனத்தை உடையவன் பொய்த்தவ வேட ஒழுக்கத்தை, உடம்பாய் அவனோடு கலந்த பஞ்ச பூதங்களும் கண்டு தம்முள்ளே தாம் நகைக்கும்.

படிற்றொழுக்கம் - கள்ள வொழுக்கம்: அது, துறவற வேடங் கொண்டும் பொன்னாசை, பெண்ணாசை போகாமை. 1

[குறிப்பு: ஐந்து, என்பது அச்சுப்பாடம்.]

272. வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சம்
தானறி குற்றப் படின்.

ஒருவனுக்குப் பொய்யாகிய தவவேடம் பலிப்பென்ன பயனைத் தரும்? தரமாட்டாது. தன்னெஞ்சே தனக்குச் சாட்சியாக நிற்கப் பெண்ணாசை பொன்னாசையாகிய குற்றஞ் செய்வாற்கு?

தன் மனமறிந்த குற்றம் தன்னிடத்திருக்க, வேடப் பலிப் பென்ன பயனைத் தரும் என்றது. வானுயர் தோற்றம் - மிகுந்த வேடப் பலிப்பு. 2

273. வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.

மனத்தைத் தன்வழிப் படுத்துந் தவவலி யில்லாதவன், தவவலி உடையார் வேடத்தைப் பூண்டு திரிதல், பசுவானது புலித்தோலைப் போர்த்துக் கொண்டு பயிரை மேய்ந்தாற் போலும்.

பசுவானது, புலியென்று பயப்பட வேண்டுமென்று, புலித் தோலைப் போர்த்துக் கொண்டு பயிரை மேய்ந்தாற் போலும், மனத் துறவில்லாதவர் சோற்று நிமித்தமாகத் தவவேடங் கொள்வ தெனக் கொள்க. 3

274. தவமறைந் தல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

தவவேடங் கொண்டு தவமல்லாத பொல்லாச் செயலைச் செய்யுந் தவவேடம் எத் தன்மைத் தென்னில், காட்டிற் செடிபி னிடத்து மறைந்து நின்று, வேடன் பறவைகளைப் பிடிக்கத் தீவகமாக ஒரு பறவையைக் கட்டி வைத்தது போலும்.

புதல் மறைதல்: தான் செடிபோலத் தழைகளைப் புனைந்து செடிபோல நின்று, கூடு வைத்து அங்குக் கூட்டுக்குள்ளே, ஒரு பறவையும் வைத்து மற்றப் பறவைகளைப் பிடிக்கும் வேடனைப் போலும் பொய்த்தவ வேடம் பூண்ட தெனக் கொள்க. 4

275. பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
றேதம் பலவுந் தரும்.

தம்மைப் பிறர் நன்கு மதிக்கத் தவவேடம் பூண்டு, பொன் னாசை, பெண்ணாசை யென்னும் பற்று விட்டோமென்று சொல்

வார், பொய்யொழுக்கம் பின்பு தமக்கப்பாவம் பலிக்கும்போது, என்செய்தோம் என்செய்தோம், என்று தாமே இரங்குந் வகை பல துன்பங்களையும் கொடுக்கும். 5

**276. நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்.**

நெஞ்சில் ஆசையறுது, ஆசையற்றவர் போன்று, தமக்குக் கொடுப்பார்க்குப் பொய்வேடங் காட்டி வாங்கித் தின்று, வாழ்வாரைப் போல வன்கண்ணரில்லை.

அருந் தவரென்று, அறியாது பெரும் பொருள் கொடுத்தவற்குப் புண்ணியமில்லாமற் பாவம் வருதலால், வஞ்சித்தலெனக் கொள்க. 'அடங்கலர்க் கீந்த தானப் பயத்தினா லலறு முன்னீர்த், தடங்கட னடுவுட் டீவு பலவுள வவற்றுட் டோன்றி, யுடம்பொடு முகங்க ளொவ்வா ரூழ்கனி மாந்தி வாழ்வர் மடங்கலஞ் சீற்றத்துப் பின்றானைவேல் மன்னரன்றே' (சீவக. 2842) என்பதனாலறிக. 6

**277. புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.**

குன்றி விதை போல, வேடப் பலிப்பாயினும், நெஞ்சங் குன்றியின் மூக்குக் கறுப்புப் போல இருக்கும்.

பொய் வேடத்தர் வடிவு, குன்றியின் சிவப்புங் கறுப்பும் போல விருக்கும், வேடமும் நெஞ்சமும் எனக் கொள்க. 7

**278. மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.**

மாசு தன் மனத்திலிருக்கப் பிறர் தவமுடையவனென்று நன்கு மதிக்க, மாட்சிமையுடைய நீரிலே மூழ்கித் தம்மைத் தவ வேடத்தினாலே மறைத்துத் திரியு மாந்தருலகத்துப் பலர்.

மாசு - காமம், வெகுளி, மயக்கம். அவை போகத் தவநீரிலே மூழ்காது, கள்ளத்தான் விரத நீரிலே முழுகுவார் போலத் திரிதல் எனக் கொள்க. 8

**279. கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல்.**

அம்பு வடிவாற் செவ்விதாயினும், செயலாற் கொடிது; யாழ் வடிவாற் கோணலாயினும், செயலாற் செவ்விது; அவ்வகை போலத் தவவேடங் கொண்டு கொடிது செய்வாரையும், தவவேடங் கொடிதாகத் தவஞ் செய்வாரையுஞ் செயலால் அறிந்து கொள்க.

சில தவசிகளுக்கு வேட மாறுபாடு முளவெனக் கொள்க. கணை, துன்பம் விளைவிக்கும்; யாழ், இன்பம் விளைவிக்கு மாதலால் அறிக. 9

**280. மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடல்.**

மொண்ணைத் தலையாகவும் வேண்டா; சடைத்தலையாகவும் வேண்டா; உயர்ந்தோர் தவத்திற்காகாதென்று குற்றங் கூறிய ஒழுக்கத்தை ஒழித்து விடல். 10

[குறிப்பு: விடின் என்பது, அச்சுப் பாடம்.]

கூடாவொழுக்கம் முற்றும்.

---

## 29. கள்ளாமை

அஃதாவது, பிறர் பொருள் யாதொன்றினையும் வஞ்சனை செய்து கொள்ளக் கருதாமை.

**281. எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு.**

தன்னை ஒருவராலும் இகழ்ச்சி செய்யாமலிருக்க விரும்புவான், யாதொரு பொருளையும் பிறரை வஞ்சித்துக் கொள்ளக் கருதாவகை தன் நெஞ்சினைக் காக்க.

எல்லாத் தொழிலுக்கும் நெஞ்சு முதலாதலான், நெஞ்சைக் காக்க எனக் கொள்க. 1

**282. உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.**

மனத்தினாலே நினைத்தலும் பொல்லாது; பிறனொருவன் பொருளைக் களவினாலே களவு செய்து கொள்வேமென்று கருதற்க.

கருதலும் பொல்லாது, ஆதலாற் கருதலும் வேண்டாவெனக் கொள்க. 2

283. களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்.

களவினாலுண்டாகிய செல்வம் வளர்வது போலத் தோன்றி யாதுமில்லை யென்னக் கெடும்.

அளவிறத்தல் - எவ்வளவு மில்லையென்னல். அளவறந்தாவது போலக் கெடுமென்று பாடமோதி, தன் செலவுக் குதவுவது போல இருந்து உதவாது கெடுமென்று உரைப்பாருமுளர். 3

284. களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்.

பிறர் பொருளைக் களவினாலே கொள்ள வெழுந்த ஆசை, அப்போது இனிது போலத் தோன்றி, அப்பாவம் விளையும்போது நீங்காத் துன்பத்தைக் கொடுக்கும். 4

285. அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்.

அருளைக் கருதி யாவர் மேலும் அன்புடையராகுதல், பொருளைக் கருதி, அதனைக் களவு கொள்ள அப்பொருளுடையார் வைத்து மறப்பதனைப் பார்க்கும் அவரிடத்தில்லை.

பொச்சாப்பு - மறப்பு. வைத்து மறந்த பொருளை எடுக்கக் கருதுவார்க்கு அருளுமில்லை, அன்புமில்லை எனவுங் கொள்க. 5

286. அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர்.

தமக்குள்ள பொருளுக்குத் தக்க செலவின்கண் அளவை அறிந்து அடங்கி வாழமாட்டார், களவினிடத்து மிகுந்த ஆசையுடையார்.

களவுசெய்து செலவழிக்கலாம் என்னும் ஆசையை உடையவரெனக் கொள்க. பிறத்தல் இறத்தல், புண்ணிய பாவம், சுவர்க்கம் நரகம், என்னும் அளவை யறிந்து வாழமாட்டார் என்றுங் கொள்க. 6

287. களவென்னுங் காரறி வாண்மை யளவென்னும்
ஆற்றல் புரிந்தார்க ணில்.

களவென்று சொல்லப்படுகின்ற மயக்க வடிவினை யுடைய ராதல், நன்மை தீமை, பிறப்பு, இறப்பு, பந்தம், வீடு என்னும் அளவையை அளத்தலென்னும் பேரறிவினை விரும்பினாரிடத்தில்லை.

காரறிவு - இருட்டறிவு. 7

288. **அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்**
**களவறிந்தார் நெஞ்சிற் கரவு.**

கதியளவையை அறிந்து அதற்கேற்ற அறஞ் செய்ய வேண்டுமென்னும் அவர் நெஞ்சின் அறம் போல நிற்கும், களவையே பயின்றவர் நெஞ்சத்து வஞ்சனை.

அளவறிந்தவர் நெஞ்சின் நிலைபெற்ற அறம்போல நிற்கும்; களவறிந்தார் நெஞ்சில் வஞ்சனையும் (நிலைபெற்று) நிற்கும் எனக் கொள்க. 8

289. **அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல**
**மற்றைய தேற்றா தவர்.**

அளவல்லாத தீய செயல்களைச் செய்து உடனே கெடுவர், களவல்லாத மற்ற செயலை அறிந்து தெளியாதவர். 9

290. **கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்**
**தள்ளாது புத்தே ளுலகு.**

களவினைச் செய்வார்க்குத் தம்மின் வேறல்லாத உடம்புந் தள்ளப்படும்; களவு செய்யாதவர்க்குத் தேவருலகும் தள்ளப் படாது.

களவு செய்வார்க்குத் தமக்குரிய உடம்பும் தள்ளுப்படும்; கள்ளமில்லார்க்குத் தமக்குரித்தல்லாத தேவருலகுந் தள்ளப் படாதெனக் கொள்க. 10

கள்ளாமை முற்றும்.

---

## 30. வாய்மை

அஃதாவது, பொய் சொல்லாமை.

291. **வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்**
**தீமை யிலாத சொலல்.**

மெய்ம்மை என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது யாதென வினவில், அது பிறிதோருயிருக்குச் சிறிதுந் தீங்கு வாராத சொற்களைச் சொல்லுதல்.

பிறர்க்குத் தீங்கு வருஞ்சொல் மெய்ச் சொல்லாயினும், பொய்ம்மையில்லாத சொல்லென்று சிறப்பித்துச் சொல்லப் படாதெனக் கொள்க. 1

292. பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.

குற்றந் தீர்ந்த நன்மை யுண்டாகின், பொய்ச் சொல்லும் மெய்ச் சொல்லின் பாலவாம்.

பொய்ச் சொற், புண்ணிய முண்டாமாயின் மெய்ச் சொல்லாம்; மெய்ச் சொற் பாவ முண்டாமாயின், பொய்ச் சொல்லாமென்பது கருத்து. 2

293. தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

ஒருவன் தன் நெஞ்சறிவதொன்றினைப் பிறரறியாரென்று பொய்யா தொழிக; பொய்த்தானாயின் தன்னெஞ்சே அப் பாவத்திற்குச் சாட்சியாய் நின்று, தன்னை அப்பாவம் விளையும்போது துன்பத்தினாற் சுடும்.

மனத்துக்கு மனமே சாட்சி என்பதனாலறிக. 3

294. உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன்.

ஒருவன் தன் உள்ளத்துக் கேற்ப பொய் சொல்லாமல் நடப்பனாயின், அவன் உயர்ந்தோர் உள்ளத்து எல்லாம் இருப்பன்.

உயர்ந்தோர் எல்லாம் அவனை நினைப்பரென்க. 4

295. மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை.

ஒருவன் தன் மனத்தொடு பொருந்த வாய்மையைச் சொல்வானாயின் அவன் தவமும் தானமும் செய்வாரினும் சிறப்புடையனாம்.

மனத்தொடு பொருந்தல் - தன் மனத்துக் கேறுதல். 5

**296. பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை**
**எல்லா வறமுந் தரும்.**

*ஒருவனுக்கு இம்மையிற் பொய் சொல்லாமைக்கு நிகரான புகழில்லை; மறுமைக்கு மெய் வருந்தாமல் எல்லா அறங்களையும் தரும்.*

*பொய் சொல்லாம லிருப்பதே புகழ். அதனாலே உடம்பு வருந்தி வராத புண்ணியம் வருமெனக் கொள்க.* 6

**297. பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற**
**செய்யாமை செய்யாமை நன்று.**

*ஒருவன் பொய் சொல்லான் என்னுஞ்சொல் பொய்யாமலிருக்க வல்லானாயின், அவன் புண்ணியம் செய்யாமல், தானே புண்ணியமாம்.* 7

**298. புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை**
**வாய்மையாற் காணப் படும்.**

*ஒருவருக்குடம்பு சுசியாகுதல் நீரினாலே அமையும்; அப்படிப் போல மனஞ் சுசியாகுதல் பொய் சொல்லம விருப்பதனால் அமையும்.*

*உடம்பழுக்கு நீரினாற்போம்; மனவழுக்கு மெய் சொல்லப் போம எனக் கொள்க. நீரையன்றி மெய்யழுக்குப் போகாது; மெய்யன்றி மனத்தழுக்குப் போகாது என்கின்றது.* 8

**299. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்**
**பொய்யா விளக்கே விளக்கு.**

*புறத்திருள் நீக்கும் விளக் கெல்லாம் விளக்காகக் கொள்ளார் அறிவுடையவர்கள். அவர்க்கு விளக்கு யாதென்றால், மனத்திருள் நீக்கும் பொய்யாத விளக்கே விளக்கு எனக் கொள்வர்,* 9

**300. யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்**
**வாய்மையி னல்ல பிற.**

*யாமெய்யாக் கண்ட பொருள்களுள் ஒரு பொருளுமில்லை; பொய்யாத பொருளே பொருள்.*

மெய்க்குப் புறமாகிய பொருளெல்லாம் பொருளல்ல; மெய்யே பொருளாம் என்றது. 10

வாய்மை முற்றும்.

---

## 31. வெகுளாமை

*அஃதாவது, கோபம் இல்லாமல் இருப்பது; வெகுளி செய்யாமை எனக் கொள்க.*

**301. செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்**
**காக்கிலென் காவாக்கா லென்.**

*தன் கோபம் செல்லுமிடத்துக் கோபத்தினைத் தடுப்பவனே (அதனைக்) காப்பவன்; கோபம் செல்லாவிடத்துத் தடுத்தால் என்ன? தடாது ஒழிந்தால் என்ன?*

*எளியவனிடத்தில் வரும் கோபத்தைத் தடுப்பவனே கோபத்தைக் காப்பவன்; வலியவனிடத்துச் செல்லும் கோபத்துக்குப் புத்தி சொல்ல வேண்டா; வலியவனே புத்தி சொல்வான் எனக் கொள்க.* 1

**302. செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்தும்**
**இல்லதனிற் றீய பிற.**

*தன்னின் வலியவனிடத்துக் கோபம் செல்லில், அது தனக்கு இம்மையில் தீமை விளைக்கும்; தனக்கு எளியவனிடத்துக் கோபம செல்லின் தனக்கு மறுமையில் தீமை விளைக்கும். ஆதலால், அதனில் பெரிய தீவினை இல்லை.*

*எளியவனிடத்துச் செல்லும் கோபம் பழியும் பாவமும் வருதலால் தீயெனப் பெரியது என்க.* 2

**303. மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய**
**பிறத்த லதனான் வரும்.**

*வலியவர், எளியவர் யாவரிடத்தும் கோபத்தை ஒழிக. ஒருவற்குத் தீயனவெல்லாம் அதனால் உண்டாம்.* 3

**304. நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்**
**பகையு முளவோ பிற.**

பிறருக்கும் தன்னிடத்தில் வரும் நகையையும், உவகையையும் கொன்றுவிடும்; ஆதலால், தன்னிடத்தில் வரும் கோபமே தனக்குப் பகையாம்; அதனில் பெரிய பகை யாதும் இல்லை.

தனக்குப் பகை தன் கோபமே என்க. 4

**305. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்**
**தன்னையே கொல்லுஞ் சினம்.**

*தன்னைத் துன்பம் இல்லாமல் தான் காக்க வேண்டுமென்றால், மற்றொன்றும் காக்க வேண்டா; கோபத்தை மாத்திரம் காக்க; காவாதாயில் தன்னையே கொல்லும் தன் கோபம்.* 5

**306. சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னும்**
**ஏமப் புணையைச் சுடும்.**

*சினம் என்னும் நெருப்பு தனக்கு இன்பமானவரையே அன்றி, தன்னைச் சேர்ந்தவர்க்கு இனமாகிய ஏமப்புணையைச் சுடும்.*

*ஏமப்புணை* - துன்பப் புனலைக் கடத்தற்கு வைத்த நட்பு என்னும் தெப்பம் என்க. *கோபம் சேர்ந்தவனுக்கு இன்பமான* உடலுறுப்பையும் கொல்லும்; *அவனுக்கு இனமாகிய உறவையும் கொல்லும் என்க.* 6

**307. சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு**
**நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.**

*கோபத்தைத் தனக்கு ஒரு பொருளாகக் கொண்டவன் தப்பாமல் கெடுவன்; நிலத்திலே அறைந்தவன் கை தப்பாமல் (அந் நிலத்திலே) படுவதுபோல.* 7

**308. இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்**
**புணரின் வெகுளாமை நன்று.**

*கொழுந்துவிட்டு எரியும் நெருப்பில் தோய்ந்தாலொத்த துன்பத்தை ஒருவன் செய்தானாயினும், கோபம் வந்து அடையாமல் இருப்பதே நன்று.*

*வெகுளி புணருதல் - கோபம் வந்து அடைதல்.* 8

**309. உள்ளிய தெல்லா முடனெய்து முள்ளத்தால்**
**உள்ளான் வெகுளி யெனின்.**

நினைத்தவை எல்லாம் உடனே வந்து கைகூடும்; மனத்தினுல் கோபத்தை நினையானுகில். 9

310. இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

கோபத்தை உடையவர் செத்தவரோடு ஒப்பர்; கோபத்தை விட்டு நீங்கினவர் துறவத்தை உடைய பெரியரோடு ஒப்பர். 10

வெகுளாமை முற்றும்.

---

## 32. இன்னு செய்யாமை

அஃதாவது, பொல்லாத செயல்களைச் செய்யாமல் இருப்பது.

311. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னு
செய்யாமை மாசற்ருர் கோள்.

யோகமாகிய சிறப்புத் தரும் அணிமா, மகிமா முதலாகிய செல்வங்களைப் பெறலாமாயினும், பிறர்க்குப் பொல்லாது செய்து பெறுதல் ஆகாது என்றொழிவது மாசற்ற பெரியோர் கொள்கை.

சிறப்புத் தரும் செல்வம் பெறலா யிருந்தாலும், பிறர்க்குப் பொல்லாது செய்து பெறுதல் ஆகாது என்று மாசற்றவர் சொல்வர் எனவும் கொள்க. 1

312. கறுத்தின்னு செய்தவக் கண்ணு மறுத்தின்னு
செய்யாமை மாசற்ருர் கோள்.

தம்மேல் கோபம் கொண்டு ஒருவன் இன்னுதவற்றைச் செய்தவிடத்தும், தாம் அவனுக்குப் பொல்லாதவற்றைச் செய்யாமல் இருப்பது மாசற்ற பெரியோர் கொள்கையாம். 2

313. செய்யாமை செற்ருேர்க்கு மின்னுத செய்தபின்
உய்யா விழுமந் தரும்.

தாம் முன் ஓர் பொல்லாது செய்யாது இருக்கத் தம்மேல் பொல்லாது செய்தவர்க்கும், துறவறம் உடையவன் பொல்லாது செய்யுமாயின், அச் செயல் பின்னவனுக்குக் கடக்க முடியாத துன்பத்தைக் கொடுக்கும்.

துறவறம் உடையவன் செய்யில் தவம் அழியும்; பாவம் வரும். இல்லறம் உடையவன் செய்யில் நரகம் வரும் என்றது. 3

314. இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

தமக்கு இன்னாதவற்றைச் செய்தாரை ஒறுத்தலாவது, அப் பொல்லாது செய்தவர் நாணும்படி அவர்க்கு இனிய உதவி நன்மைகளைச் செய்து, அவர் செய்த இன்னாதவற்றையும் ஒறுத்தலையும் மறக்க.

விடலென்பது - மறந்து விடல். 4

315. அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை.

புண்ணிய பாவம் அறிந்த அறிவினால் ஆவதொரு பயன் உண்டோ? பிறிதோர் உயிருக்கு வரும் பொல்லாதவற்றைத் தம் உயிர்க்கு வந்தனபோலக் குறிக்கொண்டு காவாதவிடத்து.

குறிக்கொண்டு காத்தலாவது - நடத்தல், இருத்தல், கிடத்தல், உண்டல் முதலியவற்றால் உயிர் வருந்தல்; அது வாராமல் காத்தல்; துறவறம் உடையவர் அறிவு இலக்கணம் என்க. 5

316. இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல்.

அறிவினால் இது பொல்லாது என்று அறிந்தனவற்றைப் பிறர்க்குச் செய்தலை மேவாமை துறவறம் உடையவர்க்கு வேண்டும்.

தம் அறிவினால் பொல்லாது என்று அறிந்தனவற்றைப் பிறரிடத்துச் செய்ய வேண்டா என்றது. 6

317. எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானா
மாணாசெய் யாமை தலை.

மனமறிந்து பொல்லாதவற்றை எக்காலத்தும் யாவரிடத்தும் சிறிதாயினும் செய்யாமல் இருப்பது தலைமையாகிய அறம்.

எக்காலத்தும் யார்க்கும் சிறிதாயினும் மனமறிந்து பொல்லாது செய்ய வேண்டா என்றது. 7

**318. தன்னுயிர்க் கின்னுமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னு செயல்.**

*பிறர் செய்யும் பொல்லாதன தன் உயிர்க்குப் பொல்லாதன என்று தானறிந்தவன், என்ன காரணத்தினுலே நிலைபெற்ற பிற உயிர்கட்குத் தான் பொல்லாதன செய்தல்?*

*பிறர் செய்யும் துன்பம் தன் உயிர்க்குத் துன்பம் வருதல் அறிந்தும், பிற உயிர்க்குத் துன்பம் செய்தல் என்ன காரணமோ என்றவாறு.* 8

**319. பிறர்க்கின்னு முற்பகற் செய்யிற் றமக்கின்னு
பிற்பகற் றுமே வரும்.**

*பிறர்க்கு முன்பகல் துன்பம் செய்தானுயின், தமக்குப் பின் பகல் அந்தத் துன்பமே வரும்.* 9

**320. நோயெல்லா நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.**

*நோய்கள் எல்லாம் பிறர்க்கு நோய் செய்தவர் மேலே வந்தேறி வருத்தும்; ஆதலால், அதனை அறிந்து தம் உயிர்க்கு நோய் வேண்டாதார் பிறிதோர் உயிருக்கு நோய் செய்யார்.*

*பிறர்க்கு நோய் செய்யத் தமக்கு அந்நோய் வரும் ஆதலால், தமக்கு நோய் வேண்டா என்பார் பிறர்க்கு நோய் செய்யார் எனக் கொள்க.* 10

**இன்னு செய்யாமை முற்றும்.**

---

## 33. கொல்லாமை

*அஃதாவது, ஓரறிவுடைய உயிர் முதலாக யாதோருயிரையுங் கொல்லலாகா தென்றது.*

**321. அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.**

*தன்மமாகிய செயல் யாதென வினவில் அது யாதோர் உயிரையுங் கொல்லாமையாம்; அவற்றைக் கொல்லுதல் பாவச் செயலெல்லா வற்றையுந் தரும் ஆதலால்.* 1

**322. பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்று ளெல்லாந் தலை.**

*உண்பதனைப் பசித்த உயிர்கட்குப் பகுத்திட்டுப் பல உயிர்களையும் வருத்தப்படாமற் காத்தல், தரும நூலுடையார் தொகுத்துச் சொன்ன தன்மத்துளெல்லாம் தலைமையான தன்மமாம்.* 2

**323. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்**
**பின்சாரப் பொய்யாமை நன்று.**

*ஒப்பில்லாத நன்மையானது கொல்லாமை; அப்படி நின்ற பின்பு, நன்மையாவது பொய் சொல்லாமை.*

கொல்பவன் பொய் சொல்லாமல் நல்லவறங்களைச் செய்தாலும், நன்மையல்ல; கொல்லாமையே நன்மையாம். அப்படி நின்றவனுக்குப் பொய் சொல்லாமையும் நன்றென்றவாறு. ஆதலாற் கொல்லுதல் கொடும் பாவமென்றது. 3

**324. நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்**
**கொல்லாமை சூழு நெறி.**

*கதி தரும் வீடுபேறு பெறுதற்கு நல்வழி யாதென வினவில், யாதோர் உயிரையுங் கொல்லலாகா தென்னும் நியமத்தினிற்பது (ஆகும்).*

*கதிபேறு பெற நிற்ப நினைப்பவனுக்கு வழி, கொல்லாமல் நிற்கும் வழியாம் எனக் கொள்க.* 4

**325. நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்**
**கொல்லாமை சூழ்வான் றலை.**

*பிறவித் துன்பத்துக்கு அஞ்சி இல்லறத்தை விட்டுத் தவஞ் செய்யத் துறவறமானவர்க்கு எல்லாம் நன்மை உடையவன் யாரென்னில், கொலை செய்யும் பாவத்துக்குப் பயந்து, கொல்லாமல் நியமமாய் நிற்பவனே தலைமையான நன்மையுடையவன் (ஆவான்).* 5

**326. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாள்மேல்**
**செல்லா துயிருண்ணுங் கூற்று.**

*கொல்லாமையை விரதமாக மேற்கொண்டு நடப்பவன் வாழ் நாளின் மேல் உயிருண்ணுங் கூற்று செல்லாது.*

*மிகப்பெரிய புண்ணியஞ் செய்தவன் நெடுங்காலம் இருப்ப னெனக் கொள்க. மிகப் பெரிய பாவஞ் செய்தவன் சிறு காலத் தில் இறந்து நரகத்தில் வீழ்வனென்றது.* 6

**327. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.**

தன்னுயிரை அது நீக்கச் செய்யினும், தான் பிறிதின் உயிரை நீக்க லாகாது; ஆதலால் உயிரை நீக்கும் கொடிய உயிர்களையுங் கொல்லா தொழிக வென்றது.

*இது கொல்லா விரதமுடையவர்க்கு உறுதி கூறியது.* 7

**328. நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை.**

*தேவர் பொருட்டு வேள்விக்கட் கொல்லுதல் இன்ப மிகுஞ் செல்வம் பெரிதாமென்று இல்வாழ்வார்க்குக் கூறப்பட்டதாயினும் துறவறமுடைய பெரியோர்க்கு ஒருயிரைக் கொன்றதனல் வரும் செல்வம் கடையாம்.*

*வேள்விக்கட் கொல்லுதல் நன்று பெருஞ் செல்வம் தரு மென்றாலும், கொல்லா விரதமதனினும் பெருஞ் செல்வமாகிய மோட்சந் தருமெனக் கொள்க.* 8

**329. கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து.**

*கொலைத் தொழிலை உடைய மாந்தர் பெரிய* குலமாயினும், புலைவினையுடைய கீழ்மக்களாம் அதன் பாவம் தெரிந்தவர்க்கு. 9

**330. உயிருடம்பி னீக்கியா ரென்பர் செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.**

*பார்க்கலாகாத நோய் உடம்புடனே வறுமையாகி இரந்து திரிவாரை, இவர் முற்பிறப்பிற் கொலை செய்து உயிர்களை உயிர் வேறு உடம்பு வேறாக்கினவர் என்று சொல்வர், அப்பாவ வினை யறிந்த பெரியோர்.* 10

[குறிப்பு: என்ப *என்பது அச்சுப் பபாடம்,*]

கொல்லாமை முற்றும்.

## 34. நிலையாமை

*அஃதாவது, தோற்றமுடையன யாவையும் நில்லாது இறந்து போமென்றது.*

**331. நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.**

*நில்லாத பொருள்களை நிலையென்று நினைந்து ஆசை பற்றும் புல்லறிவாண்மை* மேலான அறிவன்று ; கீழ்ப்பட்ட வறிவாம்.

புல்லறிவாளர் பெரும்பான்மை யாதலால், இது, பெரியோர் அறிவுடைமை எனக் கொள்க. 1

**332. கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.**

*ஒருவரிடத்துப் பெருஞ் செல்வம் வருதல், கூத்தாடு மிடத்துக் காண்போர் கூட்டம் வந்து கூடிய தொக்கும்; அச்செல்வம் போவதும் அக்கூத்தாட்டுக் காண்போர் கூத்து முடிந்த உடனே கலைந்து போவதனை ஒக்கும்.*

*ஒருவனிடத்துப்* புண்ணியம் இருக்கும் அளவும் *செல்வம் இருக்கும்.* புண்ணியம் தொலைந்தவுடனே *செல்வம் போமென்றது.*

**333. அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்.**

*நில்லா இயல்பினையுடையது செல்வம்; அதனைப் பெற்றால் அதனால் செய்யப்படும் புண்ணியங்களை உடனே செய்து கொள்க.*

*செல்வம் போம்; புண்ணியம் போகாது.* செல்வத்தைப் புண்ணியமாக நிறுத்திக் கொள்க *வென்றது.* 3

**334. நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.**

*நாளென்று எண்ணப்படுவதோர் காலம் போல ஒன்று தோன்றி உயிர் வாழும் வாழ்க்கையை அறுக்கும் வாளாயிற்று. அதனை அறியார்; அறிவாராயின் அது கொல்லும் வாளென்றறிவார்,*

(நாள்), உயிர் உடம்பின் வாழும் வாழ்க்கையை அறுக்கும் வாளென்றது. 4

335. நாச்செற்று விக்குண்மேல் வாராமு னல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

பேசப்படாமல் நாக்கு விழுந்து, விக்கல் எடுக்கும் முன்னே, கதி பெறுவதற்கு ஏதுவாகிய நல்லறங்கள் செய்யப்படும். 5

336. நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

நேற்றொருவ னிருந்தான்; அவன் இன்றைக்குச் செத்தா னென்னும் பெருமையுடையது இவ்வுலகம்.

பெருமை, நிலையாமை மிகுதி என்க. ஒருவனென்பதனை ஆண்பால், பெண்பால், அஃறிணைப்பால், உயர்திணைப் பாலெல்லாங் கொள்க. 6

337. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.

ஒரு பொழுது அளவாகிலும் தாஞ் சாகாமலிருந்து வாழ்வதனை அறியமாட்டார். அவரெண்ணும் எண்ணங் கோடியுமல்ல; அதனினும் பெரிதாம். 7

338. குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு.

முன் தனியாகாத முட்டை தனித்துக் கிடப்ப, அதனுள் ளிருந்த புள் பருவம் வந்த உடனே பறந்து போம் தன்மைத்து, உடம்பிற்கும் உயிருக்குங் கலந்திருந்த நட்பு.

கூடென்றுரைப்பாரு முளர்: கூடு வேறு, புள் வேறுதலால் ஒன்ருகாது; நட்பில்லை (என்றவாறு). புள்ளுப் பின்னும் வந்து புகுதும் ஆதலால், குடம்பை முட்டை எனக் கொள்க. 8

339. உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

ஒருவனுக்குச் சாக்காடு வருதல் உறக்கம் வருதலோடு ஒக்கும்; அதன் பின்பு பிறப்பு வருதலும், உறங்கி விழித்தலோடு ஒக்கும்.

இறத்தலும் பிறத்தலும் உறக்கமும் விழித்தலும் போல மாறிமாறி வருமெனக் கொள்க. 9

340. புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுள்
துச்சி லிருந்த வுயிர்க்கு.

ஐம்பூத வடிவாகிய உடம்பினுள் ஒதுக்குக் குடியிருந்த உயிர்க்கு எந்நாளும் அழியாமலிருப்பதோர் வீடு கிடைத்ததில்லை கொல்லோ?

ஒதுக்குக் குடி இராமல் எந்நாளும் இருக்கும் வீடு தேடுக என்றது. அது மோட்சமெனக் கொள்க. 10

நிலையாமை முற்றும்.

---

## 35. துறவு

அஃதாவது, இல்லறம் விட்டுத் துறவறம் கொள்ளுதல்; துறவு: எல்லாப் பொருளும் விடுதல்.

341. யாதனின் யாதனி னீங்கியா னோதல்
அதனின் அதனி னிலன்.

ஒருவன் யாதொரு பொருளின், யாதொரு பொருளின் பற்று விட்டு நீங்கினன், அவன் அப் பொருளினால் வரும் துன்பம் எய்துதல் இலன்.

யாதொரு பொருளின் யாதொரு பொருள் நீங்குதல், அப் பொருளைத் தேடுதல், காத்தல், இழத்தலான் வரும் துன்பம், அதனால் வரும் பாவமில என்றது. 1

342. வேண்டினுண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல.

வீடு பேறு வேண்டின், காலம் உண்டாக, இளமையில் துறக்க; அப்படித் துறந்தபின் அவர்க்கு இம்மைக்கண் இயல்பாகிய இன்பம் பலவாம். 2

343. அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு.

*வீடு பேறு பெறுவர்க்கு, மெய், வாய், கண், மூக்குச் செவி ஆகிய ஐம்பொறிக்கட் செல்லும்* சந்த, பரிச, ரூப, ரச, கந்தம் ஆகிய ஐம்புலன்களைக் கெடுத்தல் *வேண்டும்; கெடுக்குங்காலை* அப் புலன்கள் அனுபவிக்கும் பொருளை *எல்லாம் ஒருமிக்க விடுதல் வேண்டும்.*

*வீடு பேறு வேண்டுவார் ஐம்புலாதிகளையும் கெடுத்து, அவற்றிற்கு வேண்டிய பொருள்களை எல்லாம் ஒருமிக்க விடுக என்றது.* 3

344. இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து.

*பற்றப்படுவதொரு பொருளும் இல்லாமல் இருப்பது தவம் செய்வார்க்கு இயல்பாகும்; அதுவன்றி, யாதொன்றாயினும் அவரிடத்திருக்கில், அத் தவத்தை அழிக்கும்* ஆசைக்கு *ஏதுவாம்.*

*மற்றும் பெயர்த்து என்பது, துறவை நீக்கி இல்லறம் உடையவன் ஆக்கும் எனக் கொள்க.* 4

345. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க் குடம்பு மிகை.

பிறப்பறுக்க உற்றவர்க்கு மற்றுமொரு தொடர்ச்சியாகிய பொருள் உண்டோ? இல்லை. உடம்பு மாத்திரம் மிகையாம்; அதுவன்றி, யாதானும் ஒரு பொருளுண்டாதலென்னும்?

*அகப்பற்று எல்லாம் விட்டுப் புறப்பற்றாகிய உடம்பு மாத்திரம் நின்றது.* 5

346. யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

*தானல்லாத உடம்பைத் தானென்றும், தனதல்லாத பொருளைத் தனதென்றும் கருதும் செருக்கைக் கெடுப்பான் யாவன்; அவன் வானோர் உலகுக்கும் உயர்ந்த உலகத்தில் புகும்.*

*இது, அகப்பற்றும் புறப்பற்றும் விட்டவர் பேறு கூறியது.* 6

347. பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

*அகப்பற்றும் புறப்பற்றும் இறுகப்பற்றி விடாதவர்களைப் பிறவித் துன்பங்களும் இறுகப் பற்றிவிடா.* 7

**348. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி**
**வலைப்பட்டார் மற்றை யவர்.**

*முற்றத் துறந்தார் மோட்சத்தைத் தலைப்பட்டார். அப்படி முற்றத் துறவாதவர் மயங்கிப் பிறப்பாகிய வலையில்பட்டார்.* 8

**349. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று**
**நிலையாமை காணப் படும்.**

*ஒருவன் இருவகைப் பற்றும் அற்றபொழுதே அப்பற்றற்றது அவன் பிறப்பை அறுக்கும்.* பற்று அருதபோது பிறவிக் கடல் காணப் படும்.

*'அற்றது பற்று ; விட்டது பிறவி' என்பதனுல் அறிக. இரு வகைப் பற்ருவன, அகப்பற்று, புறப்பற்று.* நிலையாமை பிறவிக் கடல் உற்றது - பற்று தொட்டது பிறவி என்பதனுல், துறந்தவர் மற்ருெரு பொருளைப் பற்றப்படாது என்க.

**350. பற்றுக பற்றற்ருன் பற்றினை யப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு.**

*பற்றுக பற்றற்ருன் பற்றினை யென்பது, பற்றிக் கொள்ளுக எல்லாப் பற்றுமற்றவன் பற்றினை.* எல்லாப் பற்றும் அற்றவன் பற்ருவது, அவன் சொன்ன வேதாகமம். அப்பற்ருவது அந்த வேதாகமம் பற்றியது. வேதாந்த சாத்திரம், சித்தாந்த சாத்திரம், இவை வீடு பேறு சொன்ன வழி(கள்). *பற்றுக பற்று விடற்கு என்பது, அந்த நிலையைப் பற்றிக் கொள்ளுக பிறவிப் பற்றுவிடற்கு என்றது.*

*எல்லாப் பொருளையும் பற்றி நின்றே பற்றற்ற இறைவன் ஓதிய வீட்டு நெறியை இதுவே நன்னெறி என்று மனத்துள் கொள்க, கொண்டதன்கண் உபாயத்தையும் மனத்தால் செய்ய விடாது, வந்த பற்று விடுதற்கு என்றவாறு.* பற்றற்ருன் பற்றியது வேதாகமம், அதனைப் பற்றுக. வேதாந்தம் பற்றியது திருவடி சேரும் உபாயம். அந்த உபாயத்தைப் பற்றுக, பிறவிப்பற்று விடுதற்கு எனக் கொள்க.

துறவு முற்றும்.

---

## 36. மெய்யுணர்தல்

அஃதாவது பிறப்பினையும் வீட்டினையும் அவற்றின் காரணத்தினையும் விபரீத உணர்வும் ஐய உணர்வுமின்றி உண்மையால் உணர்தல்.

**351.** பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
அருளான் மாணாப் பிறப்பு.

பிறப்பறுக்க மாட்டாத மெய்ப் பொருளல்லவற்றைப் பிறப்பறுக்கும் மெய்ப் பொருளென்று உணரும் ஐய விபரீத உணர்வானே உண்டாம் இன்பமில்லாத பிறப்பு.

விபரீத உணர்வாவது, மறு பிறப்பும் இருவினையும் கடவுளும் இல்லை எனவும், மற்றும் இத்தன்மையனவும் சொல்லும் மயக்க நூல் வழக்கை மெய்ந் நூல் வழக்கெனத் துணிதல். பழுதையைப் பாம்பென்றும், கிளிஞ்சிலை வெள்ளி என்றும், குற்றியை மகன் என்றும், கானலை வெள்ளம் என்றும் துணிதலும், பொருளல்ல வற்றைப் பொருளென்றுணர்தலும் எனக் கொள்க. ஐயப்படுதல், ஐயவுணர்வு. 1

**352.** இருணீங்கி யின்பம் பயக்கும் மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

அவிச்சையின் நீங்கிய மெய்யுணர்வை உடையார்க்கு அம் மெய்யுணர்வு பிறப்பினை நீக்கி வீட்டினைக் கொடுக்கும்.

மாசற்ற காட்சி; மயக்கம் நீங்கிய ஞானக் காட்சி; நிரதிசய வின்பக் காட்சி எனக் கொள்க. 2

**353.** ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து.

ஐயத்தினின்று நீங்கித் தெளிந்து மெய்யுணர்ந்தார்க்குத் தாம் இந்த உலகத்தினும் வானவுலகம் நணித்தாதல் உடைத்து.

ஐயமாவது: பல தலையாய உணர்வு. அஃதாவது, மறு பிறப்பும் இருவினையும் வீடுபேறு முளவோ இலவோ? என்னும் ஐயம். மெய்யுணர்வு: யோகக் காட்சி, ஞானக் காட்சியானுணர்ந்த உணர்வு. வைய உலகினும், வானவுலகு தன்னுள்ளே இருந்ததெனக் கொள்க. வையவுலகு - பிறக்கும் உலகு. வான வுலகு - பிறவா உலகு. 3

**354. ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயனின்றே**
**மெய்யுணர் வில்லா தவர்க்கு.**

*செல்லப்படுகின்ற புலன் வேறுபாட்டால் ஐந்தாகிய உணர்வும், அவற்றை விட்டுத் தன்வயத்தாய வழியும் அதனால் பயன் இல்லை, மெய்யினை உணர்தல் இல்லாதவர்க்கு.*

*மனம் ஐம்புலன் வழி செல்லாது, ஒருவழிப்பட்ட இடத்தும் வீடு பேறில்லை, மெய்யாகிய பொருளை உணராதவர்க்கு.*

[குறிப்பு : பயமின்றே *என்பது அச்சுப் பாடம்.*] 4

**355. எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு.**

*யாதொரு பொருள் யாதோரியல் பிற்றாய்த் தோன்றும்; அத் தோன்றியவற்றைக் கண்டொழியாது அப்பொருளின் கண் நின்று, மெய்யாய பொருளைக் காண்பதே மெய்யுணர்வாவது.*

பலபல சமயங்களும் பலபல தெய்வங்களைப் பலபல சிறப்பித்துச் சொல்லினும், பல தெய்வீகங்கள் தோன்றினும், அச் சிறப்பும் தெய்வீகமும் கொண்டு அத்தெய்வங்களைப் பொருளாகக் கொள்ளாது, அத்தெய்வங்களை அச்சிறப்பில் காண்பதே அறிவெனக் கொள்க. *கற்பனை கழித்து, நின்ற உண்மையே பொருள் எனவும், காரண காரியம் இரண்டும் இன்றி முடிவாய் நிற்பது பொருள் எனவும், அதனைக் காண்பதறிவு எனவுங் கொள்க.*

*இது, மெய்யுணர்வின் இலக்கணங் கூறியது.* 5

**356. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்**
**மற்றீண்டு வாரா நெறி.**

*மெய்ந்நூலைக் கற்று, மெய்ப்பொருள் கண்ட தேசிகன்பால் கேட்டு, அதனான் மெய்ப்பொருளை உணர்ந்தவர் பிறப்பின் வாரா நெறியைத் தலைப்படுவர்.* 6

**357. ஓர்த்துள்ள முள்ள துணரி னொரு தலையாப்**
**பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.**

*தேசிகன்பால் கேட்ட உபதேச மொழிப் பொருளைத் தெளிய ஆராய்ந்து உள்ளபடி உள்ளத்தினால் உணர்வானாகில், அவனுக்கு மறுபிறப்பும் உண்டென்று நினைக்க வேண்டா.*

குரு உபதேச மொழியை ஒரு தலையாக உணர்தல், ஐயமின்றி உணர்தல் எனக் கொள்க. ஒருதலை வழக்காகப் பிறப்புண்டென்று நினைக்க வேண்டாம் எனவும் கொள்க. 7

358. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு.

பிறப்பிற்கு முதல் காரணமாகிய ஆசை நீங்க மோட்சத்திற்கு நிமித்த காரணமாகிய செவ்விய பொருளைக் காண்பதே உணர்வாவது.

பிறப்பென்னும் பேதைமை எனவும், சிறப்பென்னும் செம்பொருள் எனவும் அப்பொருளை உணர்தல் அறிவெனவும் கொள்க. சிறப்பு - வீடு பேறு. 8

359. சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

ஒருவன் எல்லாப் பொருட்குஞ் சார்பாகிய செம்பொருளை உணர்ந்து, தன்னைச் சார்ந்த அகப்பற்றும் புறப்பற்றும் கெட ஒழுக வல்லனாயின், அவனை முன் சார வரும் துன்பங்கள் அந்த மெய்யுணர்வினை அழித்துச் சாரமாட்டா.

சார்புணர்ந்து என்பது, தான் சாரும் சார்பை உணர்ந்து. தன்னைச் சார்வன எல்லாம் கெட நடந்தானாகில், அந்த உணர்வை மற்று அழித்துச் சாரமாட்டா, சார்தரும் நோய்கள் எனக் கொள்க. 9

360. காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன்
நாமங் கெடக்கெடு நோய்.

காமம், வெகுளி, மயக்கம் எனனும் குற்றங்கள் மூன்றின் பெயரும் கெடப் பிறவி நோயும் கெடும்.

இவை மூன்றும் கெட, மெய்யுணர்வு தோன்றும் ஆதலால், மெய்யுணர்வு பிறவி நோயைக் கெடுக்கும் எனக் கொள்க. 10

மெய்யுணர்வு முற்றும்.

## 37. அவாவறுத்தல்

அஃதாவது, அவாவினை யறுத்தல்: ஆசையினை யறுத்தல் எனக் கொள்க.

**361. அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து.**

எல்லா உயிர்க்கும், எக்காலத்தும், கெடாது வருகின்ற பிறப்பினைக் கொடுக்கும் வித்தாமென்று சொல்லுவர், எல்லா நூலுடையோரும், அவாவினை.

அவா என்னும் ஆசை, தவறில்லாமல் பிறப்பை ஈனும் வித்தாமென்று சொல்வரெனக் கொள்க. 1

**362. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.**

எல்லாத் துன்பத்திலும் பிறவித்துன்பம் பெருந்துன்பம் ஆதலால், ஒன்றை வேண்டும் காலத்துப் பிறவாமையை வேண்ட வேண்டும்; அப் பிறவாமைதான் யாதொரு பொருளும் வேண்டாம் என்பதனை வேண்டத் தானே உண்டாம்.

அவாவினாற் பிறப்பு வரும்; அவா இல்லையாகில் பிறப்பு வாராது என்க. 2

**363. வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில்.**

யாதொரு பொருளும் வேண்டாம் என்னும் பெரும் செல்வம் போல இவ்வுலகத்தில் இல்லை. அதுவன்றி, அவ்வுலகாகிய சுவர்க்கத்தும் அதனை ஒத்த செல்வமில்லை.

இவ்வுலகத்தும் அவ்வுலகத்தும் வேண்டாமை ஒத்த செல்வம் இல்லை எனக் கொள்க. வேண்டாமை - அவாவின்மை. 3

**364. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.**

ஒருவர்க்கு மோட்சம் என்று சொல்லப்படுவது அவாவில்லாமல் இருப்பது. அந்த அவாவில்லாமலிருப்பது, வாய்மையாகிய மெய்ப்பொருள் விரும்பத் தானே உண்டாம்,

மெய்ம்மையாகிய பொருளை உணர, அவாவறும்; அவா வறவே, தானே வீடு பேறும் என்றவாறு. தூய்மை - வீடு பேறு; வாய்மை : மெய்ப்பொருள். 4

**365. அற்றவ ரென்ப ரவாவற்றார் மற்றையார்
அற்றாக வற்ற திலர்.**

பிறவி அற்றவரென்று சொல்லப்படுவர் யாரென்னில்; ஆசையற்றவர்கள். மற்றவர்கள் ஆசையிருக்க, எல்லாம் அற்றாலும் அப்படிப் பிறவி அற்றவரல்லர்; சில துன்பமற்றவர்.

ஆசை அற்றவரே பிறவி அற்றவர். ஆசையிருக்க மற்றதெல்லாம் அற்றாலும் பிறவி அற்றவராகார் எனக் கொள்க. 5

**366. அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா.**

ஒருவனைப் பிறவித் துன்பத்திலே வீழ வஞ்சனை செய்வது அவா. ஆதலால் அவாவை அஞ்சிக் காப்பது துறவறமே.

துறவறம் செய்பவரை, அவாவாகிய ஆசை பிறவித் துன்பத்தில் வீழ வஞ்சனை செய்யுமாதலால், ஆசை வாராமல் காக்க வேண்டும் துறவறம் உடையவர் எனக் கொள்க. 6

**367. அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.**

ஒருவனை அவாவானது வஞ்சனை செய்ய வராமல் அவாவை அடியற அறுக்க வல்லனாயில், தவறில்லாத வீடு பேறு தான் விரும்பும் வழியே வரும்.

தவா வினை - மோட்சமெனக் கொள்க. 7

**368. அவாவில்லார்க் கில்லாகுந் துன்ப மஃதுண்டேல்
தவா அது மேன்மேல் வரும்.**

அவா இல்லாதவர்க்குப் பிறவித் துன்பமில்லை. அந்த அவா உண்டாகில், பிறவித் துன்பம் தவறில்லாமல் அடுத்தடுத்து மாறி மாறி மேன்மேல் வரும்.

ஆசை இல்லார்க்குப் பிறவி இல்லை. ஆசை உடையார்க்குப் பிறவி முதலாகிய எல்லாத் துன்பமும் மேன்மேல் வரும் எனக் கொள்க. 8

369. இன்ப மிடையறா தீண்டு மவாவென்னும்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

*இன்பம் அழிவில்லாமல் எக்காலமும் வரும்; துன்பத்துள் எல்லாம் பெருந்துன்பமாகிய ஆசை என்னும் துன்பம் கெட்டால்.*

370. ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்.

*ஒரு காலமும் தணியாத இயல்பையுடைய ஆசையினை ஒருவன் நீக்குமாயின், அவனுக்கு அந்த நிலைமையே நீங்காத இயல்பாகிய மோட்சந் தரும்.* 10

அவாவறுத்தல் முற்றும்.

*துறவற வியல் முற்றும்.*

---

## ஊழியல்

## 38. ஊழ்

*அஃதாவது, முன் செய்த நல்வினை தீவினை; அந்த நல்வினை தீவினை செய்தவனை இப்பிறப்பில் வந்தடைதல். நல்வினை வரும் காலத்து இன்பமும், தீவினை வரும் காலத்துத் துன்பமுமாய் வரும் என்றவாறு.*

371. ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி.

*ஒருவனுக்குச் செல்வமாகும் ஊழினால் தோன்றும் சோம்புதல் இல்லாமல் தொழில்மேல் முயற்சி. ஒருவனுக்குக் கைப்பொருள் போகும் ஊழினாலே தோன்றும் தொழிலின்மேல் சோம்பல்.*

*செல்வம் உண்டாங் காலத்தில் முயற்சி உண்டாம்; செல்வம் அழியும் காலத்தில் சோம்பல் உண்டாம் என்றது.* 1

372. பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்றும்
ஆகலூ ழுற்றக் கடை.

ஒருவனுக்கு எல்லா அறிவும் உள்ளனவாயினும்,கைப்பொருள் அழிதற்கு ஏதுவாகிய ஊழ்வினை வந்தவிடத்து, அவனைப் பேதையாகச் செய்விக்கும்; ஒருவனை, அறிவில்லாமல் இருந்தாலும் அறிவுடையனாகச் செய்விக்கும் கைப்பொருள் உண்டாக்கும் ஊழ்வினை வந்தவிடத்து.

இழக்கும் ஊழ், ஆக்கும் ஊழ் என அறிக. 2

373. நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும்.

பேதைப்படும் ஊழ்வினை உடையான் ஒருவன் நுண்ணிய பொருள்களை அறிவிக்கும் பல நூல்களைக் கற்றானாயினும், அவனுக்குப் பின்னும் தன் ஊழ்வினையினாகிய பேதைமை அறிவே மேற்படும்.

கல்வி, கேள்வி, அறிவின் தெளிவையும் கலக்கப்படுத்தும் ஊழ்வினை என்க. உண்மை என்பது ஊழ்வினை. "ஊழ், பால், விதி, நியதி, உண்மை, முறை, தெய்வம் ஏழ்பாலென்ப ஊழ்வினைப் பெயரே, பாக்கியம் என்று பகரவும்படுமே" என்பதனால் ஊழ்வினைப் பெயர் அறிந்து கொள்க. 3

374. இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.

உலகத்து ஊழ்வினையினானாகிய இயற்கை இரண்டு கூறுதலால், செல்வமுடையவராதலும் வேறு; தெளிந்த அறிவுடையராதலும் வேறு.

பொருட் செல்வம் உடையார்க்கு, கல்விச் செல்வம் வருதல் அரிது; கல்விச் செல்வம் உடையார்க்குப் பொருட் செல்வம் வருதல் அரிது என்றவாறு. 4

375. நல்லவை யெல்லாந் தீயவாந் தீயவும்
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

செல்வத்தை அழித்தற்கு நல்லன வெல்லாம் பொல்லாதாகச் செய்விக்கும். அதுவேயன்றி, செல்வத்தை ஆக்குதற்குப்

பொல்லாதன வெல்லாம் நல்லனவாகச் செய்விக்கும் ஊழ்வினை வந்தவிடத்து. 5

[குறிப்பு: யெல்லாஅந் என்பது அச்சுப் பாடம்.]

**376. பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்**
**சொரியினும் போகா தம.**

தமக்கு ஊழ்வினையினன் அல்லாத பொருள்கள் வருந்திக் காப்பினும் தம்மிடத்து நில்லாதுபோம்; ஊழ்வினையால் தமதாகிய பொருள்கள், தம்பாலல்லாத புறத்தே கொண்டுபோய்ச் சொரிந்தாலும் தம்மைவிட்டுப் போகா.

பொருள் வருதலும் போதலும் ஊழ்வினையினனன்றித் தம்மால் ஆகாது எனக் கொள்ள. 6

**377. வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி**
**தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.**

ஐம்பொறிகளும் அனுபவிக்கும் பொருள்கள் கோடிப்பொருள் தேடிக்குவித்து வைத்தவர்க்கும் தெய்வம் வகுத்தவகை அல்லாமல் தம்மால் அனுபவிக்கப்படா.

தான் தேடிவைத்த பொருள் மற்றொருவனுக்குத் தெய்வம் வகுத்தமையால், தன்னால் அனுபவிக்கப்படாது எனக் கொள்க. 7

**378. துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால**
**வூட்டா கழியு மெனின்.**

வறுமையால் துய்ப்பன இல்லாதார் துறக்கும் கருத்துடையராவர், ஊழ்வினை துன்பங்களை ஊட்டுவிக்காது ஒழியுமாயின்.

துப்புரவில்லார் என்பது, அனுபவிப்பன இல்லாத வறுமையாளர். துறவறம் உடையாராவது, ஊழ்வினை மேல் வரும் துன்பங்களை ஊட்டாதொழியின் எனக் கொள்க. 8

**379. நன்றாங்கால் நல்லவாக் காண்பவ ரன்றாங்கால்**
**அல்லற் படுவ தெவன்.**

பழைய ஊழாகிய நல்வினை வந்து விளையும் காலத்தில் நல்ல இன்பங்களைத் தள்ளாது நல்லனவென்று பொருந்தி அனுபவிப்பான், ஏனைத் தீவினை வந்து விளையும் காலத்தில் பொல்லாத துன்பங்களை அவ்வாறென்று அனுபவியாது தள்ளும் அவன் தேடியல்லலுழுலுழப்பதென் கருதி ?

இன்பத்தில் மகிழ்ச்சி எய்தித் துன்பத்தில் இரங்குதல் அறிவின்மை எனக் கொள்க. 9

380. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

ஊழ்வினை தன்னை விலக்குதற் பொருட்டு அதனுக்கு மறுதலையாகியதோர் உபாயத்தை நினைத்தால் அந்த உபாயமே யாகியும், பிறிதொன்றாகியும் அவ்வழியே வந்து சூழச்சியின் முற்பட்டு நிற்கும்; அதனால் ஊழ்வினைபோல் மிக்க வலி யாவை உள ?

அச் சூழ்ச்சியும் ஊழ்வினையே ஆதலால், ஊழ்வினையே வலியுடைத்து என்க. 10

ஊழ் முற்றும்.

ஊழியல் முற்றும்.

அறத்துப் பால் முற்றும்.

# 2. பொருட் பால்

## அரசியல்

### 39. இறைமாட்சி

*அஃதாவது, இறைவன் நற்குண நற்செய்கையான் உலகத்தைக் காத்தல் எனக் கொள்க.*

**381. படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்
உடையா னரசரு ளேறு.**

*படையும், குடியும், பயிரும், அமைச்சும், நட்பும், அரணும் என்று சொல்லப்பட்ட ஆறு அங்கங்களையும் உடையான் அரசருள் ஏறு போல்வான்.*

*படை - நால்வகைப் படை; குடி - குடிகளும் நாடும்; கூழ் - பயிர்; அமைச்சு - மந்திரியர்; நட்பு - பிற அரசர் நட்பு; அரண் - கோட்டை; இவையாறும் உடையான் அரசர்க்குட் சிங்கவேறு எனக் கொள்க.* 1

**382. அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு.**

*அரசனுக்கு இயல்பாவது பயமின்மையும் கொடையும் அறிவும் ஊக்கமும் என்னும் நான்கு குணமும் இடைவிடாது நிற்றல்.*

*ஊக்கம் : வினை செய்யுமிடத்து உற்சாகம்.* 2

**383. தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவர்க்கு.**

*தூங்காமையும் கல்வியும் துணிவுடைமையும் இம் மூன்று குணமும் நிலத்தை ஆளும் அரசர்க்கு நீங்கா.*

*தூங்காமை : காரியந் தாழ்ச்சி செய்யாமை.* 3

**384. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு.**

தனக்கு ஓதிய அறத்தின் வழுவாது ஒழுகி, அறன் அல்லாதவற்றை நீக்கி, வீரத்தின் வழுவாது, மானமுடையான் அரசன்.

அரசனுக்கு அறமாவது, ஓதல், வேட்டல், ஈதல், படைக்கலம் பயிறல், பல்லுயிர் ஓம்பல், பகைத்திறந் தெறுதல். [அல்லவை நீக்கல், கொலை, களவு முதலாயின நீக்கல்.] 4

385. இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

பொருள் வரும் வழியை உண்டாக்கலும், எல்லாப் பொருளும் சேரத் தொகுத்தலும், தொகுத்த பொருளைப் பிறர் கொள்ளாமல் காத்தலும், காத்த பொருளை அறம் பொருள் இன்பங்களின் செலவிடுத்தலும் வல்லவன் அரசன். 5

386. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறு மன்ன னிலம்

காண்பதற்கு எளியானாகவும், கடிய(ன) சொல்லன் அல்லனாகவும், ஆயின மன்னன் நிலம், எல்லா நிலத்தினும் அதிகம் என்று சொல்லப்படும்.

அம் மன்னன் நிலம், விளைவும் செல்வமும் உடைத்து என்று கூறுமென்க. 6

387. இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு.

இனிய சொல்லுடனே ஈதலைச் செய்தளிக்கவல்ல அரசனுக்கு இவ்வுலகம் தன் புகழொடு மேவித் தான் கருதிய அளவிற்றாம்.

ஈந்தளிக்க வென்பது, ஈத்தளிக்கவென வல்லொற்றானது. சொலால் தான் கண்டது - தன் புகழொடு தன் செல்வம் காண்டல். அனைத்திவ்வுலகு - அனையதிவ்வுலகு என்க. 7

388. முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

தான் செங்கோல் செலுத்திப் பிறர் வருந்தாமல் காத்து நிற்கும் மன்னன் மனிதனாயினும், கடவுள் என்று புகழ்ந்து வேறாக வைக்கப்படும். 8

**389. செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீட் டங்கு முலகு.**

செவிக்குக் கசக்கும் சொற்களைப் பொறுக்கும் பண்புடைய அரசனுடைய குடைநிழலின் கீழ் அடங்கி வாழும் இவ் வுலகம்.

செவிக்குக் கசக்கும் சொல் - இடித்துச் சொல்லும் பெரியவர் சொல். நீதியால் மண் முழுதும் ஆளும் என்பதாம். 9

**390. கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க் கொளி.**

வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தலும், யாவர்க்கும் தலையளியாகிய கருணை செய்தலும், செங்கோல் செலுத்திக் குடிகளைப் புரந்து காத்தலும் ஆகிய இந்நான்கு செயலையும் உடையவன் வேந்தர்க்கு எல்லாம் விளக்கமாம்.

செங்கோல் - இறைமுறை வழுவாது நடத்தல். 10

இறைமாட்சி முற்றும்.

---

## 40. கல்வி

அஃதாவது, அரசன் கற்றற்குரிய கல்வி; அவை எல்லார்க்கும் ஒக்குமெனக் கொள்க.

**391. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக.**

ஒருவன் கற்கப்படும் நூல்களைப் பழுதறக் கற்க. அப்படிக் கற்ற கல்விக்குத் தக்க வகை சொல்கின்ற நெறியே நிற்க.

கற்பவை யாவது - அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப் பொருளுணர்த்தும் நூலென்க. அதற்குத் தக நிற்றல் - இல்லறந் துறவறங்களில் வழுவாது நிற்றல். 1

**392. எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.**

எண்ணென்று சொல்லப் படுவனவும், மற்றை எழுத்தென்று சொல்லப் படுவனவுமாகிய இவ்விரண்டு கலையுங் கற்றறிந்தார் கல்லாதவர்க்குக் கண்ணென்று சொல்வர்.

இவ்விரண்டுங் கற்றறிந்தார் கல்லாதவர்க்கு அறிவித்தலாற் கண்ணென்க.

393. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

*கண்ணுடையரென்று சொல்லப்படுவர் கற்றவரே. மற்ற கல்லாதவர் முகத்திரண்டு புண்ணுடையர்; கண்ணிலர்.*

இதனால், ஞானக் கண்ணும் ஊனக் கண்ணும் அறிந்து கொள்க. 3

394. உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.

*யாவரும் உவந்து கூடி மகிழும்படித் தலைப்பெய்து, இனி இவரை யாங்ஙனம் கூடுதும் என நினையுமாறு நீங்குதலாகிய அத்தன்மைத்தே, கற்றறிந்தோர் தொழில்.*

*யாவரும் வந்து கூடி உவத்தல் - அப்புலவர் பாராட்டும் மதுர மொழிகளைக் கேட்டு மகிழ்தல்.* புலவரும் புலவருங் கூடுதலும், புலவரும் புலவரல்லாதவருங் கூடுதலெனவுங் கொள்க.

*உவப்பத் தலைக்கூடி, உள்ளிப் பிரிதலெனப் பாடமோதி, புலவர் கூடிப் பனுவலை உள்ளி ஆராய்ந்து பிரிதலென்பாரு முளர்.*

395. உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்.

*செல்வமுடையார் முன்னே செல்வமில்லார் நிற்குமாறு போலக் கல்விச் செல்வமுடையார் முன்னே கல்விச் செல்வமில்லாதவர் ஏக்கற்று நின்று கற்றாரே, கல்விச் செல்வமுடைய தலைமையராவர்; அப்படிக் கற்க மாட்டாதவரே கடையராவர்.*

*செல்வ முடையார்முன் வறுமையாளர் ஒடுங்கி நாணி நிற்பது போலக் கல்வியுடையார்முன் ஒடுங்கி நாணி நின்று கற்பவர் மேலவராவர். அதற்கு நாணிக் கல்லாதவர் கீழ்மையராவரெனக் கொள்க. ஏக்கறுதல் - ஆசையால் தாழ்தல்.* இவை அரசர்க்குக்

396. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.

மணலின்கண் கேணி, தோண்டிய அளவிற்றாக ஊறும்; அதுபோல, மக்கட்கு அறிவு கற்ற அறிவிற்றாக ஊறும்.

தொட்டல் : தோண்டல் எனவறிக. 6

397. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

கற்றவனுக்குத் தன் நாடும் ஊருமேயன்றிப் பிறநாடுந் தன்னுடாம்; பிறவூரும் தன்னூராம் எனக் கருதி ஒருவன் கல்லாது காலங் கழிக்கின்றதென்).

எல்லா நாடு மூருங் கற்றவரைச் சிறப்புச் செய்யும் என்க. 7

398. ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

ஒருவனுக்குத் தானொரு பிறப்பில் கற்ற கல்வி எழு பிறப்பினுஞ் சென்றுதவிப் பெருமை தரும்.

எழு பிறப்பு(ம்) நன்மை தருமென்க. 9

399. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

தாமின்புறுதற்கு ஏதுவாகிய கல்விக்கு உலகம் இன்புறுதலால், அந்த சிறப்பு நோக்கி கற்றறிந்தார் பின்னும் அந்தக் கல்வியை விரும்புவர்.

தாமின்புறுதல் : சொற்சுவை பொருட்சுவையினின்புறுதல்; சிறப்பு, புகழ் பூசை பெறுதல், அறம் பொருளின்பம் வீடு பெறுதல். உலகின்புறுதல் : அக் கல்வியைக் கேட்டு மன மகிழ்ச்சி பெறுதல். ஆதலால், கல்வியைப் பின்னும் பாராட்டுவரெனக் கொள்க. 9

400. கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை.

ஒருவனுக்கு அழிவில்லாத செல்வமாவது கல்வி. அதுவுன்றிப் பொருள் முதலிய செல்வுஞ் செல்வமல்ல.

கல்விச் செல்வம், தாயத்தார், கள்வர், அரசர் கொள்ளப் படாது; கொடுப்பிற் குறைபடாது: பொருட் செல்வத்துக் கிவை யெல்லா முளவெனக் கொள்க. பொருளால் போக ஞான முளவாகா என்க. 10

கல்வி முற்றும்.

---

## 41. கல்லாமை

அஃதாவது, கற்றலைச் செய்யாமை.

401. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

அரங்கினை வகுக்காது வட்டாடினாற் போலும், நிரம்பிய நூல் களைக் கல்லாது, ஒருவன் பலருங் கூடிய சபையின் ஒன்றினைச் சொல்லிப் பாராட்டல். 1

402. கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று.

கல்வியில்லாதான் ஒருவன் பலரும் இருக்கும் சபையில் ஒன்று சொல்லிப் பாராட்டுதற்கு ஆசைப் படுதல், முலையில்லாதவள் ஒருத்தி அணிகலன்களினால் தன்னை அலங்காரஞ் செய்தற்கு ஆசைப் படுதல் போலும்.

இவ்விரண்டும் பலருக்கும் நகை விளைக்குமெனக் கொள்க. 2

403. கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின்.

கல்லாதாரும் மிக நல்லார் ஆவர்; தாமே தம்மை அறிந்து கற்றார் பலரும் இருக்கும் அவைக்கண் ஒன்றினையுஞ் சொல்லா திருக்கக் கூடுமாயின்.

கூடுமாயின், அறிவுடைய ரென்பர்; கூடாதாயின் அறிவில்லாதவ ரென்பாரென்க. 3

404. கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்.

கல்வியில்லாதவன் மிகவும் அழகுடையவனாய் இருந்தாலும், அதனை அறிவுடையார் அழகாகக் கொள்ளார்.

அறிவினை அழகாகக் கொள்வரென்பது கருத்து. 4

405. கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

நூல்களைக் கல்லா ஒருவன் யான் அறிவிற் பெரியன் என்று தன்னை மதிக்கு மதிப்பினைக் கற்றவன் கண்டு, சில சொற்களைச் சொல்ல, அவன் மதிப்புக் கெடும்.

கற்றவனென்பது வருவித்துக் கொள்க. அல்லது கல்லாதவன் தன்னை அறிவிற் பெரியனென்று சொல்லிக் கொண்டாடக் குறைவுபடுதலேயன்றி, நிறைவு படாதெனக் கொள்க. 5

406. உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர்.

கல்லாதவர் காணப்படுதலான் இலர் உளர் என்று சிலர் சொல்லும் சொல் மாத்திரமல்லாமல், தமக்கும் பிறர்க்கும் பயன் படாமையால், விளையாத களர் நிலத்தோடு ஒப்பர்.

களர் நிலத்தை எப்படிப் பேணினும் விளையாது போலப் பேணினும் பயன்படாரென்றது; கல்லாமையும் அறிவில்லாமையும் உதவியில்லாமையும் ஆகிய மாக்கள் செல்வர் வறியர் என்பதல்லாமல், களர் நிலமாமென்க. 6

407. நுண்மா ணுழைபுல மில்லா னெழினலம்
மண்மாண் புனைபாவை யற்று.

நுண்ணியதாய் மாட்சிமைப் பட்டுப் பல நூலினுஞ் செல்லும் அறிவில்லாதவனுடைய எழுச்சியும் அழகும் அலங்காரமாகக் கண்ணுக்கு இனிமைபடப் புனைந்த பாவையுடைய எழுச்சியுமழகும் போலும்.

மண்ணென்பது அலங்காரம். "கைவல் மண்ணுறு வொப்பனை யலங்காரம்" என்பதனாலறிக. மாண் என்பது மிகுதி. வடிவும் அழகுஞ் சிறப்பாதலான் அவையுஞ் சிறப்பல்ல; அறிவு சிறப் பென்றது. 7

408. நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு.

*கற்றவரிடத்து நின்ற வறுமையினும் பொல்லாது, கல்லாதவரிடத்து நின்ற செல்வம்.*

*கல்வியும் அமைதியும் இல்லாதவன் செல்வம், கல்வியும் அமைதியு முடையவர் வறுமையிற் கொடிது.* 8

409. மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்று ரனைத்திலர் பாடு.

*கல்லாதவர் உயர்ந்த சாதிக்கட் பிறந்தாராயினும், தாழ்ந்த சாதிக்கட் பிறந்தும் கற்றார்போலப் பெருமையிலராம்.*

*உடலோடொழியுஞ் சாதியின் உயிரொடு தொடருங் கல்வி ஆதலாற் சிறப்பு மிழிவு மறிக.* 9

410. விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.

*மிருகத்தொடு மக்களெத்தனை நன்மையுடையர் அத்தனை நன்மையுடையர் கல்லாதவரொடு விளங்கிய நூலைக் கற்றவர்.*

*விலங்கினம் இழிவு, மக்கள் சிறப்பு; கல்லாதவர் இழிவு, கற்றவர் சிறப்பு; எனக் கற்றவரையும் கல்லாதவரையும் ஒப்புச் சொல்லியவாறு அறிந்து கொள்க.* விலங்கு அறிவினும் மக்கள் அறிவு அதிகம்; மக்களறிவினும் கற்றவரறிவு அதிகமென்றது, நன்மையுமதுபோலக் கொள்க. 10

கல்லாமை முற்றும்.

---

## 42. கேள்வி

*அஃதாவது, நூற்பொருள்களைக் கற்றறிந்தார் சொல்லக் கேட்டல்.*

411. செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வம்
செல்வத்து ளெல்லாந் தலை.

*ஒருவருக்குச் செல்வத்துட் செல்வமாவது செவியான் வருஞ் செல்வமே. அதுவே செல்வங்களுள் சிறந்ததாகும்.*

*அச் செல்வம் எல்லாப் பொருள்களையும் கேள்வியினால் அறிதல் ; பிற செல்வம் பொருளான் வரும். அச் செல்வம் நிலையன்று; கேள்வியினால் வரும் செல்வம் நிலைபெற்று நிற்றலால் தலைமையாய செல்வமெனக் கொள்க.* 1

**412. செவிக்குண வில்லாத போழ்து சிறிது**
**வயிற்றுக்கு மீயப் படும்.**

*செவிக்கு உண்பனவாகிய கேள்வி இல்லாத போழ்து, வயிற்றுக்கும் சிறிது உணவிடப்படும்.*

*செவியுணர்வுச் சிறப்பும், வயிற்றுணவு இழிவும் கூறியது : வயிற்றுணவு நோயுங் காமமும் (உண்டாக்கும்); ஆதலால் சிறிதென்றாரென்க.* 2

**413. செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவின்**
**ஆன்றாரோ டொப்பர் நிலத்து.**

*செவியுண்பனவாகிய கேள்வியினையுடையார் நிலத்தின் கண் இருந்தாராயினும், அவியுணவினையுடைய தேவரோடொப்பர்.*

*அவியுணவு : தேவர்க்கு வேள்வியின் தீயின்கட் கொடுப்பது.*

**414. கற்றில னாயினுங் கேட்க வஃதொருவன்**
**ஒற்கத்தி னூற்றாந் துணை.**

*உறுதி நூல்களைத் தான் கற்றிலனாயினும், அவையிற்றினைக் கற்றறிந்தார் சொல்லக் கேட்க; அக்கேள்வி ஒருவருக்குத் வந்தவிடத்து ஊன்றுகோல் துணையானது போலும்.*

*தவறி விழாமல் தாங்கும் ஊன்றுகோல் போல, நரகில் வீழாமல் தாங்கும் கேள்விச் சொல்லெனக் கொள்க. ஊன்றுகோல் ஊற்றுக் கோலென வல்லொற்றாயிற்று. (இஃது அடுத்த குறளுக்கு உரியதுபோலும்)* 4

[குறிப்பு : *அஃதொருவற்கு என்பது அச்சுப்பாடம்.*]

**415. இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே**
**ஒழுக்க முடையார்வாய்ச் சொல்.**

வழுக்கி விழத்தும் நிலத்தில் செல்வர்க்கு ஊன்றுகோல் உதவியாய் நிற்கும்; (அதுபோல), காவற் சாகாடு உகைப்பார்க்கு ஒழுக்கமுடையர் வாய்ச் சொற்கள் (நிற்கும்).

காவற் சாகாடு, உலகத்தைக் காக்கும் அரசர், உலகத்தில் தவறு வராமற் காக்கும் உபாயம். கல்வியுடையார் ஒழுக்கம் இலராகில் அறிவிலாராம்; ஆதலான் ஒழுக்கமுடையார் என்றாரென்க. அவர் மந்திரியர், புரோகிதர், சேனுவரையர், முதுமக்கள் எனக் கொள்க. இது காவற் சாகாடுகைக்கும் அரசர் கேள்வி யென்க. 5

416. எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்.

ஒருவன் எவ்வளவுஞ் சிறிதானும் நல்ல உறுதிப் பொருள்களைக் கேட்க; அக்கேள்வி அத்துணையாயினும் நிறைந்த பெருமையைத் தருமாகலான்.

எனைத்தானு மென்பது, கேட்கும் பொருளுங் காலமு மென்க. அக்கேள்வி, மழைத்துளி போல வந்துகூடி அறிவு பெருகுமென்க.

417. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லாரிழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர்.

மறந்தும் நினைந்தும் தமக்குப் பேதைமை தருஞ் சொற்களைச் சொல்லார், தாமும் நுண்ணிதாக ஆராய்ந்து அறிந்ததன் மேலும் அறிந்தோரிடத்துக் கேட்குங் கேள்வியினை யுடையார்.

ஈண்டிய கேள்வி : பலபேரிடத்துங் கேட்குங் கேள்வி. 7

418. கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி.

செவி கேட்குமாயினும் கேளாத செவிட்டுச் செவியாம், கேள்வியால் துளைக்கப் படாத செவிகள்.

பழைய துளையிருந்தும், கேள்வியால் துளைக்கப் படாத செவியாம், கேள்வியை மனத்துக் கொள்ளாதவர் செவிகளென்க. 8

419. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது.

நுண்ணிய கேள்வியை உடையரல்லாதார் பணிந்த மொழியினை யுடையராதல் கூடாது. 9

420. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினு மென்.

*செவியான் உண்ணப்படும் சுவையை யுணராத வாய் உணர்வினை உடைய மாந்தர் செத்தாலென்? இருந்தாலென்?*

[குறிப்பு: வாயுணர்வின் என்பது அச்சுப்பாடம்.] 10

கேள்வி முற்றும்.

---

## 43. அறிவுடைமை

*அஃதாவது,* தன்னறிவன்றிக் கல்வி கேள்விகளினானும் மிகுந்த அறிவுடைமை.

421. அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா வரண்.

*அரசர்க்கு அறிவென்பது இறுதி வாராமற் காக்கும் ஆயுதமாம்; அதுவேயுமன்றிப் பகைவர்க்கு அழிக்கப்படாத உள்ளரணுமாம்.* 1

*காத்தல்: அறிவினால், வருமுன்னம் பரிகரித்தல்.*

422. சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு.

*மனத்தை அது சென்றவிடத்திற் செல்லவிடாது, அவ்விடத்தின் நன்மை தீமைகளை ஆராய்ந்து, (தீயதனின் நீக்கி) நல்லவிடத்திற் செலுத்துதல் அறிவு.*

*ஐம்புலன்களையும் இடமறிந்து செலுத்துதல் அறிவெனக் கொள்க.* 2

423. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

*யாதொரு பொருளை யாவர் யாவர் சொல்லக் கேட்பினும், அப்பொருளின் மெய்யான பயனைக் காண்பதறிவு.*

உயர்ந்த பொருள் இழிந்தார் வாயினும், இழிந்த பொருள் உயர்ந்தார் வாயினும், உறுதிப் பொருள் பகைவர் வாயினும், கேடு வரும் பொருள் நட்டார் வாயினும், ஒரோர் வழி கேட்கப்படுதலான் யார் யார் வாய்க் கேட்பினு மென்றார். சொல்வார் இயல்பு நோக்காது, பொருளின் பயன் நோக்கிக் கொள்க என்றது. 3

**424. எண்பொருள வாகச் செலச் சொல்லித் தான்பிறர்வாய்**
**நுண்பொருள் காண்ப தறிவு.**

*தான் சொல்லும் சொற்களான், அரிய பொருளவாயினுங் கேட்பார்க்கு எளிய பொருளவாய் மனங் கொள்ளச் சொல்லி, பிறர் வாய்க் கேட்கும் சொற்களின் நுண்பொருள் காணவரிதாயினும் அதனைக் காணவல்லதே அறிவாம்.* 4

**425. உலகந் தழீஇய தொட்ப மலர்தலும்**
**கூம்பலு மில்ல தறிவு.**

*உலகத்தைத் தழுவி நட்பாக்குவது ஒருவனுக்கு அழகாம். அந்த நட்பினிடத்து மலர்தலும் குவிதலும் இன்றி ஒரு நிலையாய் நிற்பது அறிவு.*

*மலர்தல் :* நட்பின் மிகுதி காட்டல். *கூம்பல் :* நட்பின் குறைவு காட்டல். *உலக மென்பது உயர்ந்தோ ரென்க.* 5

**426. எவ்வ துறைவ துலக முலகத்தோ**
**டவ்வ துறைவ தறிவு.**

*உலகம் யாதொரு வகையாயினும், எவ்வாறுயிற்று; அவ்வாறு தான்மேவி, எவ்வாறு ஒழுகிற்று, அவ்வாறு தானும் ஒழுகுதல் அறிவு.* 6

**427. அறிவுடையா ராவ தறிவா ரறிவிலார்**
**அஃதறி கல்லா தவர்.**

*அறிவுடையாராவார் ஆவக் கடவதனை முன்னறிய வல்லார்; அறிவிலார் அதனை முன்னறிய மாட்டாதார்.* 7

**428. அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ**
**தஞ்ச லறிவார் தொழில்.**

அஞ்சப்படுவதனை அஞ்சாமலிருப்பது பேதைமையாம். அஞ்சப் படுவதனை அஞ்சுவது அறிவார் தொழிலாம்.

அஞ்சுவது அறிந்து செய்யுந் தொழிலுடையர், அஞ்சும் காரியத்துக் கஞ்சுவர். 8

429. எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்.

வரக்கடவதாகிய வதனை முன்னறிந்து காக்க வல்ல அறிவினை யுடையார்க்கு அவர் நடுங்க வருவதொரு துன்பமில்லை. 9

430. அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலார்
என்னுடைய ரேனு மிலர்.

அறிவுடையார் பிறிதொன்றும் இலராயினும் எல்லாமுடையார்; அறிவில்லாதார் எல்லா முடையராயினும் ஒன்றுமில்லாராவர்.

அறிவுடையாருக்கு எல்லாப் பொருளும் வரும்; அறிவில்லாருக்கு எல்லாப் பொருளும் போம் என்றது. 10

அறிவுடைமை முற்றும்.

---

## 44. குற்றங்கடிதல்

அஃதாவது, காமம், வெகுளி, மயக்க முதலாகிய குற்றங்களை விலக்கல்.

431. செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

அரசர் மதமும், வெகுளியும், காமமுமாகிய குற்றங்களில்லாதவர் செல்வமே பெருமையாகிய குணத்தை யுடைத்து.

செருக்குச் - செல்வமதம்; சினம் - கோபம்; சிறுமை - காமம்; இவை அரசர் முதலாகிய செல்வர்க்கு ஆகா என்றது. 1

432. இவறலு மாண்பிறந்த மானமு மாணு
உவகையு மேத மிறைக்கு.

பொருள் மேலாசையும் நன்மை நீங்கிய மானமும், அளவிறந்த மகிழ்ச்சியும் அரசனுக்குக் குற்றமாம்.

மாண்பிறந்த மானமாவது: அந்தணர் அருந்தவத்தோர் பெரியோர் இவர்களை வெட்கத்தினால் வணங்காமை. 2

433. தினைத்துணையுங் குற்றம் வரினும் பனைத்துணையாய்க்
கொள்வர் பழிநாணு வார்.

தினையளவு குற்றம் வந்தாலுமதனைப் பனையளவாகக் கொள்வர் பிறர் பழிப்பரென்னும் நாணமுடையவர்.

[குறிப்பு: தினைத்துணையாம்: பனைத்துணையாம் என்பன அச்சுப் பாடங்கள். 3

434. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றம் தரூஉம் பகை.

பொருளைக் காப்பது போலத் தன்னிடத்திற் குற்றம் வராமற் காக்க. குற்றமே தன்னைக் கொல்ல வரும்பகையாம். 4

435. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

குற்றம் வருமுன்னர்க் காவாத அரசன் வாழ்க்கை, குற்றம் வந்தால் நெருப்பின் முன்னே நின்ற வைக்கோற்போர் போல வெந்து கெடும். 5

436. தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பின்
என்குற்ற மாகு மிறைக்கு.

முன்பு தன் குற்றத்தைக் கண்டு தவிர்த்துப் பின்பு பிறர் குற்றத்தைச் செய்யாமல் நீக்குவானாகில், பின்னை என்ன குற்றம் அரசனுக்கு? 6

437. செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற்பால தின்றிக் கெடும்.

பொருளால் தனக்குப் பகை வராமற் செய்ய வேண்டிய காரியத்தைச் செய்யாது, பொருள்மேல் ஆசை வைத்தானாகில், அவ்வரசன் செல்வம், தாங்குவாரில்லாமற் கெடும்.

இவறல் : ஆசை(ப்படல்) (பொருளால் ஆவன) :—

பொன்னி னாகும் பொருபடை யப்படை
தன்னி னாகுந் தரணி தரணியிற்
பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொருள்
துன்னுங் காலைத் துன்னாதன வில்லையே என்பதனாலறிக.
(சீவக. 1923)

[குறிப்பு : உயற்பாலதன்றி என்பது அச்சுப் பாடம்.] 7

**438. பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று.**

பொருளை விடத்தகும் இடத்து விடாது பற்றிக்கொள்ளும் ஆசையாகிய உள்ளத்தின் உலோபம் எல்லாவற்றுள்ளும் வைத் தெண்ணப்படுவதொன்றன்று ; மிகப் பெரிதென்றவாறு.

எல்லா நற்குணத்தையும் உலோப குணம் கெடுத்து மேற் கொள்ளும் என்றது. 8

**439. வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.**

அரசன் செல்வ மதத்தால் தன்னை எக்காலமாகிலும், நன்கு மதியா தொழிக ; தனக்கு நன்மை பயவாத வினைகளை மனத்தால் விரும்பாது ஒழிக

நன்றி பயவா வினை - பழியும் பாவமும் வரும் வினைகள். 9

**440. காதலர் காத லறியாமை உய்க்கிற்பின்
ஏதில வேதிலார் நூல்.**

அரசன் தான் காதல் வைத்த தேவியரிடத்து, காதல் வையாத தேவியர் அறியாமல் அனுபவிக்க வல்லானாயில், பகைவர் வஞ்சித்தற்கு எண்ணும் எண்ணம் பழுதாம்.

அரசன் காதலும் கல்லாமையும் அறிந்த பகைவர், அது வழியாக வஞ்சனை செய்வாராதலால் அறியாமல் அனுபவிக்க

என்றார். காதலர் காதல் எனவும், ஏதில ஏதிலார் நூல் எனவும் பதம் பிரித்துப் பொருள் காண்க.

ஏதிலார் நூல் : பகைவர் எண்ணும் உபாய நூல். 10

[குறிப்பு : காதல காதல் என்பது அச்சுப்பாடம்.]

குற்றங் கடிதல் முற்றும்.

---

## 45. பெரியாரைத் துணைக் கோடல்

அஃதாவது, மூவிரு குற்றமும் முற்றக் கடிந்து, காவற் சாகாடுகைக்கும் அரசனைத் தீநெறி விலக்கி நன்னெறி செலுத்தும் பெரிய அறிவுடையாரைத் தனக்குத் துணையாகக் கொள்ளுதல். அவர்கள் மந்திரியர், புரோகிதர், சேனாவரையர், முதுகுரவர் எனக் கொள்க.

441 அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்.

அறத்தின் உண்மையை அறிந்து, முதிர்ந்த அறிவுடையார் கேண்மையை அரசன் கொள்ளுந் திறமறிந்து ஆராய்ந்து கொள்க.

அறத்தினாலும், மூத்த அறிவினாலும், சீலத்தாலும், காலத்தாலும், முதிர்ந்த அறிவுடையார் உலகியலையும் அறிந்தவர். (அவர்) திறத்தை அறிந்து நன்கு மதித்துக் கேண்மை கொள்க என்றது.

கேண்மை கொளல் : துணைக் கொள்ளுதல். 1

442. உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

தெய்வத்தினால், மக்களால், தனக்கு வந்த துன்பங்களை நீக்குமாறு அறிந்து நீக்கிப் பின், அப்படி வாராவண்ணம் முன் அறிந்து காக்கவல்ல தன்மையை உடையாரை அரசன் உவப்பன செய்து, துணையாகக் கொள்க.

தெய்வத்தான் வரும் துன்பம் : மழை பெய்யாமை, மழை மிகுதி பெய்தல், காற்றடித்தல், தீப்பிணி. அதற்குச் சாந்தி செய்தல், (தீர்க்கும் வழி) : மக்கள், சுற்றத்தார், தாயத்தார், தொழில் செய்வார், பகைவர், கள்வர், இவர்களால் வரும் துன்பத்தைச் சாம பேத தான தண்டங்களால் விலக்கல், அப்படி வரும் முன்னர்க் காவலுடையாரைத் துணைக் கோடல். 2

443. அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

பெரியவர்களை அவர் உவப்பன அறிந்து செய்து, தமக்குத் தமராய்க் கொள்ளுதல், அரசர்க்கு அரிய பெறுவனவற்றுள்ளும் அரியது.

தமர் : தமக்குத் துணையாகியவர். 3

444. தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

அறிவு முதலியவற்றால் தம்மின் மிக்கார், தமக்குத் துணையாகத் தம் வழி ஒழுகுதல், அரசர்க்கு வலியுடைமையுள் எல்லாம் தலைமையான வலியுடைமையாம். 4

445. சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

அரசன் தன் பாரம் அமைச்சன் கண்ணாகக் கொண்டு நடத்தலால், அத் தன்மைத்தாகிய அமைச்சரை ஆராய்ந்து தனக்குத் துணையாகக் கொள்க.

சூழ்வார் : அமைச்சர் ; சூழ்ந்து கொளல் : ஆராய்ந்து துணையாய்க் கொளல். 5

446. தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.

தக்கார் தனக்கினமாகத் தானறிந்து நடந்து கொள்ள வல்ல அரசனைப் பகைவர் செய்யக் கிடந்த உபாயம் யாதும் இல்லை,

*தக்கார் : தகுதி உடையார்; பகைவர் செய்யும் உபாயம் : கூடினரைப் பிரித்தல், வேறு பகை விளைத்தல், போர்வலி காட்டல், மாறி வஞ்சித்தல் முதலாயின.* 6

**447. இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே**
**கெடுக்குந் தகைமை யவர்.**

*தீயன கண்டால் நெருங்கிச் சொல்லும் துணையுடையாரை, இவர் நமக்குத் துணை யென்றாளும் அரசரைக் கெடுக்கும் பெருமை யுடைய பகைவர் உலகத்து யாவர்?* 7

**448. இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்**
**கெடுப்பாரில் லானுங் கெடும்**

*இடித்துச் சொல்லும் தகுதி உடையாரைத் துணையாகக் கொள்ளாமையால் தனக்கு ஏமம் இல்லாத அரசன், பகையாய்க் கெடுப்பார் இல்லையாயினும், தானே கெடும்.*

*இடிப்பாரை யில்லாத வேமமாராத மன்னன் எனக் கொள்க. "ஏமமே, சேமங், காவல்" என்பதனாற் காக்கும் துணை என்க.* 8

[குறிப்பு: ஏமரா என்பது அச்சுப்பாடம்.]

**449. முதலிலார்க் கூதிய மில்லை மதலையாம்**
**சார்பிலார்க் கில்லை நிலை.**

*முதற் பொருள் இல்லாத வணிகனுக்கு ஆதாயம் இல்லையாம்; அதுபோலத் தம்மைத் துணையில்லாத அரசனுக்கு நிலையில்லை.*

*முதலைப் பெற்றே இலாபம் பெறவேண்டுமாறுபோலத் தாங்கு வாரைப் பெற்றே நிலைபெற வேண்டும் என்க. அரசர் பாரத்தைத் தாங்குந் துணை, மந்திரியர், சேனைவரையர். மதலை - தூண். தூணாகிய சார்பினான் இல்லம் நிலைபெறும் என்பது போலக் கொள்க.* 9

**450. பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே**
**நல்லார் தொடர்கை விடல்.**

*அரசன் மனமறிந்து பலரோடும் பகை கொள்ளுதலிற் பத்து மடங்கு அதிகமாகிய தீமையுடைத்து அரசன் பெரியாரோடு நட்பினைக் கொள்ளாது ஒழிதல்.* 10

பெரியாரைத் துணைக்கோடல் முற்றும்.

---

## 46. சிற்றினஞ் சேராமை

அஃதாவது, சிறிய இனத்தைப் பொருந்தாமை. சிறிய இனமாவன ; சிற்றறிவுடையார், உலகியல்பறியார், அறம் விலக்குவார், காமம் கூறுவார், விடர், தூர்த்தர், கூத்தர் முதலாயினோர்.

451. சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாய்ச் சூழ்ந்து விடும்.

சிற்றினத்தைக் கண்டு அஞ்சுவார், பெருமை இயல்பை உடையார். சிறுமை இயல்பை உடையார் சிற்றினத்தைக் கண்டால் தமக்குச் சுற்றமாக எண்ணிப் பற்றிக் கொள்ளுவார்.

சுற்றம் : உறவு. பெரியவர் சிறியவரைக் கண்டால் அஞ்சுவர். சிறியவர் சிறியவரைக் கண்டால் உறவாடுவர். 1

[குறிப்பு : சுற்றமாச் சூழ்ந்து என்பது அச்சுப்பாடம்.]

452. நிலத்தியல்பான் நீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.

நிலத்தினியல்பானே நீர் தன்னியல்பு திரிந்து, அந் நிலத் தியல்பு ஆனதுபோல, மாந்தர்க்குந் தற்குணங் கெட்டு இனத்தின் குணம் ஆம்.

நீர் நிறமுஞ் சுவையுங் குணமும் வேறுபடும் ; மாந்தரும் வடிவுங் குணமுந் தொழிலும் வேறுபடுவர். 2

453. மனத்தானு மாந்தர்க் குணர்ச்சி யினத்தானும்
இன்னா னெனப்படுஞ் சொல்.

மார்ந்தர்க்கு ஐம்புல உணர்ச்சியும் மனத்தினால் தெரியப்படும்; இவன் இன்ன தன்மையனென்று தெரிந்து சொல்லப்படும் அவன் சேர்ந்த இனத்தின் காரணத்தினான்.

கண்ணினாற் கண்டான், காதினாற் கேட்டான் என்பதுபோல, நல்லவரைச் சேர்ந்தால் நல்லவனென்றும், பொல்லாதவரைச் சேர்ந்தாற் பொல்லாதவனென்றுஞ் சொல்லப்படும் என்க. 3

454. மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்
கினத்துள தாகு மறிவு.

ஒருவற்கு விசேட உணர்வு மனத்தின் உள்ளது போலக் காட்டி, அவன் சேர்ந்த இனத்தினிடத்தே வந்ததாம் அறிவு.

மனத்தினிடத்தே, இனத்தினிடத்தே, அறிவு இருந்து, நல்லறிவு, பொல்லா அறிவு என்பது இனத்தினிடத்தே காட்டியது என்க. 4

455. மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்.

மனந் தூய்மையாதலும், செய்வினை தூய்மையாதலும் இரண்டும் ஒருவர்க்குத் தான் சேர்ந்த இனந் தூய தன்மையாயிருப்பின் அது பற்றுக் கோடாக வரும்.

தூவா வருமென்பது, கலந்ததனால் வருமென்றது. தான் சேர்ந்த வினந் தூய்மையாயிருப்பின், மனமுஞ் செய்வினையுந் தூயனவா யிருக்குமென்றது. 5

456. மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

மனந் தூயார்க்கு மக்கட்பேறு நன்றாம்; இனந் தூயார்க்கு நன்றாகாத வினையில்லை; எல்லா(ம்) நன்றாம்.

தூய்மை: நற்குணம், நற்செய்கை. நன்மனமுடையார்க்கு நன்மக்கட் பேறுண்டாம். நல்லினமுடையார்க்கு எல்லாத் தொழிலும் நன்றாமென்க. 5

457. மனநல மன்னுயிர்க் காக்க மினநலம்
எல்லாப் புகழுந் தரும்.

நிலைபெற்ற உயிர்கட்கு மனத்து நன்மை செல்வத்தைக் கொடுக்கும்; இனத்தின் நன்மை, அதனோடு, எல்லாப் புகழையுங் கொடுக்கும்.

நன்மனம் செல்வத்தைத் தரும்; நல்லினம் புகழைத் தருமென்க. 7

456. மனநல னன்குடையா ராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து.

மன நன்மையை, முன்னே நல்வினையால், தாமே உடையாராயினும், சான்றோர்க்கு இனம் நன்மை அதற்கு வலியுடைத்து.

இன நன்மை சான்றோர் மன நன்மைக்கு வலியுடைத் தென்க. சான்றோர் : நன்மையுடையோர். 8

**459. மனநலத்தி னாகு மறுமைமற் றஃதும்
இனநலத்தி னேமாப் புடைத்து.**

ஒருவற்கு மன நன்மையானே மறுமை இன்பமுண்டாம்; அப்படி உண்டாம் மன நன்மைக்கு இன நன்மை வலியுடைத்து.

இன நன்மை இல்லாயின், மன நன்மையும் கெடுமென்பது கருத்து. ஏமாப்பு : வீறு பெறுதல். "ஏமாப்புஞ் செம்மாப்பு மிறுமாந்த லாகு" மென்பதனாலறிக. 9

**460. நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉ மில்.**

ஒருவற்கு நல்லினத்தின் மிக்க துணையுமில்லை, இன்ப மனுபவித்தற்கு; தீயினத்தில் மிக்க பகையுமில்லைத் துன்பம் அனுபவித்தற்கு.

நல்லினம் இன்பந் தரும்; தீயினந் துன்பந் தரும் என்றது.

சிற்றினஞ் சேராமை முற்றும்.

---

## 47. தெரிந்து செயல் வகை

அஃதாவது, அரசன் செய்யும் வினைகளை ஆராய்ந்து செய்யும் வகை. வினையென்பது தொழில்.

**461. அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கும்
ஊதியமுஞ் சூழ்ந்து செயல்.**

அரசன் வினை செய்வதனை, அழிவதனையும், அழிந்தாற்பின் ஆவதனையும், அப்படி ஆவதனைப் பிற்பொழுது தரும் ஆதாயத்தையும், சீர்தூக்கிப் பார்த்து, ஆதாயம் உண்டாயிற் செய்க.

மிகுந்த தொழில் செய்யுமிடத்து, அழிவதும் அழிந்தாற் பின்னுந் தொடங்கிச் செய்தால் ஆவதனையும், ஆனால் அதன் செலவையும் ஆதாயத்தையும் பார்த்துச் செய்க வென்றது. 1

462. தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில்.

தான் மனமறிந்து தெரிந்த இனத்தைக் கொண்டு செய்யத் தகுந் தொழிலை ஆராய்ந்து, பின் தானும் மனதில் எண்ணிப் பார்த்துச் செய்து முடிக்கவல்ல அரசர்க்கு அரிய பொருள் யாதொன்றுமில்லை; எல்லாம் எளிது.

அத் தொழிலின், திறம் அறிந்த இனம், என்றுமாம். 2

463. ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார்.

மேல் வரும் ஆதாயத்தைக் குறித்துக் கையிலிருக்கும் முதலை இழக்குந் தொழில்களைச் செய்யார் அறிவுடையார். 3

464. தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னும்
ஏதப்பா டஞ்சு பவர்.

தொழிலறிந்த வினத்தொடும் ஆராய்ந்து தெளியாத தொழிலைத் தொடங்கிச் செய்யார், தமக்கு இளிவரவு என்னும் குற்றத்திற்கு அஞ்சுபவர்.

இளிவரவு : பிறர் சொல்லும் இகழ்ச்சி. 4

465. வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு.

தன்னால், முடியும் முடியாது என முழுதுமெண்ணிப் பாராமல், சிறிதெண்ணிய உடனே அரசன் பகைவர்மேற் செல்லுதல் பகைவரைத் தன் வீட்டில் அழைத்து வந்து வைப்பதற்கு வழியாம்.

பாத்தி யென்பது : வீடு; ஆறென்பது : வழி. 5

466. செய்தக்க வல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

*அரசன் செய்யத் தகாத வினைகளைச் செய்தால் கெடும்; இனிச் செய்யத் தகும் வினைகளைச் செய்யாதிருந்தாலும் கெடும்.*

அறம், பொருள், இன்ப மூன்றிற்குங் *கொள்க.* 6

**667. எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்**
**எண்ணுவ மென்ப திழுக்கு.**

காரியம் ஆகும், ஆகாது என்பதனை எண்ணிப் பார்த்து ஆகுமென்னுங் காரியத்தைச் செய்தற்குத் துணிக. *துணிந்தபின் எண்ணுவோம் என்ப திழுக்காம்.* 7

**468. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று**
**போற்றினும் பொத்துப் படும்.**

வருந்தாமல் செய்து முடியும் உபாயத்தைப் பார்த்துச் செய்யாத வருத்தம், *பலருங் கூடிச் செய்தாலும்* (வருத்தம்) போகாது.

*பலர் நின்று போற்றல் : பலர் நின்று காத்த லென்றுமாம்.*

**469. நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்**
**பண்பறிந் தாற்றாக் கடை.**

நன்மை செய்யுமிடத்தும் தவறுண்டு, *அவரவர் குணமறிந்து செய் யாத விடத்து.*

தண்டஞ் செய்வார்க்கு நன்மை செய்யிற் பயந்து செய்தானென்று தவறு செய்வானதலால், அவரவர் குணமறிந்து செய்க *வென்றது.* 9

**470. எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு**
**கொள்ளாத கொள்ளா துலகு.**

*இகழ்ச்சி வாராத* காரியத்தை *எண்ணிச் செய்ய* வேண்டும்; *அரசனும் உலகத்தார்க்கு* ஒவ்வாத காரியத்தைச் *செய்தால், ஒத்துக் கொள்ளார்கள்.* 10

தெரிந்து செயல்வகை முற்றும்.

## 48. வலியறிதல்

*அஃதாவது, அரசன் பகைவர் வலியை யறிதல்.*

471. வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியும்
துணைவலியுந் தூக்கிச் செயல்.

*அரசன் தான் செய்யக் கருதிய வினையின் வலியையும், அதனைச் செய்து முடிக்கும் தன்வலியையும், அதனை விலக்கும் மாற்றான் வலியையும், மாற்றானுக்கும் தனக்குந் துணையாவார் வலியையும், சீர்தூக்கிப் பார்த்துத் தன் வலி மிகுமாயின் அவ் வினையைச் செய்க.*

இருவர் வலியுமொத்தாலும், தன் வலி குறைந்தாலும் செய்ய வேண்டா; தன் வலி மிகுந்தாற் செய்க வென்றது. 1

472. ஒல்வ தறிவ தறிந்தா னட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்.

*தனக்கியலும் வினையையும் அதற்கறிய வேண்டுவதாய வலியையும் அறிந்து, கருத்தை அதன்மேல் வைத்துப் பகைமேற் செல்லும் அரசர்க்கு முடியாத காரியம் இல்லை.*

*ஒல்வது : தனக்கியல்வது. அறிவது :* அதற்கேற்ற வலியை அறிவது. *அதன் கட்டங்கி என்பது, அப்படி அதனிடத்துத் தங்கியென அறிக.* 2

473. உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
இடைக்கண் முரிந்தார் பலர்.

தம்முடைய *வலியறியாதே,* மனவெழுச்சியால் *தம்மினும் வலியா* ருடனே சண்டை செய்து, நடுப்படையில் *முரிந்து கெட்ட அரசர் பலர்.* 3

474. அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

*அயல் வேந்தரோடு பொருந்தி நடந்து கொள்வதும் செய்யான், தன் வலியும் மாற்றரசர் வலியும் அளந்தறிதலும் செய்யான், தன்னை வலியனென்று எண்ணி வேற்று வேந்தரோடு பகைத்த அரசன் உடனே கெடுவன்.* 4

475. பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்.

பீலியேற்றிய வண்டியில் அச்சு முறியும், பீலியது பொறுக்கும் அளவன்றி, மிகுத்தேற்றின்.

எளியரென்று பலரோடு பகை கொள்வான், தான் வலியனே யாயினும் பலர் மிகுத்த வழி, வலியழிந்து கெடுவன். 5

476. நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும்.

ஒரு மரத்தின் கொம்பின் நுனிக்கண்ணே ஏறி அதனை மிகவும் அலைத்தானாகில், அவன் உயிர்க்கு இறுதியாய் முடியும்.

பகைமேற் சென்றவரசன் தன்னாற் சொல்லலா மளவும் சென்று சண்டை செய்தவன், பின்னும் மன வெழுச்சியால் மிகுந்த படையிற் செல்லில் உயிர்க்கு இறுதியாம். 6

477. ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்
போற்றி வழங்கு நெறி.

கொடுக்கும் வழி, தனக்குள்ள பொருளின் அளவு அறிந்து கொடுக்க; அது பொருளைப் பேணிக் கொண்டு ஒழுகும் நெறியாம். 7

478. ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை.

அரசர்க்குப் பொருள் வருகின்ற நெறியளவு சிறிதாயினும், அதனாற் கேடில்லை, போகின்ற நெறியளவு அதனிற் பெருகா தாயின்.

பொருள் வரும் வழி சிறிதாயினும் முதலுக்குக் கேடில்லை, செலவு மிகுதி ஆகாதவழி, எனக் கொள்க. இட்டிது - சிறிதென்க. 8

479. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
இல்லாகித் தோன்றிக் கெடும்.

தனக்குப் பொருள் வரும் அளவறிந்து செலவு செய்து வாழ மாட்டாதவன் வாழ்க்கை, தனக்கு வந்த பொருள் நில்லாமல்,

செலவினால் இல்லையானது போலத் தன் வாழ்க்கையுந் தோன்றி, இல்லையெனக் கெடும். 9

[குறிப்பு: தோன்றாக் கெடும் என்பது அச்சுப் பாடம்.]

480. உளவரை தூக்காத வொப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்.

தனக்குள்ள அளவு சீர்தூக்கிப் பாராத ஒப்புரவு ஆண்மையால் ஒருவன் செல்வத்தின் எல்லை உடனே கெடும்.

இவை நான்கு பாட்டும் பொருள்வலி கூறியன. 10

வலியறிதல் முற்றும்.

---

## 49. காலமறிதல்

அஃதாவது, தன் வலியறிந்த அரசன் பகைவர் மேற் செல்லுங் காலம் அறிதல்.

481. பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

தன்னின் வலிய கோட்டானைக் காக்கை பகற் காலத்தில் வெல்லுமாதலால், பகைவரை வெல்லும் வேந்தருக்குங் காலங் கருத வேண்டும்.

இரவில் வெல்லுங் கூகையைக் காக்கை பகலில் வெல்லும்; ஆதலால், வெல்லும் காலமறிய வேண்டும் வேந்தருக்கு எனக் கொள்க. 1

482. பருவத்தோ டொட்ட வொழுகல் திருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.

அரசன் பகைவரை வெல்லும் பருவத்தொடு பொருந்தி ஒழுகுதல், ஒருவரிடத்தும் நில்லாத செல்வத்தைத் தன்னைவிட்டு நீங்காமற் கட்டும் கயிறும். 2

483. அருவினை யென்ப வுளவோ கருவியால்
கால மறிந்து செயின்.

அரசரால் செய்தற்கரிய வினைகள் என்று சொல்லப்படுவன உளவோ, அவற்றை முடிக்குங் கருவிகளுடனே செய்தற்காம் காலமறிந்து செய்வாராயின்.

கருவிகளுடனே காலமறிந்து செய்யின் எளிதின் முடியுமென்க. கருவி - தொழிலுக்கேற்ற கருவி. 3

484. ஞாலங் கருதினுங் கைகூடுங் காலம்
கருதி யிடத்தாற் செயின்.

ஒருவன் ஞாலமெல்லாம் தான் ஆளக் கருதினும் அவனுக்குக் கைகூடும், அதற்குச் செய்யும் காலம் அறிந்து இடத்தொடு பொருந்தச் செய்வானாயின். 4

485. காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

தப்பாது ஞால மெல்லாம் கொள்ளக் கருதும் அரசர் தம் வலி மிகுமாயினும் கருதாது, அதற்கேற்ற காலத்தைக் கருதி, அக்காலம் வருமளவும் பகைமேற் செல்லார்.

கலங்காது என்பதனைத் தப்பாமலென்க. கலங்கிக் காலந்தப்பாமல் எனவும், காலம் தப்பிக் கலங்காமலெனவும் கொள்க. 5

486. ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

வலி மிகுதியுடைய அரசன் பகைமேற் செல்லாது, காலம் பார்த்திருக்கின்ற இருப்பு, பொருகின்ற கிடாய் தன் பகை கெடப் பாய்தற்குப் பின்வாங்கும் தகைத்து. 6

487. பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

அறிவுடைய அரசர் பகைவர் மிகை செய்தது கண்டவுடனே, பகைவர் அறியப் புறத்துக் கோபங் கொள்ளார்; அவரைத் தாம் வெல்லுங் காலம் வருமளவும் உள்ளே வெகுண்டு கொண்டிருப்பர், ஒள்ளிய வெற்றி யுடையவர்.

வேர்த்தல் : கோபித்தல். பொள்ளென, என்பது கண்ட உடனே யென்க. 7

[குறிப்பு: இவ்வதிகாரத்தின் 8, 9, 10 பாடல்களும், அடுத்த அடுத்த அதிகாரத்தின் முதல் இரண்டு செய்யுள்களும் உள்ள பகுதி சிதைந்துவிட்டது. அவை இங்கு நிரப்பப்பெற்றுள்ளன.]

488. செறுநரைக் காணிற் சுமக்க இறுவரை
காணிற் கிழக்காந் தலை.

(தாம் வெல்லக் கருதிய அரசர்), பகைவ(ர்க்கு இறுதிக்காலம் வரும் துணையும் அவ)ரைக் கண்டாற் பணிக; (பணியவே), (அக் காலம் வந்து) இறும் வழி, அவர் தலைகீழாக இறுவர். 8

489. எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல்.

(பகையை வெல்லக் கருதும் அரசர்), தம்மால் எய்தற்கு அரிய காலம் வந்து கூடியக்கால், அது கழிவதற்கு முன்னே, செய்தற்கு அரிய வினைகளைச் செய்க. 9

490. கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

வினைமேற் செல்லாதிருக்குங் காலத்து, கொக்கு இருக்குமாறு போல இருக்க; மற்றைச் செல்லுங்காலம் வாய்த்தவழி, அது செய்து முடிக்குமாறுபோலத் தப்பாமல் செய்து முடிக்க. 10

காலமறிதல் முற்றும்.

---

## 50. இடனறிதல்

அஃதாவது, வலியும் காலமும் அறிந்து பகைமேற் செல்வான் தான் வெல்லுதற்கு ஏற்ற நிலத்தினை அறிதல்.

491. தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று
மிடங்கண்ட பின்னல் லது.

(பகைவரை) முற்றுவதற்கு ஆவதோர் இடம் பெற்றபின் அல்லது, (அவர் மாட்டு) யாதொரு வினையையும் தொடங்காதொழிக; (அவரைச் சிறியரென்று) இகழாதொழிக. 1

492. முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு மரண்சேர்ந்தாம்
ஆக்கம் பலவுந் தரும்.

மாறுபாட்டோடு கூடிய வலியினை யுடையார்க்கும் அரணைச் சேர்ந்து ஆகின்ற ஆக்கம் பல பயன்களையும் கொடுக்கும். 2

493 ஆற்றுரு மாற்றி யடுப விடனறிந்து
போற்றுர்கட் போற்றிச் செயின்.

வலியரல்லாதவரும் வலியராய் வெல்வர், அதற்கேற்ற இடத்தினை அறிந்து சேர்ந்து தம்மைக் காத்துப் பகைவரிடத்து வினையைச் செய்வாராயின். 3

494. எண்ணியார் எண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

பகையை வெல்ல எண்ணியவர் எண்ணத்தினை இழப்பர், சேருமிடன் அறிந்து சேர்ந்து தன்னின் அவர் துன்னிப் போரைச் செய்யின்.

நல்லிடத்திற் றுன்னியார் துன்னிச் செயின் எண்ணியா ரெண்ண மிழப்பரெனக் கொள்க. 4

495. நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலின்
நீங்கி னதனைப் பிற.

முதலை ஆழமுடைய நீரின் யானை முதலாயின வற்றையும் வெல்லும்; நீரை விட்டு நீங்கில் அதனை எறும்பு முதலாயின வெல்லாம் வெல்லும்.

எளியரும் நல்லிடத்திற் சேர்ந்தால் வலியரையும் வெல்வாராதலால், பகைவர் மேல் இடனறிந்து செல்கவென்றது. நல்லிடத்திலிருப்பவரும் இடம் விட்டு நீங்காது, பகையை வெல்க என்றவாறு. 5

496. கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடும்
நாவாயு மோடா நிலத்து.

நிலத்தின் ஓடுங் கால் வலிய நெடுந் தேரும் கடலின் ஓட மாட்டாது. கடலின் ஓடுங் கப்பலும் நிலத்தின் ஓட மாட்டாது.

ஆதலினுற் பகைவர் மேற் செல்லும்போது, அவர் இடங்களை அறிந்து அதற் கேற்ற கருவிகளான் வினைசெய்க வென்பது தோன்ற நின்றது. 6

**497. அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை
எண்ணி யிடத்தாற் செயின்.**

*பகைவரிடத்து வினைசெய்யும் போது, தனது வலியே அஞ்சாமையாகிய துணையல்லது, பிறிது துணை வேண்டா; பகையிடத்து வினை செய்யும் வகை எல்லாங் குறையாமல் எண்ணி வாய்த்த விடத்தொடு பொருந்திச் செய்யின்.* 7

**498. சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையான்
ஊக்க மழிந்து விடும்.**

*இது, இடத்தின் வலி கூறியது.* 8

*பெரும்படையான், சிறுபடையானை அழித்தல் கருதிச் சிறு படையானுக்குச் செல்லுமிடத்துச் சேர்ந்தானாகில், பெரும் படையான் பெருமையும் வலியும் அழிந்து விடும்.*

**499. சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்தர்
உறைநிலத்தோ டொட்ட லரிது.**

*அரணின் நலமும் அதற்கேற்ற சீரும் இல்லாராயினும், வினைக்குரிய சேனை உறையும் நிலத்திற் சென்று தாக்குதல் அரிது.*

*துணிந்தவர்க்கும் இடத்தில் பெரும்படை உடையும் என்க.* 9

**500. காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு.**

*பாகற்கு அடங்காமல் வேலுடைய சேவகனைப் பாய்ந்து கொம்பிற் கோத்த களிறு, கால்புதையும் சேற்று நிலத்தில் அகப்படில், நரி வெல்லும்.*

*பாகன் கண்ணஞ்சாக் களிறென்க. கண்ணென்பது இடம். பாகனிடத் தஞ்சாவென்றது, கண்ணஞ்சா வேலாளென்றுமாம். இடமில்லா இடத்தில் அகப்படில் அப்படி வருமென்றது.* 10

இடனறிதல் முற்றும்

---

## 51. தெரிந்து தெளிதல்

அஃதாவது, அமைச்சரைச் சேனுவரையரைத் தெரிந்து தெளிந்து தன்கண் நிறுத்திக் கோடல். தெரிந்து தெளிவது, சாதி பிறப்பு குணந் தருமம் நூலறிவு உலக வியற்கை சாமித்துரோகம் வஞ்சனை பொய் முதலாயின வெல்லாந் தெரிந்து நற்குண நற்செய்கை யறிந்து அரசன் தெளிதல்.

501. அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்.

அரசனுல் தெளியப்படுவா னொருவன் அறமும் பொருளும் இன்பமும் உயிர்ப் பொருட்டால் வரும் அச்சமும் என்னும் முதற் பகை நான்கின் திறத்தான் மனவியல்பு ஆராய்ந்து தெரிந்து, பின்பு தெளியப்படும் என்றவாறு. தேறப்படும் என்பது, தெளியப் படும் எனக் கொள்க. அறம் பொருளின்பமுயிரச்ச நான்காவன: அறவுவதை, பொருளுவதை, இன்ப வுவதை, அச்சவுவதை என நான்கு.

அறவுவதையாவது; அரசன் அறவோனல்லன், அதனுற் போக்குதும்; அரசன் பொருளாசையினுற் கொடையிலன், அதனுற் போக்குதும்; அரசன் கொலைக் கஞ்சான், அதனுற் போக்குதுமென, அறவோரை, அந்தணரை விடுத்து அமைச்சரைச் சேனுவரை யரைச் சூளொடு சொல்லிச் சோதித்தல். இன்பவுவதையாவது, அரமனையில் இன்னுள் நின்மேற் காதல் பூண்டாள், அவளைக் கூடுதற்கு என்னை விடுத்தாள், என ஒரு தாதியாற் சூளோடு சொல்லிச் சோதித்தல். இவையெல்லாம் அரசன் சோதித்து, இதற்கு உடன்படா நற்குண நற்செய்கையுடைய அமைச்சரைச் சேனுவரையரைத் தெரிந்து தெளிந்து தன் கண் நிறுத்திக் கோடல். 1

502. குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியும்
நாணுடையான் கட்டே தெளிவு.

உயர்ந்த குடியுட் பிறந்து, குற்றத்தை நீங்கி, வடுவினுக்கஞ்சிப் பரிகரிக்கு நாணமுடையவன் கண்ணதே அரசனுக்குத் தெளிவு.

குற்றமாவன: காமம், வெகுளி, மயக்கம், மதம், மூவகைச் செருக்கு, சோம்பு, மறப்பு, கொலை, களவு, கள், வஞ்சனை, பொய் முதலாயின. 2

503. **அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கால்
இன்மை யரிதே வெளிறு.**

*கற்றற்கரிய நூல்களைக் கற்று மேற்சொல்லிய குற்றங்கள் அற்றாரிடத்தும் நுண்ணிதாக ஆராயுமிடத்து வெள்ளறிவில்லாமை அரிது.*

*வெள்ளறிவு : அறியாமை. ஆதலால், தொழில் பொருள் ஆசை பற்றிச் செய்யாமையுந் தெரிந்து மன்னன் தெளிக வென்றது.*

504. **குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
மிகனாடி மிக்க கொளல்.**

*குணத்தையும் குற்றத்தையும் ஒருவனிடத்து ஆராய்ந்து குண மிகுத்தானைக் குணவானென்றும், குற்றமிகுத்தானைக் குற்றத்தா னென்றும், குற்றத்தானைத் தள்ளிக் குணவானைக் கொள்க என்றவாறு.*

அவற்றுள் மிகனாடி யென்பது, குற்றமொன்றே யாயினுங் கொடிய குற்றம் ஒன்று ஆயிரம், ஒன்று கோடி ஆதலால், அவற்றுள் மிகலடி யென்றா ரென்க, *குற்றமும் குணமும் எவர்க்கும் உளவாகலான் இவ்வகை கூறியது என்க.* 4

• [குறிப்பு : *மிகை நாடி என்பது அச்சுப்பாடம்.*]

505. **பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தம்
கருமமே கட்டளைக் கல்.**

*பிறப்பு, குணம், அறிவு என்பனவற்றால் மக்கள் பெருமைக்கும் மற்றச் சிறுமைக்கும் உரை கல்லாவது தாந்தாம் செய்யும் கருமமே ; பிறிதில்லை.*

*இது குணமுங் குற்றமும் அறியுங் கருவி யென்க,* 5

506. **அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.**

*சுற்றமும் அன்பும் அற்றாரைத் தெளிதல் ஒழிக ; அவர் உலகத்தோடு பற்றிலர் ஆதலாற் பழிக்கு நாணமிலர்.*

*சுற்றமில்லார்க்கு உலகத் தொடர்பு இல்லை. ஆதலாற் பழிக்கு நாணமிலர் என்க.* அல்லது நற்குண நற்செய்கை அற்றாரை யெனவுங் *கொள்க,* 6

507. காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்.

அன்புடைமை பற்றுக் கோடாகத் தமக்கறிய வேண்டுவன அறியாரைத் தெளிதல், அரசனுக்கு எல்லா அறியாமையும் அதனால் வரும்.

கந்தா வென்பது கந்தாக வென்க. கந்தென்பது பற்றுக்கோடு; "கந்து மாலம்பனம் பற்றுக் கோடாகும்" என்பதனால் அறிக. காதன்மை - அன்பு. அறிவில்லாரைத் தேறுதலால் அரசனும் அறிவிலான் எனவரும். 7

508. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்.

தன்னோடு இயைபுடையன் அல்லாதானைப் பிறப்பு முதலிய வற்றானுஞ் செயலானும் ஆராய்ந்து தெளிந்த அரசனுக்கு, அந்தத் தெளிவு தன்குலத்திற் பிறந்தார்க்குந் துன்பத்தைக் கொடுக்கும்.

பிறன் - தன்குலத்துக் கொவ்வாக் குலத்தான்; ஆதீனத்தின் பரம்பரிய மல்லாதவ னென்க. 8

509. தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள்.

யாரையும் தேர்ந்தால் அல்லது தெளிய வேண்டா. தேர்ந்து ஆராய்ந்த பின்பு, தான் தெளிந்த பொருளை ஐயுறாது தெளிந்து கொள்க வென்றவாறு.

தேறற்க யாரையுந் தேறாது என்றும் பாடம்: தேர்ந்து தெளியாது சும்மா தெளிய வேண்டா வென்க. தெளிதல்: அதன்கண் இறுதித் தொழில் அளித்தல். 9

510. தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவும்
தீரா விடும்பை தரும்.

அரசனொருவனை ஆராயாது தெளிதலும், ஆராய்ந்து தெளிந்தவனை ஐயப்படுதலும், இவ்விரண்டும் அவனுக்கு நீங்காத் துன்பத்தைத் தருமென்றவாறு.

வினையில் வைத்த பின்னை ஐயப்பட வேண்டா வென்றது. 10

தெரிந்து தெளிதல் முற்றும்.

## 52. தெரிந்து வினையாடல்

*அஃதாவது தெரிந்த மந்திரியர், சேனாவரையர் முதலாயினோரை அவர் செய்யவல்ல தொழிலை யறிந்து அவருக்குக் கொடுத்தாளுதல். வினையாளுதல், வினையாடலென்றாயின வென்க. அது எழுத்துத் திரிவு.*

511. **நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த**
**தன்மையா னாளப் படும்.**

*அரசன் ஒரு தொழிலிலே ஒருவனை வைத்தால், நன்மையுந் தீமையும் ஆராய்ந்து பார்த்து, நலம் புரிந்த தன்மையனவனால் சிறந்த தொழிலிலே வைத்தாளப்படுவன்.*

*நலம் புரிதல் - நலஞ் செயல்.* 1

512. **வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை**
**ஆராய்வான் செய்க வினை.**

*பொருள் வரும் வழிவயப் பெருகப் பண்ணிப் பெருக வந்த பொருளை யெல்லாம் பெரிதாக வளர்த்து அப்படிப் பெருகச் செய்யுமிடத்தும் வளரச் செய்யுமிடத்தும் வந்த விடையூற்றை நாடோறு மாராய்ந்து நீக்க வல்லவன் அரசனுக்கு வினை செய்க.*

*இது, தொழில் செய்பவனுக்கு உபாயங் கூறியது.* 2

513. **அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கும்**
**நன்குடையான் கட்டே தெளிவு.**

*அரசனிடத்தில் அன்பும் அவனுக்காவன செய்யும் அறிவும் அவை செய்தற்குக் கலங்காத தெளிவும் அவற்றாற் பொருள் கையுற்றவழி யவாவின்மையும் ஆகிய இந்நான்கு செய்கையு முடையானிடத்திலே தொழிலை விட்டிருக்கும் அரசனுக்குத் தெளிவு.* 3

514. **எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்**
**வேறாகு மாந்தர் பலர்.**

*எல்லா வகையானும் ஆராய்ந்து தெளிந்து தொழிலை வைத்த பின்னும், அத் தொழிலினியலால் வேறுபடு மாந்தர் பலர்.*

தொழிலியல்பு தொழிலின் சிறப்பு. தொழிலின் சிறப்புக் காலைசப் பட்டுக் கட்டியங் காரனைப் போல் வேறுபடு மாந்தர் பலர் என்றவாறு. 4

515. அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று.

செய்யும் உபாயங்களை அறிந்து செயலானும் இடையூறுகளானும் வருந்துன்பங்களைப் பொறுத்து முடிக்க வல்லானை யல்லது வினைதான் இவன் நம்மிடத்து அன்புடையவனென்று பிறன் ஒருவனை ஏவும் இயல்புடைத்தன்று. 5

516. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல்.

முந்தி வினைசெய்வானிலக்கணத்தை ஆராய்ந்து பின் செய்யப்படும் வினையின் இயல்பை ஆராய்ந்து பின அவனையும் அதனையுங் காலத்தோடு படுத்துப் பொருந்த அறிந்தவனை அந்தொழிலுக்கு உரித்தாகச் செய்க. 6

[குறிப்பு: உணர்ந்து செயல் என்பது அச்சுப்பாடம்.]

517. இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடல்.

இவ்வினையை இக்கருவியா லிவன்முடிக்க வல்லனெனக் கூறுபடுத் தாராய்ந்து மூன்றுந் தம்முளியைந்த வழி யவ்வினையை யவன் கண்ணே விடுக.

கண்: இடம்; கருவி: துணைவரும் பொருளும். 7

518. வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
அதற்குரிய னாகச் செயல்.

அரசன் ஒருவனை வினை செய்தற் குரியவனாக ஆராய்ந்து துணிந்த பின் அவனை அவ்வினைக் குரியனாமாறு செய்க. 8

519. வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்குந் திரு.

*எப்பொழுதும் தன் வினையின் கண்ணே முயற்சியுடையான் கேண்மையைப் பிரிப்பார் சொற் கேட்டு அரசன் மாறுபாடாகக் கருது மாயின் அச்செல்வம் அவனை விட்டு நீங்கும்.*

கேண்மை பொருது சொல்வார் சொற்கேட்கலாகா தென்பது. கேள்: உரிமை. 9

520. நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

*வினை செய்வான் கோடாமையால் உலகு கோடாது ஆதலால் மன்னன் வினை செய்வானை நாடோறும் ஆராய்க.*

*வினை செய்வானை ஆராயவே வினையும் உலகையும் ஆராய் தலாமாதலால் வினை செய்வானை ஆராய்க என்றது. கோடாமை: முறை தப்பாமை.*

தெரிந்து வினையாடல் முற்றும்.

---

## 53. சுற்றந் தழால்

*அஃதாவது அரசன் கிளைஞரைத் தன்னினீங்காம லணைத்தல்.*

521. பற்றற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.

ஒருவன் சேவகந் தொலைந்து வறியனான விடத்தும் பழமை பாராட்டுதல் அரசன் பழமையாகிய சுற்றத்தாரிடத்தே யுளவாம்.

*அரசனிடைத் தாழ்வு பிறர் செய்யில் அதற்குப் பரிந்து அத் தாழ்வினை நீங்கிப் பழமை பாராட்டுதல் சுற்றத்தாரிடத்தே யுளவெனக் கொள்க.* 1

522. விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
ஆக்கம் பலவுந் தரும்.

*அன்பறாத சுற்ற மொருவற் கெய்துமாயின் அவனுக்குக் கிளைத்தல் அறாத செல்வம் பலவற்றையுந் தரும்.*

*அருப்பு - கிளைத்தல்.* 2

523. அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

*சுற்றத்தொடு நெஞ்சு கலவாதவன் வாழ்க்கை குளப்பரப்பு கரையில்லாமல் நீர் நிறைந்தாற் போலும்.*

கரையில்லாத குளத்து நீர் புறம்போமாறு போலச் சுற்றத்தொடு கலந்து வாழாதவன செல்வம் புறம் போம் என்க. 3

524. சுற்றத்தார் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தால் பெற்ற பயன்.

*செல்வம் பெற்றதனாற் பெற்ற பயனாவது, தன் சுற்றந் தன்னைச் சுற்றித் தழீஇக் கொண்டொழுகுதலாம்.*

*தழீஇக் கோடல் - எல்லார்க்குங் கொடுத்துத் தன்னைச் சுற்றியிருத்தல்.* 4

[குறிப்பு : சுற்றந்தார் அற்றம்பட என்பது *அச்சுப்பாடம்.*]

525. கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும்.

*ஒருவன் சுற்றத்திற்குக் கொடுத்தலுமினிய சொல்லும் வல்லனாயின், தம்மிற் றொடர்ந்த பலவகைச் சுற்றத்தானே சூழப்படுவன்.*

*கொடுத்தலு மின்சொல்லும் அரிது. அடுக்கிய சுற்றம் - சுற்றத்தின் சுற்றமுந் தன் சுற்றமாம் என்க.* 5

526. பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில்.

பெருங் கொடையான் கோபமில்லான் அரசனாகில், அவனைப் போலக் கிளையுடையாரிவ் வுலகத்தில்லை.

*பெருங் கொடையுடையவன், கோபத்தை விரும்பாதவனென்க. "பேணல் விரும்பல்" என்பதனாலறிக.* 6

527. காக்கை கரவாக் கரைந்துண்ணு மாக்கமும்
அன்னநீ ரார்க்கே யுள.

காக்கை இரையாயின கண்ட இடத்து மறையாது இனத்தைய் யழைத்துண்ணும்; காக்கை போலக் குண முடையான் செல்வமும் அப்படி யழைத்துண்ணப்படும்.

காக்கை போலக் குணமுடையார்க்கே உளவாவன செல்வமெனக் கொள்க. 7

528. பொதுநோக்கான் வேந்தன் வரிசையாய் நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்.

எல்லாரையும் போல நோக்காது சுற்றத்தாரை அறிந்து வரிசையாக வேந்தன் பார்க்குமாகில் அச் சிறப்பினைப் பார்த்து அவனை விடாது வாழுஞ் சுற்றத்தார் பலர். 8

[குறிப்பு: வரிசையா நோக்கி என்பது அச்சுப்பாடம்.]

529. தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்
காரண மின்றி வரும்.

தமக்கு உறவாகியிருந்த சுற்றத்தார் தம்மை விட்டு நீங்குதல் யாது காரணத்தால்? சுற்றத்தார் நீங்கு மென்றால், அரசனிடத்தில் அடக்க மில்லை யென்றால் நீங்கும்; அடங்கி நடந்தானாகில் நீங்கின சுற்றமும் வரும்.

அமராமை: அடங்காமை. அமராமை காரணமின்றி யென்பது அமராமையாகிய காரணமில்லையாகில் நீங்கிய சுற்றம் வருமென்க.

530. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்திருந் தெண்ணிக் கொளல்.

தன்னிடைப் பிரிந்து போய்ப் பின்பு தானழைக்குங் காரணந்தான் வந்த சுற்றத்தானை, வேந்தன், பிரிய வேண்டிய காரணம் யாதென்று அவனைத் தன்னிடந் தழீஇக் கொண்டிருந்து எண்ணிக் கொள்க.

எண்ணிக் கொளல்: அவன் பின்னும் பிரிந்து பகைவரிடத்துச் சேராது தழீஇக் கொள்க என்றது. 10

சுற்றந் தழாஅல் முற்றும்.

---

## 54. பொச்சாவாமை

அஃதாவது, அரசன் வெகு செல்வத்திலுஞ் செருக்கினுலுஞ் செய்யவேண்டிய காரியங்களை மறவாமற் செய்தல். பொச்சாப்பு : மறப்பு.

531. இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

மிகுந்த வுவகைக் களிப்பான் வரும் மறப்பு அரசனுக்கு அளவிறந்த கோபத்தினுந் தீது.

சிறந்த உவகை மகிழ்ச்சியாவன : பெருஞ் செல்வம், பெருஞ் சிறப்பு, பெருமிதம், பேரின்பங்களினுல் வரு மறப்பெனக. வெகுளியாற்றண்டஞ் செய்தலிற்றிது மறவியாற் செய்யவேண்டிய காரியங்களைச் செய்யாமை. கோபத்தினுல் யாவரும் பகைவராவர். அதனினும் பகை வரும் மறவியான் என்றது. 1

532. பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றுங்கு.

ஒருவன் புகழினை அவன் மறவி கெடுக்கும்; அறிவினைத் தரித்திரம் நிச்சயமாகக் கெடுப்பதுபோல். 2

533. பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பால்நூ லோர்க்குந் துணிவு.

பொச்சாந் தொழுகுவார்க்குப் புகழுடைமையில்லை; அது நீதி நூலுடையார்க்கே யன்றி, உலகத்து எவ்வகைப்பட்ட நூலோர்க்கும் துணிவாம்.

பொச்சாப்பு : மறப்பு. 3

534. அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

காடு மலை கோட்டை முதலிய அரணிலே இருந்தாலும் அச்சமுடையவன் அந்த அரணை இழப்பான். அப்படிப் போல மறப்புடையவர் எல்லாச் செல்வமு முடையவராகி இருந்தாலும் அச்செல்வத்தை இழப்பார்.

பகைவரை அடக்கலும் செய்வன செய்தலும் மறப்பின், செலவ மிழப்பான் என்றது. 4

535. முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும்.

தன்னுற் காக்கப்படுந் துன்பங்களை வருதற்கு முன்னே அறிந்து காவாது மறந்திருந்தான், பின் வந்துற்ற காலத்துக் காவாமல் நாம் மறந்திருந்தோம் என்று, தன் பிழையை நூறு விதமாக நினைந்து இரங்கி விடும்.

மறவி ஒன்று ; இரங்குதல் நூறும் என்றது. 5

536. இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில்.

அரசர்க்கு மறவாமைக் குணம் யாவரிடத்தும் எக்காலத்தும் ஒழிவின்றி வாய்க்குமாயின், அதனை யொக்கும் நன்மை பிறிதில்லை.

இழுக்கு : மறப்பு. 6

537. அரியவென் றாகாத வில்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின்.

செய்தற்கரியன வென்று சொல்லப்பட்டு ஒருவற்கு முடியாத காரியங்களில்லை, மறவாக் கருவியாகிய மனத்தானே யெண்ணிச் செய்யப் பெறின்.

மறப்பில்லாக் கருவி - மனம். 7

538. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையு மில்.

நீதி நூலுடையார் இவை யரசர்க்குரியன வென்று உயர்த்திச் சொல்லிய செயல்களை மறவாமற் கடைப்பிடித்துச் செய்ய வேண்டும். செய்யாது மறந்தவர்க்கு எழு பிறப்பும் நன்மை யில்லை.

539. இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

அரசர் அகமகிழ்ச்சியில் தாம் வலியுறும்போழ்து முற்காலத்துச் செய்யுங் காரியஞ் செய்யாது மறந்து கெட்ட அரசர்களை நினைக்க.

மைந்துறல் : வலியுறல். இகழ்ச்சி : மறப்பு. 9

**540. உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தான்**
**உள்ளிய துள்ளப் பெறின்.**

*அரசன் தான் நினைத்த பொருள் கிடைத்தல் எளிதாம், பின்னும் அதனை மறவாமல் நினைக்கக் கூடுமாயி னென்றவாறு.* 10

பொச்சாவாமை முற்றும்.

---

## 55. செங்கோன்மை

*அஃதாவது, அரசனுலகை நடத்து முறைமை. செவ்விய கோல் போல விருத்தலாற் செங்கோல்.*

**541. ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந்தி யார்மாட்டும்**
**தேர்ந்துசெய் வஃதே முறை.**

*தன்குடைக்கீழ் வாழ்வார் குற்றஞ் செய்தால், செய்த குற்றத்தை நாடி அவர்மேற் கண்ணோட்டம் வையாமல், நடுவு நிலைமையைப் பொருந்தி, அக்குற்றத்துக்குச் சொல்லிய தண்டத்தை நூலாரோடும் ஆராய்ந்து, அதற்குத் தக்க தண்டஞ் செய்வதே முறையாம்.*

*இது செங்கோ லிலக்கணங் கூறியது.* 1

**542. வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்**
**கோனோக்கி வாழுங் குடி.**

*உலகத்து உயிரெல்லாம் மழை பெய்யின் வாழும்; எனினும் குடிகள் அரசன் கோல் செங்கோலாயின் வாழும.*

வான் பெய்யினுயிர் வாழும்; கோல் நடத்தின் குடி வாழும். நோக்கல் லஃதுண்டாயின் வாழும்; இல்லாயிற் கெடும் என்றது. 2

**543. அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்**
**நின்றது மன்னவன் கோல்.**

*அந்தணர்க் குரித்தாகிய வேதத்திற்கும் அதனால் சொல்லப் பட்ட அறத்திற்கும் முதற்காரணமாகி நின்றது மன்னவன் செலுத்துஞ் செங்கோல்,*

முதற் காரணமாகிய செங்கோல் நிலைநிற்கில், அந்தணர் நூலும் அறமும் நிலை நிற்கும் என்றது. 3

544. குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கு முலகு.

குடிகளை அணைத்துச் செங்கோலைச் செலுத்தும் பெருநில வேந்தன் அடியைப் பொருந்தி விடாருலகத்தார்.

அணைத்தல் இன்சொற் சொல்லலும் தளர்ந்துழி வேண்டுவன கொடுத்தலும் முதலாயின. 4

545. இயல்புளிக் கோலோச்சு மன்னவ னுட்டிற்
பெயலும் விளையுந் தொக்கு.

நீதி நூல் சொன்ன வியல்பாற் செங்கோல் செலுத்து மன்னவன் நாட்டிடத்துப் பருவ மழையும் விளைவும் தொக்கு நிற்கும்.

தொக்கு : கூடி நிற்றல். 5

[குறிப்பு : மன்னவனுட்ட என்றது அச்சுப்பாடம்.]

546. வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலது கோடா தெனின்.

மன்னவனுக்குப் போரினிடத்து வெற்றியைத் தருவது வேலாகிய வாயுத மன்று. செங்கோல் முறைமை கோணுமல் நடத்துவது தானே தரும். 6

[குறிப்பு : கோலதூஉங் கோடாதெனின் என்பது அச்சுப் பாடம்.]

547. இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டா செயின்.

வையகத்தை யெல்லா மரசன் காக்கும் அரசனை அவன் செங்கோல் காக்கும், அதனை முட்டு வந்துழியும் முட்டாமற் செலுத்துவனுயின்.

முட்டாது செய்தல் : அரசனுக்கு முட்டு வந்துழியும் உலகத்திற்கு முட்டுவாராமற் காத்தல். 7

548. எண்பதத்தா னுடி முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தாற் றனே கெடும்.

நீதி நூலை எண்ணுஞ் செவ்வியாலராய்ந்து நீதி நூலின்படி முறை செய்யாத மன்னவன் தாழ்ந்த பதத்திலே நின்று தானே கெடும்.

எண்பதம் : எண்ணுஞ் செவ்வி. *தண்பதம் : தாழ்ந்த பதவி ; அது பாவமும் பழியு மென்க.* 8

[குறிப்பு : *எண்பதத்தா னோரா முறை செய்யா - என்பது அச்சுப்பாடம்.*]

549. **குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்**
**வடுவன்று வேந்தன் தொழில்.**

*குடிகளைப் பிறர் நலியாமற் காத்துத் தானு நலியாமற் பேணி, குடிகளிடத்துக் குற்றங்களை நீக்குதல், வேந்தனுக்கு வடு அன்று ; தன்றொழி லாகலான்.*

வடுவாவது, குடிகளை நலிவாரைக் கொலை செய்தலும், குடிகள் குற்றத்துக்குத் தக்க தண்டஞ் செய்தலும் பழியல்ல வென்றவாறு. 9

550. **கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்**
**களைகட் டதனொடு நேர்.**

*அரசன் கொடியவர்களைக் கொலை செய்து ஒறுத்து நக்கோரைக் காத்தல், உழவன் களையைக் களைந்து பைங்கூழாகிய பயிரைக் காத்ததனோடு ஒக்கும்.*

*கொடியர் : தீயிடுவார், நஞ்சிடுவார், களவு கொள்வார், கொலை செய்வார், வழிபறிப்பார், சூறை கொள்வார், பிறர் மனை விழைவார் முதலாயினர். இவர்களை மன்னவன் கொலை செய்வது.* 10

செங்கோன்மை முற்றும்.

---

## 56. கொடுங்கோல்

*அஃதாவது,* செங்கோல் முறைமை தப்பச் செலுத்தல் கொடுங்கோலெனக் *கொள்க.*

551. **கொலைமேற்கொண் டாரிற் கொடிதே யலைமேற்கொண்**
**டல்லவை செய்தொழுகும் வேந்து.**

பகை பற்றிக் கொல்லுதற் றொழிலைத் தம்மேற் கொண் டொழுகுவாரினும் கொடியனும், பொருட்காசை பற்றிக் குடிகளை அலைத்தற் றொழிலைத் தன் மேற்கொண்டு நீதியல்ல வற்றைச் செய்தொழுகும் வேந்தன். 1

552. வேலொடு நின்றா னிடுவென் றதுபோலும்
கோலொடு நின்றா னிரவு.

வழிபறிக்கு மிடத்துத் தனியே வேல் கொண்டு நின்ற கள்வன் வழிச் செல்வானை நின்கைப் பொருளைத் தாவென்று வேண்டு தலோ டொக்கும், ஒறுத்தற் றொழிலொடு நின்ற அரசன் குடி களைப் பொருள் தரச் சொல்லி வேண்டுதல்.

கொடா தொழியில் வெட்டுவேன் என்னும் கள்வனோடு ஒக்கும் தாவென்று வேண்டும் வேந்தன் எனக் கொள்க. 2

553. நாடொறு நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறு நாடு கெடும்.

நாட்டில் நடப்பன செயல்களை நாடோறும் நாடிச் செங்கோல் முறைமை செய்யாது கொடுங்கோல் முறைமை செய்யும் மன்னவன் நாடு நாடோறுங் கெடும்.

நாளிலே சுருங்கிக் கெடும் என்றவாறு. 3

554. கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு.

மேல் விளைவது எண்ணாது, முறைமை தப்பக் கொடுங்கோல் செலுத்தும் அரசன், அச் செயலாற் பயிரையுங் குடியையு மொரு மிக்க இழப்பன்.

சூழாது என்பது, எண்ணாது என்க. 4

555. அல்லற்பட் டாற்றா தழுதகண்ணீ ரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

அரசன் கொடுங்கோலால் அல்லற்பட்டு அழுத கண்ணீர் அல்லவோ அவன் செல்வத்தை அறுக்கும் வாள்? 5

[குறிப்பு: அன்றே என்பது அச்சுப்பாடம்.]

**556. மன்னற்கு மன்னுதல் செங்கோன்மை யஃதிலனேல்**
**மன்னுவா மன்னர்க் கொளி.**

*அரசற்குச் செங்கோல் செலுத்திற் கீர்த்தி மன்னி நிற்கும்; அச்செங்கோல் முறைமை யில்லை யாயில், மன்னி நில்லாதாம் கீர்த்தி.*

*மன்னி நிற்பது அவகீர்த்தி என்பதாயிற்று. ஒளி : கீர்த்தி. செங்கோல் செலுத்திற் கீர்த்தி மன்னி நிற்கும் : கொடுங்கோல் செலுத்தில் அவகீர்த்தி மன்னி நிற்கும் என்க.* 6

[குறிப்பு : *மன்னர்க்கு ; அஃதின்றேல்-என்பன அச்சுப்பாடம்.*]

**557. துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்**
**அளியின்மை வாழு முயிர்க்கு.**

*மழையில்லாமை வையகத்தில் வாழும் உயிர்கட்கு எவ்வகைத் துத் துன்பம் பயக்கும், அவ்வகைத் துன்பம் பயக்கும் மன்னன் கருணையில்லாமை, அவன் நாட்டுக் குடிகட்கு.*

*உயிரென்பது குடிகண் மேல் நின்றது.* 7

**558. இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா**
**மன்னவன் கோற்கீழ்ப் படின்.**

*முறை செய்யா மன்னவன் கொடுங்கோலின் கீழ் வாழின், யாவர்க்கும் பொருளில்லா வறுமையினும் பொல்லாது பொருளுடை மைச் செல்வம்.*

*பொருளுடைச் செல்வரைக் கொடுங்கோல் மன்னன் துன்பப் படுத்துவான்; ஆதலாற் பொருளுடைமை பொல்லாது என்றார் என்க.* 8

**559. முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி**
**ஒல்லாது வானம் பெயல்.**

*மன்னவன் தான் செய்யு முறைமை தப்பிக்கொடுமை செய்யு மாயின், அவனாட்டுப் பருவ மழையு மில்லாமற் பருவந் தப்பியபோது மேகம் மழை பெய்தற்கும் பொருந்தாது.*

உறை - மழை. கோடி - தப்பி. 9

**560. ஆபயன் குன்று மறுதொழிலார் நூலிழப்பர்**
**காவலன் காவா னெனின்.**

*காத்தற்குரிய காவலன் உயிர்களைக் காவானாயின், தன்மம் நில்லாது, அவன் நாட்டுப் பசுக்களும் பால் குன்றிப் போம்; அந்தணர் நூல்களை இழப்பர்.*

கொடிய மன்னவன் நாட்டில் மழை பெய்யாது; புல்லு முளையாது; பசுக் கள் பால் பெருகக் கறவா; பிராமணர் வறுமையால் நூல்களை இழப்பர் என்ற வாறு.

*அறு தொழிலார்; பிராமணர்; அறு தொழிலாவது, ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் எனக் கொள்க.* *10*

[குறிப்பு: *தொழிலோர் என்பதும், நூன்மறப்பர் என்பதும் அச்சுப்பாடங்கள்.*]

கொடுங்கோல் முற்றும்.

---

## 57. வெருவந்த செய்யாமை

*அஃதாவது, குடிகளஞ்சுவதும் தானஞ்சுவதுமாகிய தொழில்களைச் செய்யாமை.*

**561. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்**
**ஒத்தாங் கொறுப்பது வேந்து.**

*ஒருவன் தன்னின் மெலியார் மேற் சென்ற வழி, அதனை நடு வாக நின்று ஆராய்ந்து, பின்னும் அது செய்யாமற் பொருட்டு, அவனை அக்குற்றத்திற் கேற்ப ஒறுப்பானே அரசனாவான்.*

*தக்காங்கு நாடி ஒத்தாங்கு ஒறுப்பது:* சார்பில்லாமல் நடு நின்று குடி கெடாமல் ஒறுப்பது. *1*

**562. கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்கம்**
**நீங்காமை வேண்டு பவர்.**

*ஒத்தாங்கு ஒறுக்கத் தொடங்குமிடத்து, மிகு தண்டஞ் செய் வார்போல் தொடங்கி, தண்டஞ் செய்யுமிடத்து மெலிதாகத்*

தண்டஞ் செய்க, செல்வந்தன் கண் நெடுங்காலம் நிற்க வேண்டு வார்.

கடிதோச்சல்: குற்றஞ் செய்வார் அஞ்சும் பொருட்டு, கல்லெடுத்து ஓங்கி எறிவார் போற் காட்டி, எறியுமிடத்து மெல்லென எறிதல் போலச் செய்க.

563. வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்த மொல்லை கெடும்.

குடிகள் அஞ்சவருஞ் செயல்களைச் செய்து நடக்குங் கொடுங் கோல னாகில் அரசன் ஒரு தலையாகக் கடிதிற் கெடும்.

ஒருதலை யென்பது நிச்சயமாக என்பது. ஒரு தலை, ஏகாந்தம். 5

[குறிப்பு: ஒல்லைந் கெடும் என்பது அச்சுப்பாடம்.]

564. இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்தன்
உறைகடுகி யொல்லைக் கெடும்.

குடிகள் நம்மிறைவன் கடியன் என்று சொல்லப்படும் பொல் லாத சொல், வேந்தனுடைய ஆயுளுங் குறைந்து செல்வமுங் கடிதிற் கெடும்.

குடிகள் எல்லாரும் ஒருவாய்ப் பட்டு நெஞ்சு நொந்து சொல்லுதலர்ல், ஒல்லை கெடு மென்றவாறு. உறையென்பது இலக்கம். ஆயுளிலக்கங் குறையு மென்க. 4

[குறிப்பு: ஒல்லைக் கெடும் என்பது அச்சுப்பாடம்.]

565. அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேய்கண்ட தன்ன துடைத்து.

காணப்படுதற்கு அரிதாக, கண்டாற் பொல்லாத முகத் தானாக இருக்கும் அரசன் பெரிய செல்வம் பேயிருந்து அனுபவித்தாற் போலும்.

அருஞ்செவி என்று பாடமோதிக் கேள்வி கேளாச் செவியன் பொல்லா முகத்தன் என்று சொல்வாரும் உளர். பேயின் செல்வந் தனக்கும் பிறர்க்கும் உதவாது. பேயைக் கிட்ட வியலாது என்க.

[குறிப்பு: பேஎய்கண் டன்ன துடைத்து என்பது அச்சுப் பாடம்.]

566. கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வம்
நீடின்றி யாங்கே கெடும்.

அரசன் கடிய சொல்லும் உடையனாய் : கண்ணோட்டமும் இலனாயின் அவனுடைய பெரிய செல்வம் நெடுநாள் நில்லாமல் உடனே கெடும். 6

567. கடுமொழியுங் கைகலந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் டேய்க்கு மரம்.

கடிய சொல்லும் குற்றத்தின் மிகுந்த தண்டமும் வேந்தன் பகைவரை வெல்லு மாண்மையாகிய கடிய இரும்பை அராவும் அரமாம்.

முரண் : பலம். 7

[குறிப்பு : கையி கந்த என்பது அச்சுப்பாடம்.]

568. இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு.

காரியந் தப்பாக வந்த வெண்ணத்தை அமைச்சர் மேல் வைத்து, அவரோடு தானும் எண்ணிச் செய்யாமல், தான் தப்பிதஞ் செய்து அந்தத் தப்பிதத்தை அமைச்சர் மேல் வைத்து அவரைக் கோபித்துச் சீறும் வேந்தன் செல்வம், நாடோறும் சுருங்கு மென்ற வாறு.

தன் குற்றத்தை அமைச்சர் மேல் வைக்கும் அரசன் செல்வம் குறுகும் என்றது. 8

569. செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்.

பகைவர் சண்டை வருவதற்கு முன்னே தனக்குச் சேமமாவதோர் அரண் செய்து கொள்ளாத வேந்தன், சண்டை வந்த காலத்தில் தன்னைத் தாங்குஞ் சேமம் இல்லாமையால் வெருவிக் கடிதிற் கெடும்.

செரு : சண்டை. வெரு : அச்சம். சிறை செய்தல் : சேனை வரையார் படைத் தலைவர் சேனை தன்னைக் காத்தல். அவரை வெகுண்டு நீக்குதலால் சிறை செய்யா வேந்தன் என்றார். 9

570. கல்லார்ப் பிணிக்குங் கடுஞ்சோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.

கடுஞ் சொல்லனுய வரசன் நீதி நூல் முதலிய கல்லாதாரைத் தனக்குந் தேர்ச்சித் துணையாகக் கூட்டும் அக்கூட்ட மல்லது நிலத்துக்கு மிகையான பாரம் பிறிதில்லை.

நல்லினத்தைச் சேராது தீயினத்தைச் சேர்க்கும் அரசன் குற்றங் கூறியது. 10

[குறிப்பு ; கடுங்கோல் என்பது அச்சுப்பாடம்.]

வெருவந்த செய்யாமை முற்றும்.

---

## 58. கண்ணோட்டம்

அஃதாவது, பழகினவரைக் கண்டால் அவர் சொல்லும் மாற்றம் மறுக்க மாட்டாமை. கண்ணுற் கண்டு முகவாட்டஞ் செய்யாமை கண்ணோட்டம் (இன்மை) என்க. கண்மறுக்க மாட்டாமை, கண் மறுத்துச் சொல்லாமை எனப் பெரியோர் சொல்லுஞ் சொல்.

571. கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
உண்மையா னுண்டிவ் வுலகு.

கண்ணோட்டம் என்று சொல்கின்ற மிகுந்த பெரிய அழகு வேந்தரிடத்து உண்டாகலான் இவ்வுலகம் உண்டாகா நின்றது.

கழி பெருங் காரிகை ஒரு பொருட் பன்மொழி யென்க. ஒருவருக் கொருவர் கண் மறுத்துச் சொல்லாமையாலுலக வழக்க முண்டென்றது, கண்ணோட்ட மென்னு மொரு பெரிய காரிகை யிருந்தமையாலுலக வழக்கத்தைப் பெற்று வளர்க்கின்ரு ளென்று மாம்.

572. கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை.

உலக நடை கண்ணோட்டத்தினுல் நடப்பதாகலின், அக்கண்ணோட்டம் இல்லாதார் சாவாமலிருப்பது நிலத்திற்குப் பாரமாம்,

பிறந்த வுடனே சாகவேண்டும், சாவாமலிருப்பது நிலத்திற்குப் பாரமாம்; பிறர்க்கு உபகார மில்லை என்றது. 2

573. பண்ணென்னும் பாடற் கியைபின்றேல் கண்ணென்னும்
கண்ணோட்ட மில்லாத கண்.

*பண்ணினாலென்ன பயன் பாட்டுப் பிழையாக? விருக்கில் அப்படிப் போல கண்ணினாலென்ன பயன் கண்ணோட்டம் இல்லாத விடத்து?*

574. உளபோல் முகத்தெவன் செய்யு மளவினால்
கண்ணோட்ட மில்லாத கண்.

*கண்டார்க்கு முகத்திலுள்ளது போலத் தோன்றல் அல்லது வேறு என்ன பயனைச் செய்யும்* அவரவர் தன்மை யறிந்து *கண்ணோட்டஞ் செய்யாத கண்.*

கண்ணோட்டஞ் செய்தல் : கண்மறுத்துச் சொல்லாமை. 4

575. கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேல்
புண்ணென் றுணரப் படும்.

*ஒருவன் கண்ணிற்கு அணிகலமாவது கண்ணோட்டம்; அந்த அணிகலம் இல்லையாயின் அது கண்ணன்று; புண்ணென்று அறிய வேண்டும்.*

*அணிகலம் : ஆபரணம்.* 5

576. மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்.

*மண்ணொடு பொருந்திய மரமாம், மனிதர் அல்லர் கண்ணொடு பொருந்தியுங் கண்ணோட்டம் இல்லாதவர்.*

கண்ணோடிருந்துங் கண்மறுத்துச் சொல்லுவான் மண்ணொடு பொருந்திய மரம் என்றது. 6

577. கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையர்
கண்ணோட்ட மின்மையு மில்.

*கண்ணோட்டம் இல்லாதவர் கண்ணில்லாதவர்; கண்ணுடையவர் கண்ணோட்டம் இல்லாமலிருப்பதும் இல்லை.* 7

[குறிப்பு: *கண்ணுடையார் என்பது அச்சுப்பாடம்.*]

578. கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு.

செங்கோல் முறைமை சிதையாமற் கண்ணோட்டம் வல்ல வேந்தருக்கு உரித்தாம் இவ்வுலகம்.

கருமஞ் சிதைய வந்தவிடத்துக் கண்ணோடாமையும், கருமஞ் சிதையாவிடத்துக் கண்ணோடுதலும் ஆதலால், வல்லவர்க்கு என்றார். அரசரொடு பழகியவர் உலகத்தார்க்கு இடுக்கண் செய்தவிடத்துக் கண்ணோடாது ஒறுத்தலால், செங்கோல் முறை சிதையாமற் கண்ணோடல் என்க. 8

579. ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

தம்மை ஒறுக்குமியல்புடையாரிடத்தும் கண்ணோட்டமுடையார் குற்றந்தைப் பொறுத்து, உலகத்தைக் காக்கும் பண்பே அரசர்க்குத் தலைமை.

ஒறுத்தாற்றுதல் : தம்மொடு பழகினவரொறுக்கு மிடத்தும் கண்ணோட்டம் வைத்தல். உலகத்தை யொறுத்தவரிடத்துக் கண்ணோடாமை. உம்மை எச்சத்தாற் கொள்க. 9

580. பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

தம்மொடு பழகினவர் தமக்கு நஞ்சுகூட்டி இடக் கண்டும் கண் மறுக்க மாட்டாமையால், அதனையுண்டு பின்னும் அவரொடு மேவி அமைந்திருப்பர், விரும்பத்தக்க கண்ணோட்டத்தினை வேண்டுவார்.

நாகரிகம் : கண்ணோட்டம்.

முந்த இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நாகரி கத்தின்
எஞ்சாச் சிறப்பி னெய்தி யோரே. — என்பதனாலறிக.

குறிப்பு : நற்றிணையில், இப்பாடற்றொடர் வருமாறு :—

முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சு முண்பர் நனிநா கரிகர். (நற். 355).

கண்ணோட்டம் முற்றும்.

## 59. ஒற்றாடல்

*அஃதாவது, பகை நொதுமல் நண்பு என்னும் முத்திறத்தாரையும் உலகத்து நடப்பனவற்றை அறிதல் பொருட்டு ஒற்றரை ஆளுதல்.*

581. ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்.

*ஒற்றும் புகழமைந்த நீதிநூலும் இவையிரண்டும் அரசன் தன்னிரண்டு கண்களாகத் தெளிக.*

*உரைசான்ற நூல் : எல்லா நீதியும் அறியும் நூல். தெற்றென்பது : தெளிவு.* 1

582. எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில்.

*எல்லாரிடத்தும் நடப்பன எல்லாவற்றையும் நாள் தோறும் விரைந்து அறிதல் வேந்தனுக்குரிய தொழில்.*

*விரைந்தறிதல் : உடனேயறிதல்.* 2

583. ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில்.

*ஒற்றினாலே எல்லாரிடத்தும் நிகழ்ந்தனவற்றை ஒற்றுவித்து அவற்றான் எய்தும் பயனை ஆராயாத அரசன் வெற்றி கொள்ளக் கிடந்தன காரியம் வேறொன்றும் இல்லை.*

ஒற்றினால் ஒற்றிப் பொருடெரிதல் : ஒற்றரைவிட்டு ஒற்றுக் கேட்டு நடந்த சொல்லின் பொருள் தெரிதல் *என்றது. நடந்த காரிய மறியாதவனுக்கு வெற்றி யில்லை என்றது.* 3

584. வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று.

மந்திரியர், சேனாவரையர், மணியஞ் செய்வார், கணக்கெழுதுவார், இத்தகைக் காரியஞ் செய்வார், சுற்றத்தார், பகைவர் என்று சொல்லப்பட்டவரையும் மற்று மெல்லாரையும் அவரவர் செய்யும் காரியங்களையும் அவரவர் சொல்லும் சொற்களையும் ஆராய்ந்தறிதல் ஒற்று. 4

585. கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டும்
உகாஅமை வல்லதே யொற்று.

ஒற்றுக் கேட்பவரைக் கண்டால் ஐயப் படாத வடிவொடு பொருந்தி, அவரையுற்றறியலுறின், செயிர்த்து நோக்கியவரிடத்து அஞ்சாது நின்று, சாம பேத தான தண்டஞ் செய்தாலும் மனத்துட் கொண்டவற்றை உமிழாமை வல்லவனே யொற்றுவான்.

கடாஅ உருவு : கடிந்து தள்ளப் படாஅ உருவு. உகாமை : கண்ட விடத்துத் தன்னை வெளிப்படுத்தாமை. முகாமுகாமையாற் காண்டலென்றுமாம்(?). 5

586. துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்
தென்செயினும் சோர்வில தொற்று.

முற்றத் துறந்தார் ஆகியும் விரத வேடத்தர் ஆகியும் பார்ப்பார் வணிகர் ஆகியும் வேடதாரிகள் ஆகியும் ஐயமேற்பவர் ஆகியும் உள்புகற்கு அரிய விடத்தும் உள்புக்கு ஆராய வேண்டுவன வெல்லாம் ஆராய்ந்து பார்த்துக் கேட்டு நிற்கும் இடத்து, கண்டு ஐயுற்றுப் பிடித்து எல்லாத் துன்பமுஞ் செய்து கேட்டாலும், தன்னை வெளிப்படுத்தாதவனே ஒற்றனுவான். 6

587. மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
ஐயப்பா டில்லதே யொற்று.

ஒற்றுக் கேட்போன் தன்னை மறைத்து இரகசியப் பொருள் கேட்க வல்லவனாகிக் கேட்டறிந்த செயல்களைப் பின் ஐயப்படாது துணிய வல்லவனே ஒற்றன் ஆவான்.

அவற்றாகி யென்பது, மறைத்துச் சொல்லுவாரொடு கலந்துறவாடிக் கேட்டல், காண்டலென்க. 7

588. ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோர்
ஒற்றினு லொற்றிக் கொளல்.

ஓரொற்றன் ஒற்றிக் கண்டு கேட்டு வந்து அறிவித்த காரியம் தன்னையும் பின்னுமோர் ஒற்றனாலு மொற்றுவித்து ஒப்புத்தொகை கண்டு கொள்க.

ஒருவன் ஒற்றுக் கொண்டும் மெய்க் கொள்ளாமல், பின்னும் ஒரொற்றினாற் கண்டு, இருவர் ஒற்றும் ஒத்திருந்தால் மெய்க் கொள்வான் வேந்தன் என்றது. 8

589. ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்.

*ஒற்றனை ஆளுமிடத்து ஒருவனை ஒருவன் அறியாமை யாள்க. அப்படியாண்ட ஒற்றரை மூவரை ஒரு காரியத்தின் வேறுவேறிட்டால் அம்மூவர் சொல்லும் ஒன்றாக ஒத்தனவாகில் அது மெய் யென்று தெளிக.* 9

590. சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யின்
புறப்படுத்தா னாகு மறை.

*மறைந்தவை யறிந்து கூறிய ஒற்றனிடத்துச் செய்யும் வெகுமானம் அரசன் பலரும் அறியச் செய்ய வேண்டா. மறைத்துச் சிறப்புச் செய்க; பலருமறியில் இரகசியத்தைத் தானே வெளிப் படுத்தினன் ஆம்.*

*மறை : இரகசியம். பலருமறியச் சிறப்புச் செய்யில் இரகசியம் வெளியா மென்க.* 10

ஒற்றாடல் முற்றும்.

---

## 60. ஊக்க முடைமை

*அஃதாவது, மனமெலிவின்றி வினை செய்தற்கண் கிளர்ச்சி யுடைத்தாதல்.* " ஊக்கம் வலி முயற்சி மனவெழுச்சி " *என்பதனா லறிக.*

591. உடைய ரெனப்படுவ தூக்க மஃதிலார்
உடைய துடையரோ மற்று.

ஒருவரை எல்லாப் பொருளு முடையர் என்று சொல்லப் படுவது ஊக்கம்; அவ்வூக்க மில்லாதார் வேறு பொருளுடையதுநாறு முடையர் ஆவரோ? ஆகார்.

*ஊக்கம்* : தொழிலின் மனவெழுச்சி. 1

[குறிப்பு : *அஃதில்லா, உடைய துடையரோ என்பன அச்சுப் பாடம்.*]

592. உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

ஊக்கம் உடைமையே ஒருவனுக்கு நிலைநின்ற உடைமையாவது. மற்றப் பொருளுடைமை நில்லாது நீங்கிப் போம்.

உள்ளம் என்பது, ஊக்கம். 2

593. ஆக்க மிழந்தேமென் றல்லாவார் ஊக்கம்
ஒருவந்தங் கைத்துடை யார்.

யாம் கைப்பொருளை இழந்தோம், என் செய்வோம் என்று அல்லற் படார், நிலைபெற்ற ஊக்கத்தைப் பொருளாக உடையார் என்றவாறு.

ஒருவந்த மென்பது, ஒரு தொகைப் பொருள்(?); கைத்து என்பது, பொருள். 3

[குறிப்பு: இழந்தேமென் றல்லாவார் என்பது அச்சுப்பாடம்.]

594. ஆக்க மதர்வினுய்ச் செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுழை.

அசைவில்லாத ஊக்கத்தை உடையானிடத்துச் செல்வமானது வழி வினவிக் கொண்டு வரும்.

அசைவின்மை: தளர்ச்சி யின்மை. அதர்: வழி. 4

595. வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு.

நின்ற நீரின் அளவினவாம் நீர்ப்பூவின் நீளம்; அப்படிப் போல மக்கள் தங்கள் ஊக்கத் தளவினவாம் உயர்ச்சியும்.

ஆக்கம் மிகுதியாகச் செல்வம் மிகுதியாம் என்றது. ஊக்கம்: தொழின் முயற்சி. 5

596. உள்ளுவ தெல்லா முயர்வுள்ளல் மற்றது
தள்ளினுந் தாளாண்மை நீர்த்து.

அரசர் கருதுவதெல்லாம் தம் உயர்ச்சியே கருதுக. மற்றது வாரா தெனினும் வந்ததற் கொக்கும்.

அரசர் பெரியர் ஆதலிற் பெரிய நினைப்பே நினைப்பர். நினைந்த காரிய முடியாதாயினும், அந்த நினைப்புத் தாளாண்மைக் குணமாம் என்க.

தள்ளினுந் தள்ளாமை நீர்த்து என்றும் பாடம். தாளாண்மை: தொழில். நீர்த்து : குணம், 6

[குறிப்பு : தள்ளாமை நீர்த்து என்பது அச்சுப்பாடம்.]

597. சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பின்
பட்டுப்பா டூன்றுங் களிறு.

களிறு புதையாகிய அம்பாற் புண்பட்ட விடத்தும், தளராது தன் பெருமையை நிலை நிறுத்தும். அப்படிப் போல ஊக்க முடையார் தாம் கருதிய உயர்ச்சிக்குச் சிதைவு வந்தவிடத்துத் தளரார். தம் பெருமையை நிலை நிறுத்துவர்.

புதையம்பு : கட்டுக் கட்டுதல்; அம்புக்கு அலகேற்றி இருப்புத் தகடு கட்டல். ஒல்குதல் : தளர்ச்சியடைதல். 7

598. உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளியோ மென்னுஞ் செருக்கு.

ஊக்க மில்லாதவர் இவ்வுலகத்தாருள் யாம் வண்மையுடையோ மென்று தம்மைத் தாம் மதித்தல் என்னுஞ் செருக்கைப் பெறமாட்டார்.

வள்ளியோம் என்பது : கொடையுடையோம் என்பது. கொடை : யாவர்க்குங் கொடுத்தல். 8

[குறிப்பு : வள்ளியம் என்பது அச்சுப்பாடம்.]

599. பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெருவும் புலிதாக் குறின்.

பெரிய உடம்பையும் கூரிய கொம்பையும் உடைய தாயினும், யானை ஊக்க மில்லாமையால் ஊக்க முடைய சிறு புலி எதிர்ப்படில் அதற்கஞ்சி நிற்கும்.

பெரும் படை இருப்பினும் ஊக்கமில்லா வரசர் ஊக்கமுடைய சிறு படையானும் அஞ்சி நிற்கும் என்றது. 9

[குறிப்பு : வேருஉம் புலிதாக்குறின் என்பது அச்சுப்பாடம்.]

600. உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு.

ஊக்கம் ஒருவருக்கு உள்ள செல்வம்; அவ்வூக்கம் இல்லாதவர் மக்களாகார், மரங்களாவார்; சாதி மாத்திரமே வேறு.

உரமென்பது, ஊக்கம். உரமென்பது அறிவு ஊக்கமென்பது; வெறுக்கை யென்றுமாம்.

ஊக்க முடைமை முற்றும்.

---

## 61. மடியின்மை

*அஃதாவது கருதிய காரியஞ் செய்யுமிடத்துச் சோம்புதலில்லாமை.*

**601. குடியென்னுங் குன்று விளக்க மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும்.**

*தான் பிறந்த குடியாகிய அவியாத விளக்கு ஒருவன் சோம்பாகிய இருட்டு வந்து மூட அவிந்து விடும்.*

குடி உலகு தொடங்கிய ஞான்று தொட்டுவருதலாற் குன்று விளக்கென்றார் என்க. 1

**602. மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.**

தான் பிறந்த குடியைச் செல்வக் குடியாக வேண்டுவார், தன் சோம்பாகிய மடியை மடிந்துவிடக் கருதி முயற்சியுடன் ஒழுகுக.

சோம்பானது, சோம்பிப் போக என்க. 2

**603. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து.**

*மடியாகிய சோம்பலை* மடியென்னும் புடவையாக உடுத்தித் திரியும் *பேதை தான் பிறந்த குடி முந்திக் கெடத் தான் பின்பு கெடுவானென்றவாறு.*

*"மடியடங் குதலே சோம்பு வயிறுதோய் புடைவை தாழை"* *என்பதனாலறிக.* மடியென்பது புடைவை; சோம்பலைப் புடைவையாக வுடுப்பவன். எந்நாளுந் தொழில் செய்யாத சோம்ப லென்க.

604. குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு.

குடியு மடிந்து குற்றமும் பெருகும் சோம்பினாலே சோம்பிக் கிடந்து செல்வம் வருந்தொழில் இல்லாதவர்க்கு.

பெருமை தருந்தொழில் என்றுமாம். உஞற்று - தொழில். 4

605. நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன்.

விரைந்து செய்வதனை நீட்டித்துச் செய்யு மியல்பும், செய்யுங் காரியத்தைச் செய்யாது மறந்து போதலும், தூக்கமும், இந்நான்கும் இறக்கும் இயல்புடையார் விரும்பியேறும் மரக்கலம்.

இந்நான்கும் கெடுநீரார் விரும்பிப் பூணும் ஆபரணம் என்றுமாம். 5

606. படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்
மாண்பயன் மெய்த லரிது.

படியையுடைய அரசர் கைப்பிடித்து மிகுந்த செல்வம் அமைந்திருப்பினும், மடி வந்து கூடிற்றாயின் அச்செல்வம் பின்பு கிடைப்பது அரிது.

•செல்வம் தேடாமற் பாரம்பரியமாக மன்னர் கொடுத்திருப் பினும், சோம்புடையார்க்கு மாட்சிமைப்பட்ட பயன் எய்தல் அரி தெனவும் கொள்க. 6

[குறிப்பு: பற்றமைந்தக் கண்ணும், பயனெய்தல். அச்சுப் பாடங்கள்.]

607. இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர்.

சுற்றத்தார் நட்புடையார் இடித்துச் சொல்ல ,பிறர் இகழ்ச்சி சொல்ல, கேட்டுப் பொறுத்துக் கிடப்பர், சோம்பலை விரும்பிப் பெரிய முயற்சியைச் செய்த லில்லார்.

608. மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும்.

மடியினது தன்மை குடிமை யுடையான் இடத்தே தங்கி யிருக்குமாயின், அது தன்பகைவர்க்கு அடிமைப் படுத்தி விடும். 8

609. குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.

*குடியுள்ளும் ஆண்மையுள்ளும் வந்த குற்றத்தை ஒருவன் தன்னை ஆளும் தன் சோம்பைத் தான் தள்ளிவிட, அவையிரண்டும் கெடும் என்றவாறு.*

குடியில் வந்த குற்றம், வறுமை; ஆண்மையில் வந்த குற்றம், கொடாமை. *இவை கெடுஞ் சோம்பு நீங்கினவர்க் கென்றவாறு.* 9

610. மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
தாஅய வெல்லா மொருங்கு.

*மடியில்லாத மன்னவன் எய்துவன்,* திருவிக்கிரமன் அடியினல் தாவியளந்த எல்லா *நிலத்தையும் ஒருமிக்க.*

*அடியளந்தான் தாவிய வெல்லாம் என்பது தாயவெல்லாம் என நடுவெழுத்துக் குறைந்து நின்றது.* 10

[குறிப்பு : *தாஅய தெல்லாம் என்பது அச்சுப்பாடம்.*]

மடியின்மை முற்றும்.

---

## 62. ஆள்வினை யுடைமை

*அஃதாவது,* வினையை ஆளுதல். வேலைகொள்தல் என்பனக் போலக் கொள்க.

611. அருமை யுடைத்தென் றயாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

*தமது சிறுமை நோக்கி, நாம் இவ்வினை முடித்தல் அருமை யுடைத்து என்று கருதித் தள்ளா தொழிக. அது முடித்தற் கேற்ற பெருமையைத் தனக்கு முயற்சி யுண்டாக்கும்.*

*முயற்சி பெருமை தரும் எனக் கொள்க.* 1

[குறிப்பு : *அசாவாமை என்பது அச்சுப்பாடம்.*]

612. வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு.

வினைகள் செய்யுமிடத்துச் செய்யப்படும் வினைகளைச் செய்து குறையாக விடாமல் முழுதுஞ் செய்து முடிக்க. குறை வேலையாக விட்ட வரை உலகமும் விடும்.

வினை குறையாக விட்டமையால் பயன் இல்லை; பயன் இல்லாமையாற் பெருமை இல்லை; பெருமை யில்லாரை உலகந் தழுவாது விடும் என்க. 2

613. தாளாண்மை என்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு.

வினை முயற்சி என்னுந் தகைமையினிடத்தே நிலை பெற்று நின்றது, எல்லார்க்கும் உபகாரஞ் செய்தல் என்னும் மேம்பாடு.

தாளாண்மை: தொழில். வேளாண்மை: உபகாரம். 3

614. தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.

ஆள்வினை யில்லாதவன் உபகாரம், படைகண்டால் அஞ்சும் பேடி கையில் வாளை ஆளுந் தன்மை யில்லாதது போல வில்லையாம்.

கொடுக்க வேண்டும் என்னும் வேளாண்மை இருந்தாலும் தாளாண்மை இல்லாத வறுமையால், பேடி கை வாளாண்மை போலக் கெடும் என்றது.

615. இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண்.

தனக்கு இன்பம் விரும்பாமல் வினை செய்தலை விரும்புவான் தன் குடும்பமாகிய பாரத்தின் துன்பத்தினை நீக்கித் தாங்கி நிற்குந் தூணும்.

கேளிர்: குடும்ப பாரம். 5

616. முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.

முயற்சியாவது செல்வத்தினை வளர்க்கும்; முயற்சியில்லாமை வறுமையிற் றள்ளிவிடும்.

முயற்சி: வினையின் முயற்சி. 6

617. மடியுளான் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளா டாமரையி னாள்.

சோம்புதலுடையான் பெரிய மூதேவியாம்; சோம்புதலில்லாதவன் தொழிலினிடத்தே யிருப்பாள் தாமரையினாள்.

*மாமுகடி : மூதேவி. தாமரையினாள் : சீதேவி. தாள் : தாளாண்மை.* 7

[குறிப்பு : *மடியுளாள் என்பது அச்சுப்பாடம்.*]

618. பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி.

*செல்வந் தருவதாய பொறி இல்லாமை ஒருவற்குப் பழியாகாது; அறிய வேண்டுவனவற்றை அறிந்து தொழில் செய்யாமையே பழியாவது.*

*ஒருவர் பழவினை பற்றிப் பழியார் : தொழில் செய்யாமையைப் பழிப்பர் என்றது.* 8

619. தெய்வத்தா லாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

*முயன்ற தொழில் விதிவகையாற் கருதிய பயனைத் தாராது எனினும், முயற்சி தனக்கிடமாகிய உடம்பு வருந்திய வருத்தத்தினளவு கூலி தரும்.*

*தெய்வத்தான் ஆகிய வழி வளர்ந்து பயன் மிகுதி தரும். மெய் எவ்வளவு வருந்திற்று, அவ்வளவு கூலிதரும்; இருவகையும் பாழாகாது எனக் கொள்க. தெய்வம் : விதி.* 9

[குறிப்பு : *மெய் வருத்த என்பது அச்சுப்பாடம்.*]

620. ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

ஊழின் பயனையும் விலக்குவர், அவ்விலக்கிற்கு இளையாது தாம் தொடங்கிய வினையைத் தாழ்வறச் செய்து முடிப்பவர்.

*சூழ்ச்சி முதலிய அறிவினால், குற்றமறச்* செய்யில், ஊழி பதம் தொடங்கித் *தொடங்கிச் செய்யின், ஊழ் விலகும், செய்வினை முடியும் முயற்சி வலியான்.*

பகீரதன், திரிசங்கு, அரிச்சந்திரன் முதலியவரசர், இடத்திற் காண்க.

ஆள்வினை யுடைமை முற்றும்.

---

## 63. இடுக்கணழியாமை

அஃதாவது, ஊழ்வினை வயத்தால் இடுக்கண் வந்துழித் துன்பப் படாமை.

621. **இடுக்கண் வருங்கா னகுக வதனை**
**அடுத்தூர்வ தஃதொப்ப தில்.**

ஊழ்வினையால் இடுக்கண் வருமிடத்து அதற்கு அழியாது உள் மகிழ்க; அவ்விடுக்கணைக் கெடுக்க வல்லது மகிழ்ச்சி போலப் பிறிது இல்லை யாதலால். 1

622. **வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையான்**
**உள்ளத்தி னுள்ளக் கெடும்.**

வெள்ளம் போலத் தன்னை அழுத்தக் கரைபுரள வரும் இடுக்கணெல்லாம், அறிவுடையான் உள்ளத்தினால் வேறொன்றை நினைக்க நினைத்த போதே கெடும்.

இடும்பை : இடுக்கண். இடுக்கணை நினையாமல் வேறொன்றை நினைப்ப அது நீங்கும் என்பது. 2

623. **இடும்பைக் கிடும்பைப் படுப்ப ரிடும்பைக்**
**கிடும்பைப் படாஅ தவர்.**

வினை செய்யுமிடத்தில் வந்த துன்பத்துக்கு வருந்தாதவர், துன்பந் தனக்குத் துன்பம் விளைப்பர்.

இடுக்கண் வந்தால், இடுக்கணுக் கிடுக்கண் நினைப்பர் இடுக்கண் படாதவர் என்க. 3

[குறிப்பு: இடும்பை படுப்பர், இடும்பை படாதவர், என்பன அச்சுப்பாடம்.]

624. மடுத்தவா யெல்லாம் பகடன்ன னுற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து.

வண்டில், நடவாது புதைந்த இடமெல்லாம் அதனை இழுக்கும் பகடு போலத் தொழில் செய்யுமிடத்து இடுக்கண் வந்தால் அவ் விடுக்கண்ணைத் தவிர்த்துத் தொழில் செய்ய வல்லவனுக்கு இடுக் கண் தானே இடர்ப்படுதலை யுடைத்து.

வண்டிற் பாரத்தினாற் புதைந்த விடமெல்லாம் பகடு பிட்டு ராற்றியும்(?) மூக்கூன்றியுங் கால் தவழ்ந்தும் பலங்கொண்டு இழுக்கு மாறு போலத் தன் மெய்வருத்தம் நோக்காது தொழில் முடிப்பார் என்றது. பகடு ; கிடா. 4

625. அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
இடுக்க ணிடுக்கட் படும்.

இடைவிடாது மேன்மேல் வந்தனவாயினும், தன் மனவலி விடாதானை யுற்ற இடுக்கண், தான் இடுக்கண்ணிலே பட்டுப் போம்.

அடுக்கி வரினும் என்றது, ஒன்றே பலகால் வரினும் வேறாகி வரினும் இடுக்கணுக்கு அஞ்சாமை. 4

626. அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புத றேற்றா தவர்.

வறுமைக் காலம் வந்தால், யாம் வறுமை யாயினேம் என்று மனத்தாற் துயருழப்பரோ, செல்வம் பெற்றேம் என்று வறுமை வாராமற் காக்க மாட்டா தவர்.

ஆதலால், வறுமையாகிய இடுக்கண் வந்தால் துன்பப்பட வேண்டா என்றது. 6

[குறிப்பு : அற்றேம் பெற்றேம், என்பன அச்சுப்பாடம்.]

627. இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதா மேல்.

*நாற்கதியிலும் உள்ள உடம்புகள் இடும்பை யென்னும் வாளுக்கு இலக்கு என்று தெளிந்து, தம்மேல் வந்த இடும்பையை இடும்பையாகக் கொள்ளார் அறிவுடையோர்.*

*துன்பத்துக்கு இலக்காக வந்த வுடல் என்றது. நாற்கதி : பையின், புனலின், முட்டையின், நிலத்தின் எடுத்த வுடல். இது உடலின் வரும் இடுக்கண் சொல்லியது.* 7

628. இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
துன்ப முறுத லிலன்.

*தன்னுடம்பிற்கு இன்பமானவற்றை விரும்பாதே, ஊழ்வினையால் இடும்பை யெய்துதல் இயல்பென்று தெளிந்திருப்பான் தன் முயற்சியால் துன்பமுறான்.*

*இன்பம் வந்தால் இன்பமென்று கொள்ளாதவன், துன்பம் வந்தால் துன்பமென்று கொள்ளான் என்றவாறு.* 8

629. இன்பத்து ளின்பம் விழையாதான் துன்பத்துள்
துன்ப முறுத லிலன்.

*வினையால் தனக்கு இன்பம் வந்துழி அதனை அனுபவியா நின்றே மனத்தான் விரும்பாதான், துன்பம் வந்துழியும் அதனை அனுபவியா நின்று மனத்தான் வருந்தான் என்றவாறு.* 9

630. இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு.

*ஒருவன் தொழில் செய்யுமிடத்து முயற்சியான் வரும் துன்பந் தன்னையே தனக்கு இன்பமாகக் கற்பித்துக் கொள்வானாயின், அதனாற் றன்பகைவர் நன்கு மதித்தற்கு ஏதுவாய உயர்ச்சி யுண்டாம்.*

இடுக்க ணழியாமை முற்றும்.

*அரசியல் முற்றும்.*

---

## அங்கவியல்

## 64. அமைச்சு

அஃதாவது, அமைச்சனது இயல்பு கூறியது.

631. கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யும்
அருவினையு மாண்ட தமைச்சு.

அரசனது வினை அமைச்சன் செய்யுங் காலத்திற்கு வேண்டுங் கருவிகளும், வினை செய்வதற்கேற்ற காலமும், அவ்வினை செய்யுமாறும், அப்படிச் செய்யப்படும் வினை தானும், வாய்ப்ப எண்ண வல்லவனே அமைச்சனாவான்.

ஆண்டது : எண்ணியாள வல்லவன் என்க. மாண்டதென்றது மாட்சிமை என்றுமாம். இவை யைந்தும் மந்திரிக்கு அங்கம் என்க.

632. வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.

வினை செய்தற்கண் வன்கண்மையும், குடிகளைக் காத்தலும், நீதி நூல் கற்றுச் செய்வன தவிர்வன அறிதலும், ஆள்வினையுடைமையும் முன்சொன்ன அங்கங்களுடனே திருந்த வுடையவனே அமைச்சனாவான். 2

633. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

போர்வினை வந்துழிப் பகைவர்க்குத் துணையாயினாரைப் பிரித்தலும், தம்பாற்றுணையாயினாரைப் பிரியாமற் பேணிக் கொளலும், முன்னே தம்மிற் பிரிந்தாரை மீண்டும் வேண்டிற் பொருத்திக் கொளலும், வல்லவனே அமைச்சனாவான். 3

634. தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

ஒரு காரியம் பலவிதமாகத் தோன்றில் அவற்றுள் ஆவது ஆராய்ந் தறிதலும், வினை செய்யுங்கால் வாய்க்கும் திறன் நாடிச்

செய்தலும், சிலரைப் பிரித்தல் பொருத்தல் செய்யுமிடத்து அவர்க்கு இதுவே செயற்பாலது என்று துணிவு பிறக்கும் வகை சொல்லுதலும், வல்லவனும் அமைச்சு ஆவான். 4

**635. அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றும்**
**திறனறிந்தான் றேர்ச்சித் துணை.**

*அரசராற் செய்யப்படும் அறங்களை யறிந்து தனக்கேற்ற கல்வி யால் நிறைந்தமைந்த சொல்லை யுடையனாய் எக் காலத்தும் வினை செய்யுந் திறங்களை யறிந்தான் அவர்க்குச் சூழ்ச்சித் துணையாம்.* 5

**636. மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்**
**யாவுள முன்னிற் பவை.**

*இயற்கையாய நுண்ணறிவை, செயற்கையாய நூலறிவோடு உடைய அமைச்சர்க்கு மிக்க நுட்பத்தையுடைய சூழ்ச்சிகளாய் முன்னிற்பன யாவையுள ?*

*அதிநுட்ப மென்றுரைப்பாருமுளர்.* 6

**637. செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்**
**தியற்கை யறிந்து செயல்.**

*நூனெறியால் வினை செய்யுந் திறன் அறிந்த விடத்தும், அப் பொழுது நடக்கும் உலகு இயற்கையை யறிந்து வினை செய்க.* 7

**638. அறிகொன் றறியா னெனினு முறுதி**
**உழையிருந்தான் கூறல் கடன்.**

*அறியுந் திறனெல்லாம் அறிந்தவர் சொல்லிய அறிவை அறி யாது அழித்தானாயினும், அரசனுக்குறுதி, அக்குற்றம் நோக்கி ஒழியாது, அவனுக்குத் துணையாய் அருகிருந்த அமைச்சன் கூறுதல் முறைமை.*

கேளாத அரசனுக்கும் உறுதி கூறுதல் அமைச்சன் மேல் விழுந்த பார மென்றது. *உறுதி கூறுறுகில் அரசன் மேற் குற்றத்தை அமைச்சன் மேல் வைப்பர்.* அறிதொன்றியா னென்றும் பாடம். 8

**639. பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வர்**
**எழுபது கோடி தலை.**

பக்கத்திலிருந்து பழுதெண்ணும் அமைச்சன் ஒருவன், அரசனுக்குப் பகைவர் எழுபது கோடியினும் அதிகமாம்.

தன் மந்திரி யொருவனிருப்ப எழுபது கோடி பகைவருண்டாவர் என்றது.

[குறிப்பு: தெவ்வோர், எழுபது கோடியுறும் என்பன அச்சுப் பாடங்கள்.]

640. முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர்.

செய்யப்படும் வினைகளை முன்னடைவுபட வெண்ணி வைத்தும், செய்யுங்கால் அவை முடிவில்லாகவே செய்யா நிற்பர், முடித்தற் கேற்ற கூறுபாடு இல்லாதவர்.

திறப்பாடாவன, வந்த வந்த விடையூறுக் கெல்லாம் ஏற்ற பரிகாரம் அறிந்து செய்தலுந் திண்ணியராதலும். 10

அமைச்சு முற்றும்.

---

## 65. சொல்வன்மை

அஃதாவது, தான் கருதிய வினை முடியுமாறு வார்த்தை சொல்லல்; ஒரு தலையாய்ச் சொல்லலும் வல்லது அமைச்சு என்பதனுல் அமைச்சனது சொல்வன்மை.

641. நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று.

அமைச்சர்க்கு இன்றியமையாத நற்குணமாவது சான்றோரால் நாநலமென்று சிறப்பித்துச் சொல்லும் நலமுடையர் ஆதல்; அந்நலம் பிறநல மெல்லாவற்றுள்ளும் அடங்குவதன்றி மிக்காகலான்.

நாவினுலுள்ள நலம், சொல்லின் வன்மை என்க. எல்லா நலத்தினும் மக்கட்பிறவி நலமிக்கது; அதனினல்ல நலம் நாவினுற் சொல்லுஞ் சொல்லின் நலமெனக் கொள்க. பிரித்தல், பொருத்தல், அரசனைத் தன் வசப்படுத்தல் முதலாயின வெல்லாங் கொள்க. 1

642. ஆக்கமுங் கேடு மதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

செல்வமுங் கேடுஞ் சொல்லினான் வரும் ஆகலான், சொல்லின் கட் சோர்வைப் போற்றிக் காக்க. 2

643. கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்.

நட்பாய்க் கேட்டாரைப் பின் வேறுபடாமலிறுகக் கட்டுந் தகைமையை யுடையவாய், பகையாயினாரும் பகை தவிர்ந்து விரும்பச் சொல்லப்படுவதே அமைச்சர்க்குச் சொல்லாவது.

கேளார்: பகைவர். தகைமை; சுருங்கச் சொல்லல், விளங்கச் சொல்லல், மகிழ்ச்சி பிறத்தல், நகை விளைத்தல் முதலாயின. 3

644. திறனறிந்து சொல்லுக சொல்லை யறமும்
பொருளு மதனினூங் கில்.

கேட்குந் திறங்களை யறிந்து சொல்லுக சொற்களை; மேம்பட்ட அறமும் பொருளும் அதுவே யாம்; அதனினும் வேறொன்றும் இல்லை. 4

[குறிப்பு: அதனினூஉங்கு என்பது அச்சுப்பாடம்.]

645. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொல் லின்மை யறிந்து.

தான் சொல்லக் கருதிய சொல்லைப் பிறிதோர் சொல்லாய் வெல்ல வல்லதொரு சொல்லில்லாமை அறிந்து பின் அச் சொல்லைச் சொல்லுக. 5

646. வேட்பத்தான் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள்.

பிறர் விரும்பும்படித் தான் சொல்லி, அவர் தனக்குச் சொல்லும்போது அச் சொல்லின் பயனைக் கொண்டொழிதல் அமைச்சியலுட் குற்றமற்றார் கொள்கை.

மாட்சிமை யமைச்சியலாற் சொல்லினிமையை நோக்காது அவர் கருத்தின் பயனைக் கொள்வர் என்றது. 6

[குறிப்பு: தாஞ்சொல்லி என்பது அச்சுப்பாடம்.]

647. சொல்வலன் சோர்வில னஞ்சா னவனை
இகல்வெல்லல் யார்க்கு மரிது.

தான் எண்ணிய காரியங்களைச் சொல்ல வல்லவனாகவும் பல காரியங்களினும் பல சொல்லினும் மறதியில்லாதவனாகவும் சபையி லஞ்சாதவனாகவும் இருப்பின் அவனை மாறுபட்டு வெல்லுதல் யார்க்கும் அரிது. 7

[குறிப்பு: சொலல்வல்லன் என்பது அச்சுபபாடம்.]

648. விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

சொல்லப்படும் காரியங்களை நிரல்படக் கோத்து இனிதாகச் சொல்லுதல் வல்லாரைப் பெறின், உலகம் அவற்றை விரைந்து ஏற்றுக்கொள்ளும்.

தொழில் கேட்கும் என்பது: தொழிலைக் கேட்டுக்கொள்ளும் என்றது. 8

649. பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்று தவர்.

குற்றமற்றனவாய்ச் சிலவாய சொற்களிலே தெளியாதவர் பலசொற்களைத் தொடுத்துச் சொல்லத் தெளிந்து விரும்புவர்.

சில சொல்லிலே சிலர்க்கு விருப்பம்; பல சொல்லிலே சிலர்க்கு விருப்பம்; அவையறிந்து சொல்லுக வென்றது. 9

650. இணருழ்த்து நாறு மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார்.

கற்றறிந்த நூல்களைப் பிறரறியும் வண்ணம் விரித்துரைக்க மாட்டாதவர் கொத்தோடே மலர்ந்தும் நாறாப்பூவை ஒப்பர்.

ஊழ்த்தல் பதனழிவு என்பதனால், கொத்தாக விருந்து பதனழியாமற் செவ்வி பெற மலர்ந்து நாறாப் பூவாம், கற்றறிந்தும் பிறரறியச் சொல்லாதவர் என்றது.

சொல்வன்மை முற்றும்.

## 66. வினைத்தூய்மை

அஃதாவது, மந்திரியர், சொல்லையன்றித் தொழிலு மறனும் புகழும் பொருளும் பயப்பச் செய்யும் வினை. வினைத்தூய்மை யென்றது, பழியும் பாவமுமில்லாத வினை.

651. துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும்.

*ஒருவனுக்குத் துணைநலஞ் செல்வம் ஒன்றனைத் தரும்; அவ்வாறன்றி வினைநலம் அவன் வேண்டிய வெல்லாந் தரும் என்றவாறு.* 1

652. என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

*அரசனுக்கு இம்மையிற் புகழும் மறுமையில் அறமும் தாராத வினைகளை அமைச்சன் எக்காலமும் ஒழிதல் வேண்டும்.* 2

653. ஓதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர்.

*தாம் மேலாகக் கடவோம் என்று கருதுவார் தமக்குப் புகழ் கெடுதற்குக் காரணமாகிய வினையைச் செய்யாதொழிக.*

*ஓதல் : ஒழிதல்; ஆதல் : ஆகுதல்.* 3

654. இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

*தாம் இடுக்கணிலே பட்டாலும் இடுக்கண் தீருதற்பொருட்டு அவகீர்த்தி வந்த வினைகளைச் செய்யார், நடுக்கமற்ற தெளிவினை யுடையார்.* 4

652. எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

*என்னகாரியஞ் செய்தோம் என்று பின் தானே இரங்கும் வினைகளை ஒருக்காலும் செய்யாதொழிக; செய்வானேல்,* முன்னுகாத காரியங்களைச் செய்தது போலப் பின்னுஞ் செய்யாதொழிவது நன்று. 5

656. ஈன்றாள் பசிகாண்பா ளாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

*பெற்றதாய் பசித்திருப்பப் பார்த்திருப்பானாயினும் அப்பசி தீரும் பொருட்டு அறிவுடையார் பழிக்கும் வினைகளைச் செய்யா தொழிக.*

"இறந்த மூப்பின ரிருமுது குரவர், கற்புடை மனைவி குழவி பசிப்பினும், நற்புகழல்லது செய்யா தொழிக" *என்பதனால் அறிக. இவை யெல்லாம் பாவமும் பழியும் வரும் வினைகளைச் செய்யாதொழிக என்றது.* 6

657. பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை.

*நிலை நில்லாச் செல்வத்தின் பொருட்டு நிலை நிற்கும் பழி செய்து வந்த செல்வத்தினும் நல்லோர் பழியும் பாவமும் செய்யாது இருந்தனுபவிக்கும் மிகுந்த தரித்திரமே தலைமையான செல்வம்.* 7

658. கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதாம்
முடிந்தாலும் பீழை தரும்.

*நீதி நூலோர் ஆகாது என்று தள்ளின வினைகளைத் தாமுந் தள்ளாது பொருளாசையாற் செய்த அமைச்சனுக்கு அது வினைத் தூய்மை யல்லாமையால் முடியாதழிந்துபோம்; முடிந்தாலும் பீடையாம் துன்பத்தைக் கொடுக்கும்.* 8

659. அழக்கொண்ட தெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை.

*பிறர் அழக் கொண்ட பொருளெல்லாம் தான் அழப்போம்; போன பொருளும் திரும்பி வரும், பிறர் களிப்ப நன்மை செய்து தேடிய பொருள்.*

துன்மந்திரியாலரசன் தேடிய பொருள் கெடும். நன்மந்திரியா லரசன் தேடிய பொருள் கெடினும் வருமென்றது. 9

660. சலத்தாற் பொருள்செய்தே மாத்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று.

கொடுமையாற் பொருள் தேடிச் சேமஞ் செய்த மந்திரியும் அரசனும் அப்பொருளும் கெடுதல் பசுமண்ணாற் குடஞ்செய்து நீர்நிறையப் பெய்து வைத்தால் அது ஊறிக் குடத்தையுடைத்து நீர் எப்படி யோடிப்போமோ அப்படித் தேடினவருங் கெட்டுப் பொருளும் கெடும்.

*சலம் : கோபம் ; கோபத்தாற் பழியும் பாவமும் வரத் தேடிய பொருள்.* ஏமாத்தல்; சேமஞ் செய்தல்; அது பதனஞ்செய்தல். *பசுமட் கலம் : பச்சைக் களிமண்ணாற் செய்து சுடாத குடம்.* நீர் பெய்திரீஇ *:* நீர் பெய்திருக்கச் செய்து *எனவறிக.* *10*

[குறிப்பு : *பொருள்செய்து ஏமாக்கல் என்பது அச்சுப்பாடம்.*]

வினைத்தூய்மை முற்றும்.

---

## 67· வினைத் திட்பம்

*அஃதாவது, வினைசெய்யும் அமைச்சனுக்கு மனத்திண்மை. அது மனத்ினது வலியெனக் கொள்க.*

661. வினைதிட்ப மென்ப தொருவன் மனத்திட்பம்
மற்றைய வெல்லாம் பிற.

*வினை செய்யுமிடத்துத் திண்மையென்று சொல்லப்படுவது வினை செய்தற்குரியான் ஒருவன் மனத்தினது திண்மை. அஃதொழிந்தன வெல்லாம் அதற்குத் திண்மையாயினுந் திண்மை அல்ல.*

*திண்மை : வலிமை.* *1*

662. ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டின்
ஆறென்ப ராய்ந்தவர் கோள்.

*நீதியாராய்ந்த அமைச்சர் பழுதுபடும் வினைகளைச் செய்யா தொழிதலும், பழுதுபடா வினைகளைச் செய்தலும் செய்யுமிடத்துப் பழுதுபட்ட வழி அதற்குத் தளராமையுமாகிய இவ்விரண்டின் வழி*

யென்பார் கோளாகிய வியாழன், வெள்ளி என்னும் மந்திரியர் சரித்திர நூலை ஆராய்ந்த பெரியோர்.

*ஊறு : இடையூறு ; உற்றபின் : இடையூறுற்றபின்.* 2

**663. கடக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடக்கொட்கின்
எற்றா விழுமந் தரும்.**

*செய்யப்படும் வினையை முடிவின்கண் வெளிப்படும் வகை மறைத்துச் செய்வது திட்பம்; அதுவன்றி இடையிலே வெளிப் படும் வகை செய்யின், அவனுக்கு நீங்காத துன்பத்தைக் கொடுக்கும்.*

கொட்கல் : வெளிப்படல்; அஃதாவது பகைவேந்தரைப் பிடித்தற்கும் போர் செய்தற்கும், படைகூட்டல், படையெழுச்சி முதலாயின வெனக் கொள்க, பகைவர் அறியில் துன்பம் விளைப்பர் என்க. 3

**664. சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாம்
சொல்லிய வண்ணஞ் செயல்.**

*யாமிவ்வினை இவற்றாற் செய்தும் என்று நிரல்படச் சொல்லு தல் யாவர்க்கும் எளிதாம்; அரியவாஞ் சொன்ன வண்ணஞ் செய்து முடித்தல்.* 4

**665. வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்
ஊறெய்தி யுள்ளப் படும்.**

*எண்ணத்தாற் சிறப்பெய்திப் பிறவிலக்கணங்களாலும் பெருமை பெற்ற அமைச்சருடைய வினைத்திட்பம்* வேந்தனிடத்து உறுதலால் *எல்லாராலும் நன்கு மதிக்கப்படும்.* 5

**666. எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.**

*தாமெய்த வெண்ணிய பொருள் எல்லாம் எண்ணியவாறே எய்துவார், தாம் எண்ணிய வினையிடத்துத் திண்மையராகப் பெறின்.*

*எய்துதல் : வருதல்.* எண்ணி வைத்து வினையிற்றிண்மையிலராகில் எய்தமாட்டார் என்பது கருத்து; *பின் துன்பம் வரும் என்றது.* 6

667. உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து.

உருள்கின்ற பெரிய தேர்க்கு அச்சின் கண் ஆணிபோல் வினைக்கண் திண்ணியாரை யுடைத்து உலகம்; அதனால் வடிவின் சிறுமை நோக்கி யிகழ்தலை யொழிக.

வடிவினாற் சிறுமை பெருமை பார்க்க வேண்டா ; தொழிலினாற் சிறுமை பெருமை பார்த்துக் கொள்க என்க. 7

668. கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல்.

மனந்தெளிந்து செய்வதான வினையின்கண் கலங்காது, மனஞ்சலியாது, காலம் நீட்டியாது, உடனே செய்க.

கலங்காது கண்ட வினை : எளிதின் முடியும் வினை. தூக்கம் : கால நீட்டித்தல். 8

669. துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கு மெனின்.

முந்தி உடம்பு வருத்தமுற வரினும் அது நோக்கித் தளராது துணிந்து செய்க, பின்பு இன்பந் தரும் வினையை.

துன்பமிகுதி யுடையவராயினும் இன்பம் வரும் வினையை விடாது துணிந்து செய்க. 9

[குறிப்பு : பயக்கும் வினை என்பது அச்சுப்பாடம்.]

670. எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு.

வினைத்திட்ப மிது நமக்குச் சிறப்பு என்று கொள்ளாத அமைச்சரை, மற்ற திட்பங்களெல்லாம் உடையராயினும் நன்கு மதியாது உலகம்.

வினைத் திட்பமாவது : வேற்று வேந்தர் போர் வலிமை : அது கண்டவிடத்து அதனினும் மிகுந்த வலி காட்டாமல் அது இல்லையாயின் எனைத்திட்பமாகிய படையும் அரணும் திட்பமல்ல என்றது(?). 10

வினைத்திட்பம் முற்றும்.

---

## 68. வினை செயல்வகை

*அஃதாவது, திட்பமுடைய அமைச்சன் வினையைச் செய்யும் வகை.*

671. சூழ்ச்சி முடிவு துணிசெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குத றீது.

ஒரு வினை செய்தற்குச் சூழ்ச்சியாக விசாரிப்பதெல்லாம் விசாரித்து முடிதல், பின்பு அது தப்பாது செயலா மென்னுந் துணிவு, துணிவு பெற்ற வினையின் பின் நீட்டிப்பின்கண் தங்குமாயின் அது குற்றமுடைத்து. 1

[குறிப்பு : *துணிவெய்தல் என்பது அச்சுப்பாடம்.*]

672. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

*நீட்டித்துச் செய்யும் பகுதியையுடைய வினைகளை நீட்டித்துச் செய்க; நீட்டியாது செய்யும் வினைகளை நீட்டியா தொழிக.*

*நீட்டித்தல் : கால தாமதஞ் செய்தல். தூங்கல் : கால நீட்டித்தல் என்க.* 2

673. ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்கால்
செல்லும்வாய் நோக்கிச் செயல்.

*வினை செய்யுங்கால் போர்வினை யியலும் இடமெல்லாம் போர் நன்றே; அது* பொருந்தாதாகில் மற்ற சமாதானம் நன்று.

*இயலுமிடம் : தான் வெல்லுமிடம்; இயலாவிடம், சாம, பேத, தானம் (செய்க) என்க.* 3

674 வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும்.

*செய்யத் தொடங்கிய வினையும் களையத் தொடங்கிய பகையும் இரண்டினையு முடியாது குறையாய் விடில், இல்லிற்பட்ட தியை யெல்லாம் அவித்து ஓரிடத்தில் அவியாமற் குறையாய் விட்ட தீ யெங்கும் கலந்து சுடுவது போலச் சுடும்.*

சுடுதல் : பின் துன்பப்படுத்தல்.

675. பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்
இருடீர வெண்ணிச் செயல்.

*வினை செய்யுமிடத்துப் பொருளுங் கருவிகளும் காலமும் வினையும் இடமுமாகிய ஐந்தினையும் மயக்கமற எண்ணிச் செய்க.*

*பொருள் : ஆம் பொருளும் அழியும் பொருளும் : கருவி : தன் படையும் மாற்றான் படையும்; காலம்; தமக்காங் காலமும் அவர்க்காங் காலமும்; வினை : தாம் வல்ல வினையும் அவர் வல்ல வினையும்; இடம் : தாம் வெல்லும் இடமும் அவர் வெல்லும் இடமும். இவற்றை யெண்ணித் தமக்குத்தப்பாமல் வென்றி வருதலை அறிந்து செய்க என்றது.* 5

676. முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

*வினை செய்யுங் காலத்து இடையூறில்லாமல் முடிதலும், இடையூறு வருமது நீங்கி முடிந்தால் தான் எய்தும் பெரும் பயனும் சீர் தூக்கிச் செய்க.* 6

677. செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை
உள்ளறிவா னுள்ளங் கொளல்.

தவிரும் வினையைத் தவிர்ந்து, செய்யும் வினையைத் தொடங்கினன் *செய்யும் முறைமையாவது, அவ்வினையின் உளப்பாட்டினை யறிவான் கருத்தினைத் தான் அறிதல்.*

*உள்ளறிவான் : முன் செய்தறிந்தவன் கருத்தினைத் தானறிதல்............(?).* 7

678. வினையால் வினையாக்கிக் கோட லனைகவுள்
ஆனையா லானையாத் தற்று.

*செய்கின்ற வினையாலே அன்னது பிறிது மோர் வினையை முடித்துக் கொள்ளுதல், மதத்தால் நனைந்த கபோலத்தை யுடைய யானையை அன்னதோர் யானையாற் பிணித்ததனோடு ஒக்கும்.*

வினையான் வினையாக்கிக் கோடல் : இருவர் பகையாயின் ஒரு பகைவனை வெல்ல மற்றப் பகைவன்றானே வசப்படுவனென்பது போலக் கொள்க. 8

[குறிப்பு : *யானையால் யானையாத் தற்று என்பது அச்சுப் பாடம்.*]

679. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை யொட்டிக் கொளல்.

நண்பாகிய வேந்தர்க்கு நல்லன செய்தலினும், விரைந்து செய்யப்படும் பகை வேந்தரொடு ஒட்டாமற் பிரித்த வேந்தரை ஒட்டிக் கொள்க.

விரைந்து செய்தல் : தீவிரமாகச் செய்தல். 9

680. உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறின்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.

ஆளும் இடம் சிறியராய அமைச்சர் தம்மில் வலியார் எதிர்ந்தால் தஞ்சேனை நடுங்குதலை யஞ்சி அந்நிலைக்கு வேண்டுவதாய சமாதானம் கூடுமாயின் அவரைத் தாழ்ந்து சமாதானத்தை யேற்றுக் கொள்வார்.

தம்மிற் பெரியாரைத் தாம் பணிந்து பொருள் கொடுத்துச் சமாதானம் ஏற்றுக் கொள்வர் என்க. இது பெருநில வேந்தர்க்குஞ் சிறுநில வேந்தர்க்குஞ் சொல்லியது ; பாளையக்காரர்க்குமாம். 10

வினை செயல் வகை முற்றும்.

---

## 69. தூது

அஃதாவது, பொருத்தலும் பிரித்தலுமாகிய சந்தி விக்கிரகஞ் செய்வார்க்குத் தூதென்று பெயர். ஆதலால் தூது சொல்வாரைத் தூதென்றது எனக் கொள்க. "மந்திரியர், புரோகிதர், சேனவரையர் உரைக்குந் தூதர் ஒற்றென்று இவர் அரசர்க் கமைத்த ஐம்பெருஞ் சுற்றம்" என்பதனுதல் அறிக.

681. அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

சுற்றத்தாரிடத்து அன்புடையனாதலும், நிறைந்த குடியின் பிறத்தலும், வேந்தர் முதலாயினார் விரும்பும் பண்புடையனாதலும் தூது செல்வானுக்கு இலக்கணமாம்.

வேந்தர் அவாவும் பண்பு : வேற்று வேந்தர் விரும்பும் பண்பெனக. 1

682. அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று.

தம்மரசரிடத் தன்புடைமையும், அவருக்காவன அறிவுடைமையும், வேற்றரசரிடை சொல்லும்போது ஆராய்ந்து சொல்லுஞ் சொல் வன்மையும், எனத் தூதுரைக்க உரியார்க்கு இன்றியமையாத குணங்கள் மூன்று.

இன்றியமையாமை என்பது : இம் மூன்று குணமுமில்லாமைத் தூது சொல்லப் படாது என்க. 2

683. நூலாரு ணூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.

வேலையுடைய வேற்றரசரிடைச் சென்று தன்னரசனுக்கு வெற்றி தரும் வினையைச் சொல்லும் தூதனுக்கு இலக்கணமாவது, நீதி நூலை யறிந்த அமைச்சரிடைத் தானும் அந்நூலை வல்லவன் ஆதல். 3

684. அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றின்
செறிவுடையான் செல்க வினைக்கு.

இயற்கை யறிவும், கண்டார் விரும்புந் தோற்றப் பொலிவும், பலரோடும் பலகாலும் ஆராயப்பட்ட கல்வியும் என நன்கு மதித்தற்கு ஏதுவாகிய இம்மூன்றினது செறிவுமுடையான் வேற்று வேந்தரிடைத் தூது சொல்லும் வினைக்குச் செல்க. 4

[குறிப்பு : மூன்றன் என்பது அச்சுப்பாடம்.]

685. தொகச்சொலித் தூவாத நீக்கி நகச் சொல்லி
நன்றி பயப்பதாந் தூது.

வேற்றரசர்கட்குப் பல காரியங்களையும் சொல்லும்போது, விரிவாகச் சொல்லாமல் தொகுத்துச் சொல்லியும், பொல்லாத காரியங்களைச் சொல்லும்போது வேந்தருக்குக் கோபம் வாராமல் பொல்லாத சொற்களை நீக்கி இனிய சொற்களான் உபாயமாக மன மகிழ்ச்சி

யாகச் சொல்லியும் தன்னரசனுக்கு நன்மையைச் செலுத்துபவனே தூதனாவான். 5

686. கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்
தக்க தறிவதாந் தூது.

நீதி நூல்களைக் கற்றுத் தான் சென்ற கருமத்தைப் பகை வேந்தர் மனங்கொளச் சொல்லி, அவர் கோபித்து நோக்கின் அந் நோக்கிற் கஞ்சாது, காலத்தொடு பொருந்தக் காலதாமதமில்லாமல் முடிக்கத் தக்க உபாயமறிவானே தூதனாவான். 6

687. கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை.

வேற்றரசரிடத்துத் தான் செய்யும் முறைமையறிந்து, சமயம் பார்த்து, சென்ற கருமம் சொல்லுதற் கேற்ற இடம் அறிந்து, சொல்லு மெண்ணத்தை முன்னே விசாரித்து, அவ்வாறு சொல்லு வான் தூதரிற் றலைமையான தூதன்.

செய்யுமுறைமை: வேற்றரசன் நிலையுந் தன்னரசன் நிலையுந் தூக்கி அவற்றிற்கேற்பக் காணும் முறைமையும் சொல்லு முறை மையும் என்க. 7

688. தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

தன்னரசன் வார்த்தையை அவன் சொல்லியவாறே வேற்ற ரசற்குச் சென்று சொல்வானது இலக்கணமாவது, பொருள் வாஞ்சை காமவாஞ்சை யில்லாமல் தூயனாதலும், அந்த அரச னுடைய அமைச்சர் தனக்குப் பகையில்லாமல் துணையாந் தன்மையும், துணிவுடைமையும் இம்மூன்றொடு கூடிய மெய்ம்மை யும் என்க. 8

689. விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

தன்னரசன் சொல்லிவிட்ட வார்த்தையை வாய் சோர்ந்து சொல்லாத திண்மையுடையான் (தூதனாவான்). 9

690. இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.

அவ்வார்த்தை தன்னுயிருக்கு இறுதி தருமாயினும் அதற்கஞ்சி யொழியாது, தன்னரசன் சொல்லியவாறே உறுதி பயக்குமாறு வேற்றரசனுக்குச் சொல்லுவானே தூதன். 10

தூது முற்றும்.

---

## 70. மன்னரைச் சேர்ந்தொழுகல்

அஃதாவது, மன்னரைச் சேர்ந்தொழுகும் அமைச்சர்க்குச் சொல்லிய வகைமை.

**691. அகலா தணுகாது தீக்காய்வார் போல்வர்**
**இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.**

இகல் வேந்தரைச் சேர்ந்தொழுகும் அமைச்சர் அவரை மிக நீங்குவதுமன்று, மிக அணுகுவதுமன்று, தீக்காய்வார் போலப் பொதுவாகச் சேர்ந்தொழுகுக.

தீ அகன்று காயிற் பயனில்லை, குளிரும்; அணுகிக் காயிற் சுடும்; ஆகலான் அப்படி மன்னரைச் சேர்ந்தொழுக வென்றது. அணுகில் அவமதித்தானென்று காய்வார், ஆதலிற் பயனில்லை; இடையாக நிற்கவென்றது. 1

[குறிப்பு: தீக்காய்வார் போல்க என்பது அச்சுப்பாடம்.]

**692. மன்னர் விழைப விழையாமை மன்னரான்**
**மன்னிய வாக்கந் தரும்.**

தம்மாற் சேரப்பட்ட மன்னர் விரும்புவனவற்றைத் தாம் விரும்பாதொழிதல், அமைச்சர்க்கு அவரால் நிலைபெற்ற செல்வத்தைத் தரும். 2

**693. போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்**
**தேற்றுதல் யார்க்கு மரிது.**

அமைச்சர் தம்மைக் காக்கக் கருதின் அரிய பிழைகள் தம்மிடத்தின் வாராமற் காக்க; பிழை கண்டரசன் கடுக்குமிடத்துத் தடுத்தல் யாவர்க்கும் அரிதாம். 3

694. செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுகல்
ஆன்ற பெரியா ரகத்து.

*அமைந்த அரசர் அருகு இருந்து அவர் காண ஒருவர்க்கொருவர் காதில் இரகசியம் பேசுதலும், ஒருவருக்கொருவர் நகைத்து விளையாடலும் தவிர்ந்தொழுக.* 4

695. எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்காற் கேட்க மறை.

*அரசன் பிறரொடு இரகசியம் பேசும்போது யாதொரு பொருளையுஞ் செவி கொடுத்துக் கேளார்,* அவன் பின்றொடர்ந்தும் யாதொன்றும் வினவிக் *கேளார்; மற்றப் பொருளை அரசன்தானே அடக்காது சொல்லியக்காற் கேட்க.* 5

696. குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்.

*அரசனது காரியஞ் சொல்லும்போது அவன் மனக்குறிப்பறிந்து, சொல்லுதற் கேற்ற காலத்தையும் நோக்கி, வெறுப்பில்லனவுமாய் வேண்டுவனவுமாய காரியங்களை அவன் விரும்பும் வகை அறிந்து சொல்லுக.*

*அரசன் மனங் காரியத்தின் செல்லும் போது சொல்லுக.*

697. வேட்பன சொல்லி விளைவில வெஞ்ஞான்றும்
கேட்பினுஞ் சொல்லா விடல்.

*பயன் பெரியனவுமாய் அரசன் விரும்புவனவுமாய காரியங்களை அவன் கேட்டிலனாயினுஞ் சொல்லி, எந்நாளும் பயனிலவாயவற்றைத் தானே கேட்டாலுஞ் சொல்லாது விடுக.*

விளைவில வென்பது : பயன் விளைவிலாத வென்க. 7

[குறிப்பு : *விளையில என்பது அச்சுப்பாடம்.*]

698. இளைய ரினமுறைய ரென்றிகழா நின்ற
ஒளியோ டொழுகப் படும்.

*இவர் எமக்கிளையர் என்றும், எமக்கு இன்ன முறையினர் என்றும், அரசரை அவமதியா தவரிடத்து நின்ற* அரசாக்கினையை அறிந்து அதனோடு *பொருந்த நடந்து கொள்க.*

அரசனைத் தெய்வமாகப் பாவித்து ஒழுகுதல் என்க. இளமையு முறையுமாகக் கொள்ளப்படாது என்க.

699. கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்.

அரசன் காரியத்தில் யாம் ஆதிக்கங் கொள்ளப் பெற்றேமென்று கருதி, அவன் விரும்பாத வற்றைச் செய்யார் நிலைபெற்ற அறிவினை யுடையார். 9

[குறிப்பு: கொளப்பட்டேம் என்பது அச்சுப்பாடம்.]

700. பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும்.

அரசனுக்கு யாம் பாரம்பரியம் என்று கருதித் தமக்கியல் பல்லாத வற்றைச் செய்யு முரிமை தனக்குத் தானே கேடு வரும்.

கெழுதகைமை: உரிமையாகச் செய்யுங் காரியம். 10

மன்னரைச் சேர்ந்தொழுகல் முற்றும்.

---

## 71. குறிப்பறிதல்

அஃதாவது, அரசன் கருதிய காரியத்தைச் சொல்லாம லறிதல்.

701. கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்றும்
மாறாநீர் வையக் கணி.

அரசன் குறித்த கருமத்தை அவன் கூறாமலிருப்ப, முகத்தைக் கண்ணை, நோக்கி யறியும் அமைச்சன் எக்காலமும் வற்றாத கடல் சூழ்ந்த உலகத்துள்ளார்க்கு ஓராபரணமாம். 1

702. ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

ஒருவன் மனத்தின்கண் நிகழ்வதனை ஐயப்படாது ஒருதலை யாக உணரவல்லானை மகனே யாயினும் தெய்வத்தோடொப்ப நன்கு மதிக்க. 2

[இக்குறட்கு உரை இல்லை. ஆகலின், பரிமேலழகர் உரை எழுதப்பட்டது.]

703. குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.

அரசன் குறிப்பினை அறிந்ததனாற் பிறர் குறிப்பினையு மறியும் அமைச்சனை, அரசனுறுப்பாகிய படை குடி கூழ் அரண் முதலாகிய வுறுப்பினுள் வேண்டுவனவற்றைக் கொடுத்தாயினுந் தமக்குத் துணையாகக் கொள்க.

உறுப்பு : நாடு, கோட்டை, ஆனை, குதிரை, திரவியங்கள் ; வேண்டுவன கொடுத்தல்.

704. குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
உறுப்போ ரனையரால் வேறு.

ஒருவன் தன் மனத்துக் கருதியதனை அவன் கூறாமல் அறிய வல்லாரோடு, மற்றை அறியமாட்டாதார், உறுப்பால் ஒரு தன்மை யொப்பாராயினும் அறிவினால் ஒவ்வார்; வேறாவர்.

உறுப்பினால் ஒப்பர், அறிவினால் ஒவ்வார் என்க. 4

705. குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினுள்
என்ன பயத்தவோ கண்.

ஒருவனுக்குத் தன் கண்ணாற் பார்த்துப் பிறர் குறிப்பைக் குறித்துக் காண மாட்டாதாகில், உறுப்புக்களுட் சிறப்பாகிய கண்கள் வேறு என்ன பயனைச் செய்வனவோ ?

குறிப்பைக் கண்பார்த்து அறிதலால், மனத்துணர்வைக் கண் மேல் ஏற்றப்பட்டது. 5

706. அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சம்
கடுத்தது காட்டு முகம்.

தன்னை யடுத்த பொருளின் நிறத்தைத் தான் கொண்டு காட்டும் பளிங்கு போல ஒருவனெஞ்சத் தடுத்ததனை முகந்தான் கொண்டு காட்டும்.

நெஞ்சு அங்கு அடுத்தது எனப் பிரித்துக் காண்க. கடுத்தது என்று பொருளுரைப்பார், அது பொருளல்ல என்க. 6

[குறிப்பு : இது பரிமேலழகர் உரையை மறுத்ததாகும்.]

**707. முகத்தின் முதுக்குறைந்த துண்டோ உவப்பினும்
காயினுந் தான்முந் துறும்.**

மனமொருவனை யுவந்து நிற்பினும் காய்ந்து நிற்பினும் அதனை முதற் றுணர்ந்து உவந்து *நின்றும் காய நின்றும் காட்டலால் முகத்தைப் போலப் பொறியுடையது பிறிதோர் உறுப்புண்டோ*, இல்லை.

*முதுக்குறைவு* : *பேரறிவு*. 7

**708. முகநோக்கி நிற்க வமையு மகலுேக்கி
உற்ற துணர்வார்ப் பெறின்.**

*ஒருவன் முகத்தை நோக்கி நிற்க அது போதும்*, *அவன் மனத்தின் குறிப்பை யறிந்து உற்றதனை யுணர்ந்து தீர்ப்பானைப் பெறின்*.

[குறிப்பு : *அகநோக்கி என்பது அச்சுப்பாடம்*.]

**709. பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின்.**

*அரசன் தான் பார்க்கும் பார்வை வேறுபாடறிய வல்ல அமைச்சரைப் பெறின், அவன் மனத்துட் கிடந்த பகைமையையும் கேண்மையையும் கண்ணே சொல்லும்*.

கேண்மை : நட்பு. பிறவேந்தரைக் கண்டறிதலுமாம். 9

**710. நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்கால்
கண்ணல்ல தில்லை பிற.**

*யாம் நுண்ணறிவு உடையம் என்றிருக்கும் அமைச்சர், அரசர் கருத்தினை அளக்குங் கோலாவது, ஆராயுமிடத்து அவர் கண்ணல்லது பிறிது வேறில்லை*.

அரசர் கண்ணைக் கோலாகவும் அரசர் மனக் குறிப்பை நிலமாகவும் அளந் தறிவானமைச்சன் என்க. 10

குறிப்பறிதல் முற்றும்.

---

## 72. அவையறிதல்

*அஃதாவது, அரசனோடு இருந்த கூட்டத்தியல்பினை அறிதல்.*

**711. அவையறிந் தராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்.**

*சொல்லின் வகை தொகையினை அறிந்த தூய்மையினை யுடையார் தாம் ஒன்று சொல்லுங்கால் அப்பொழுது அவையினை ஆராய்ந்து சொல்லுக.*

*சொல்லின் தொகை - பலவகைச் சொற்கள். அவை - கூட்டம்.*

**712. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர்.**

*சொற்களின் நடையினை யறிந்து ஆராய்ந்த நன்மையினை யுடையார் அவைக்கண் ஒன்று சொல்லும் போது அவ்விடத்தினியல்பை அறிந்து சொல்வழு வில்லாமல் நன்கு உணர்ந்து தெளிந்து சொல்லுக.*

இடை தெரிந்து என்பது நடுத்தெரிந்து என்றுமாம். *சொல்லினடையாவது : செஞ்சொல், இலக்கணச் சொல், குறிப்புச் சொல் ; வழுச் சொல், வழுப்பொருள், வழுவறிந்து சொல்லுக என்றது.* 2

**713. அவையறியார் சொல்லின்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉ மில்.**

*இருந்த சபையின் வகையினை யறியாது ஒன்று சொல்லுதலைத் தம்மேற் கொள்வார், அச் சொல்லின் கூறுபாடும் அறியார் ; மற்றப் பல கலையும் அறிந்த வல்லமையும் அவர்க்கு இல்லை.* 3

[குறிப்பு : *சொல்லல் என்பது அச்சுப்பாடம்.*]

**714. ஒளியார்மு னொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.**

*ஒள்ளிய அறிவினை யுடையார் இருந்த சபை நடுவே தாமும் ஒள்ளியராக. ஏனை வெள்ளைகள், அவைக்கண் தாமும் மிகுந்த சுதையினிறத்தை யுடைய வெள்ளறிவினை யுடையராகக் கொள்க,*

ஒள்ளியர் என்பது ஒளியார் எனக் குறைந்து நின்றது. நல்லறிவுஞ் சொல் வன்மையு முடையார் ஒள்ளியா ரென்க. வெளி யார் : புல்லறிவினர். வான் சுதை : மிகுந்த வெள்ளை வண்ணம். அவ்வண்ணங் கொள்க என்றது. அறிவுடையாரிடத்து அறிவு டையாராக; அறிவில்லாரிடத்துத் தாமும் அறிவில்லாராகப் பாராட்டுக என்றது. 4

715. நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு.

ஒருவற்கிது நன்று என்று சிறப்பித்துச் சொல்லப்பட குணங் களெல்லா வற்றுள்ளும் நன்று, தம்மின் மிக்காரிருந்த சபையின் முற்பட்டு ஒன்றினைச் சொல்லாத அடக்கம். 5

716. ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுவார் முன்ன ரிழுக்கு.

நீரோடும் ஆற்றின்கண் நிலைதளர்ந் தமிழ்ந்திய தொக்கும், அகன்ற நூற் பொருள்களை உட்கொண்டு அவற்றின் மெய்ம்மை யுணர வல்லார் சபையின் அறிவில்லான் ஒருவன் சொல்லி சொல்லிழுக்குப்படுதல்.

மோட்சம் பெறுதற் பொருட்டுத் தவவேடங் கொண்டு நன்னெறிக் கண் நின்றவன், நன்நிலை யழிந்து விரதங்கெட்டவனோ டொக்கும் என்றுமாம். ஆறு என்பது நதியென்றும், நன்னெறி யென்றும் கொள்க. 6

717. கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.

பழுது படாமற் சொற்களை ஆராய வல்லார் சபையின் சொல்லில், பல நூல்களையுங் கற்று அவற்றினாகிய பயனை அறிந் தார் கல்வி விளங்கித் தோன்றும். 7

718. உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வன
பாத்தியு ணீர்சொரிந் தற்று.

பிறரறிவித்தல் அன்றிச் சொல்லின் பொருளைத் தாமே யறிய வல்ல அறிவினை யுடையார் சபையின், கற்றவன் ஒன்றைச் சொல் லுதல், வளர்வதொரு பயிர் நின்ற பாத்தியில் நீரினைச் சொரிந்தாற் போலும். 8

[குறிப்பு: வளர்வதன் என்பது அச்சுப்பாடம்.]

719. புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச்சொல்லு வார்.

*நல்லார் இருந்த சபையின் நல்ல பொருளை அவர் மனங்கொளச் சொல்லுதற் குரியார், அவை அறியாத புல்லர் இருந்த அவைக் கண் அவற்றை மறந்துஞ் சொல்லாது ஒழிக.* 9

720. அங்கணத் துக்க வமிர்தற்றாற் றங்கணத்
தல்லார்முற் கோட்டி கொளல்.

*நல்லார் தமக்கின மல்லாதார் சபையின் ஒன்றினைச் சொல்லா தொழிக; சொல்லின் அது, தூயதல்லாத முற்றத்தின் உகுத்த அமிர்தினை ஒக்கும்.*

*அங்கணம் என்பது முற்றமுஞ் சலதாரையும் என்க. தங்கணத்தார் : கற்றவர். கற்றவர் கூடுதல்.* 10

[குறிப்பு : *அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த ரல்லார்முற் கோட்டி கொளல் என்பது அச்சுப்பாடம்.*]

அவையறிதல் முற்றும்.

---

## 73. அவையஞ்சாமை

*அஃதாவது. சபையில் அஞ்சாமற் சொல்லுதல்.*

721. வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்.

கற்றுவல்ல பொருளின் வகை அறிந்து வல்லவரிருந்த சபையில் அச்சத்தால் தாமொன்று சொல்லும்போது *வழுச் சொற்களை நாவினால் மறந்துஞ் சொல்லார், சொல்லின் தொகையெல்லாம் அறிந்த தூய்மையினை யுடையோர்.*

வல்லவை : *கற்று வல்லவர் இருந்த சபை.* 1

722. கற்றாருட் கற்றா ரெனப்படுவார் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார்.

கற்ருர் எல்லாரினும் இவர் மிகவும் நன்கு கற்ருர் என்று உலகத்தால் சொல்லப்படுவார், கற்றவரிருந்த சபையின் அஞ்சாது, தாம் கற்றவற்றை அவர் கொள்ளும் வகை சொல்ல வல்லார்.

கற்றதை யஞ்சாது சொல்வாரை உலகம் புகழும் என்க. 2

723. பகையகத்துச் சாவா ரெளிய ரரியர்
அவையகத் தஞ்சா தவர்.

பகைவரிடை அஞ்சாது புக்குச் சாவது மிகவும் எளிது, (இவர்) உலகத்துப் பலர்; சபையிலஞ்சாது புக்குச் செல்வது மிகவும் அரிது; அப்படிச் சொல்ல வல்லவர் சிலர். 3

724. கற்ருருட் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல்.

பலநூல்களையும் கற்ருர் அவைக்கண் தாம் கற்றவற்றை அவர் மனங் கொள்ளுமாறு சொல்லி அவற்றின் மிக்க பொருள்களை அந்த மிகக் கற்ருரிடத்து அறிந்து கொள்க.

அவை யென்பது, சபை. 4

725. ஆற்றி னளவறிந்து கற்க அவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

சொல்லிலக்கண வழியே அளவை நூல் முதலாய நூல்களை யெல்லாம் அமைச்சர் உட்கொண்டு கற்க, வேற்று வேந்தர் சபையிடை அஞ்சாது அவர் சொல்லிய சொற்குத் தாஞ் சொல்லுதற் பொருட்டு.

அளவறிந்து கற்றல் : அளவை முதலாய நூல்களைக் கற்றல்.

726. வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை யஞ்சு பவர்க்கு.

வன்கண்மையாகிய சவுரியம் இல்லாதவனுக்கு வாள் என்ன செய்ய இருந்தது? அதுபோல, நுண்ணிய அறிவுடையாரிருந்த சபையில் அஞ்சுவார்க்குக் கற்ற நூல் என்ன செய்ய இருந்தது?

வாளொடு பழகுதல் : நூலொடு பழகுதல் என்க. 6

727. பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல்.

*பகைவர் போரிடை அஞ்சும் பேடி கையிற் பிடித்த கூரிய வாளொடு ஒக்கும், சபையிற் சொல்ல அஞ்சுமவன் கற்ற நூல்.*

கூரிய வாளும் பழுதாம், பேடி கையிற்பிடித்த நல்ல நூலும் பழுதாம்; அச்சமுடையவன் கற்றதனுல் என்க. 7

728. பல்லவை கற்றும் பயமிலவே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார்.

*நல்லார் இருந்த சபையில், அச்சத்தால் நல்ல பொருள்களையவர்கட்கு ஏற்கச் சொல்ல மாட்டாதார், பல நூல்களைக் கற்றாராயினும் உலகிற்குப் பயன்படுதல் இல்லை.* 8

[குறிப்பு : *பயமிலரே என்பது அச்சுப்பாடம்.*]

729. கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வார்.

*பல நூல்களைக் கற்றும் அவற்றுப் பயனறிந்திருந்தும், நல்லார் இருந்த சபையினை அஞ்சி அங்ஙனஞ் செல்லாதாரை, உலத்தார் கல்லாதவரினுங் கடையென்று சொல்லுவார்.*

*கற்றறிந்திருந்தும் அஞ்சுதலால் உலகப் பழிப்பு தரும் என்க.* 9

730. உளரெனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.

*அவைக் களத்தைக் கண்டஞ்சித் தான் கற்றவற்றை அவர்க்கேற்கச் சொல்லமாட்டாதார், உயிர் வாழ்கின்றாராயினும், உலகத்தார் எண்ணப்படாமையின் இறந்தாரோடு ஒப்பர்.* 10

அவை யஞ்சாமை முற்றும்.

*அமைச்சியல் முற்றும்.*

---

## அங்கவியல்

*அவையாவன, நாடு, கோட்டை, படை முதலாயின வெனக் கொள்க.*

## 74. நாடு

*அஃதாவது அவ்வரசனால் ஆளப்படும் நாட்டினதியல்பு.*

**731. தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு.**

*குறைவு இல்லாமல் விளைநிலமும், தகுதியுடைய அறவோரும், தாழ்வில்லாத செல்வமுடையோருஞ் சேர்ந்து வாழ்வதே நாடு.*

*அறவோர் : துறந்தோர், அந்தணர் முதலாயினோர். செல்வர்:* வணிகர், உழவர் முதலாயினர். *1*

**732. பெரும்பொருளாற் பெட்டக்க தாக்கி யருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு.**

*அளவிறந்த பொருளுடைமையாற் பிறதேசத்தாராலும் விரும்பத்தக்கதாய்க் கேடில்லாமல் நிறைய விளைவதே நாடு.*

பெட்டகம் : விருப்பமாகுமிடம். பெரும்பொருளாவன : தீவிலுள்ள பொருளும் நாட்டில் உள்ள பொருளும். *அருங் கேடாவன. "விட்டில், கிளி, நாவாய் வேற்று வேந்த ரொட்டிய தன்னர சொழியாப் பெரும் புயல் நட்டம் நாட்டேழ் நளவாயெனலாகும்" என்பதனால் அறிக.* *2*

[குறிப்பு : *பெட்டக்க தாகி என்பது அச்சுப்பாடம்.*]

**733. பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு.**

*பிற நாடு பொறுத்த பாரமெல்லாந் தன்னிடத்தே வரும்போது அவற்றைத் தள்ளாமல் தாங்கி, அதன்மேற் தன் அரசனுக்கு இறைப்பொருள் மிகுதியுங் கொடுப்பதே நாடு.*

*பொறையாவது :* பிற நாட்டுக்கு இடர்வர, அந் நாட்டில் வந்து சேர்தல். *3*

734. உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையும்
சேரா தியைவது நாடு.

*மிக்க பசியும், நீங்காத பிணியும், புறத்து நின்று வந்து இழிவு செய்யும் பகையும் இல்லாமல் இனிது நடப்பதே நாடாவது.*

*உறுபசி : கருப்பு. ஓவாப்பிணி : பனி, குளிர், வெப்பு முதலாயின. செறுபகை : குறுநில மன்னர், கள்வர் முதலாயின; இவை இல்லாமை.* 4

[குறிப்பு : *இயல்வது என்பது அச்சுப்பாடம்.*]

735. பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்
கொல்குறும்பு மில்லது நாடு.

*சங்கேத வகையால் மாறுபட்டுக் கூடுங் கூட்டமும், உடனுறைந்து நின்றே பாழ் செய்யும் உட்பகையும், வேந்தனை யலைக்குங் கொல்வினைக் குறும்பரும் இல்லாததே நாடாவது.*

*சங்கேதம் : சாதி சங்கேத முதலாயின. பாழ் செய்யு முட்பகை யாவன :* அரசனுக்குத் தாயத்தார், ஞாதியர் முதலாயின. வேந்தலைக்குங் *கொல் குறும்பு :* பாளையகாரர், கள்வர் முதலாயின. 5

736. கேடறியா கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை.

*பகைவரால் கருப்பினால் கெடுதலறியாதாய்க் கெட்டாலும் வளமை குன்றாத நாட்டினையே மற்ற நாட்டினுக்கெல்லாம் தலைமை யென்று சொல்லுவர் நூலோர்.* 6

[குறிப்பு : *கேடறியாக் கெட்ட என்பது அச்சுப்பாடம்.*]

737. இருபுனலு மேய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு.

*கீழ்நீர் மேனீரென்னு மிருபுனலும் பொருந்திய மலையும் மலையினின்று வருபுனலும் அழியாத கோட்டையும் நாட்டிற்கு அவயவமாம்.*

இருபுனல் : மாரியிலுண்ட நீரைக் கோடையில் உமிழும் நிலன் முதலாயின. 7

[குறிப்பு : *வாய்ந்த மலையும் என்பது அச்சுப்பாடம்.*]

738. பிணியின்மை செல்வம் விளைவின்ப மேமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.

*நோயின்மையுப் செல்வமும் விளைவும் இன்பமும் காப்பும் என்றிவை ஐந்தினையும் நாட்டிற்கு அழகென்று சொல்வர் நூலோர்.*

இன்பம் : ஐம்புலன்களும் அனுபவிக்கும் இன்பம். ஏமம் : அரசன் நாட்டினைக் காத்தல். 8

739. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.

*தன்னிடத்து வாழ்வார் தேடி வருந்தாமல் அவரிடத்துத் தானே யடையுஞ் செல்வத்தையுடையவற்றை நூலோர் நாடென்று சொல்லுவர்; ஆதலால் தேடி வருந்தச் செல்வம் அடைவிக்கும் நாடுகள் நாடாகா.*

*வளம் என்பது : செல்வம்.* 9

740. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றி
வேந்தமை வில்லாத நாடு.

*மேற் சொல்லிய வளங்கள் எல்லாவற்றானும் நிறைந்ததாயினும் அவற்றாற் பயனுடைத்தன்று, வேந்தன் அமைதியில்லாத நாடு.*

வேந்தன் அமைதி : செங்கோல் முறைமை. 10

நாடு முற்றும்.

---

## 75. அரண்

*அஃதாவது, காடு, மலை, கோட்டை, முதலாயின வரண்.*

741. ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.

*வேற்று வேந்தர் மேற்சென்று போர் செய்வார்க்குந் தம்மைக் காக்கும் பொருளாவது அரண்; தம் மேல் வேற்று வேந்தர் வந்து*

போர் செய்யும் போது அஞ்சித் தம்மைப் போற்றும் பொருட்டுப் புகும்போதும் பொருளாகக் காப்பது அரண்.

இருவகைக் காப்பும் (உடைய) அரண் பொருளாயிற்று என்க. ஆற்றுதல் : போராற்றுதல், 1

742. மணிநீரு மண்ணு மலையு மணிநிழல்
காடு முடைய தரண்.

முத்து, மணி போலும் நிறத்தை யுடைய நீரும், வெள்ளிடை நிலமும், மலையும், குளிர்ந்த நிழலை யுடைய காடும் உடையதே அரணாவது.

அரண் : கோட்டை. 2

743. உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கும்
அமைவரண மென்றுரைக்கும் நூல்.

கோட்டை மதில் உயர்ச்சியும் அகலமும் திண்மையும் சுரங்க மறுத்தற்கு அருமையும் என்று சொல்லப்பட்ட இந் நான்கும் அமைதியுடைய கோட்டையை அரணென்று சொல்லுவர் மனு நூலோர்.

உயர்ச்சியால் ஏணிவைத்து இலக்கைப் பிடித்தற்கு அருமை; அகலத்தினற் * சுருங்கை யறுத்தற் கருமை; திண்மையினல் இடிபடாமை; அருமை அணுகுதற்கு அருமை எனவுங் கொள்க.

"வரிவிற் பொறியும் கருவிரற் கூகையும்
கல்லுமிழ் கவணும் வில்லுமிழ் கணையும்
பாகடு குழிசியும் காய்பொன் னுலையும்
கல்லிடு கூடையும் சொல்லிடு வசியும்
தூண்டிலும் துடக்கும் ஆண்டலை யடுப்பும்
கவையும் கழுவும் புதையம் புழையும்
ஐயவித் துலாமும் கைபே ரூசியும்
சென்றெறி சிரலும் பன்றியும் பணையும்
எழுவும் சீப்பும் மதிலின் பொறியே." என்பதனல் அறிக. 3

[குறிப்பு : நான்கின் என்பதும், அமைவரண் என்பதும் அச்சுப்பாடம்.]

744. சிறுகாப்பிற் பேரிடத் தாகி யுறுபகை
ஊக்க மழிப்ப தரண்.

காக்க வேண்டும் இடஞ் சிறிதாய் அகன்ற இடத்தை யுடைத் தாய்த் தன்னைவந்து முற்றிக்கை செய்த பகைவர் மன வெழுச் சியைக் கெடுப்பதே அரண்.

ஊக்கம் : மன எழுச்சி. 4

745. கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண்.

புறத்தாரிலக்கைப் பிடித்துக் கொள்ளுதற்கு அரிதாய், உட் கொண்ட பலவகை உண்பன தின்பன உடைத்தாய், அகத்தார் புறத்தாரை வெல்லும் போர் நிலைக் கெளிதாய நீர்மையை யுடை யதே அரணுவது. 5

746. எல்லாப் பொருளு முடைத்தா யிடைத்துதவும்
நல்லா ளுடைய தரண்.

அகத்தோர்க்கு வேண்டும் பொருள்களெல்லா முள்ளே யுடைத் தாய்ப் புறத்தார் இலக்கைப் பிடிக்கும் எல்லைக் கண் பிடியா வகை யுதவிக்காக் கும் நல்ல படைத்தலைவனையு முடையதே யரணுவது.

நல்லாள் : மானமும் மறமும் முரணுஞ் சோர்வும் இல்லாப் படைத் தலைவன். 6

[குறிப்பு : இடத்துதவும் என்பது அச்சுப்பாடம்.]

747. முற்றியு முற்று தெறிந்து மறைபடுத்தும்
பற்றற் கரிய தரண்.

அகத்தார் புறம் போகாது புறத்திருந்து வாராது முற்றிக்கை செய்து, முற்றிக்கை யாகாது இலக்கைப் பிடித்துப் போர் செய்தும் சுருங்கை யறுத்துத் திறப்பித்தும் புறத்தோராற் கொள்ளுதற்கு அரியதே அரணுவது. 7

[குறிப்பு : மறைப்படுத்தும் என்பது அச்சுப்பாடம்.]

748. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண்.

வெகுதண்டாக வந்திறங்கிச் சூழ்ந்து முற்றிக்கையைச் செய்து முற்றிக்கைப் பட்டவரையும் முற்றிக்கைப் படாமற் பற்றி யாற்றி யகத்தாரே வெல்வது அரண்,

முற்றிக்கைப் படாமற் பற்றியாற்றுதல் எல்லாப் பொருளு முடைத்தாய் இடைத் துதவு மென்பதனால் அறிக. பற்றியார்: அகத்தாரெனக் கொள்க. 8

**749. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து**
**வீறெய்தி மாண்ட தரண்.**

போர் முகத்துப் பகைவர் தோற்றோட அகத்தார் செய்யும் வினைகளான் வீறு பெற்று மற்றும் பெருமை யுடையதே அரணாவது.

வினை முகத்து வீறெய்தல்: அகத்தார் செய்யும் உபாயங் கட்கு ஏற்ற இடமாக இருத்தல். 9

**750. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி**
**இல்லார்க ணில்லா தரண்.**

மேற் சொல்லிய மாட்சிமை யெல்லாம் உடைத்தாய இடத்தும் வினை செய்தற்கண் மாட்சிமை யில்லாதா ரிடத்து மில்லாதாம் அரண். 10

[குறிப்பு: இல்லார்க ளில்ல தரண் என்பது அச்சுப்பாடம்].

அரண் முற்றும்.

---

## 76. பொருள் செயல் வகை

அஃதாவது, திரவியங்களைத் தேடும் வகை.

**751. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்**
**பொருளல்ல தில்லை பொருள்.**

ஒரு பொருளாக மதிக்கப்படாதாரையும் மதிக்கப் படுவோ ராகச் செய்யவல்ல பொருளை யொழிய ஒருவனுக்குப் பொருளாவது இல்லை.

மதிக்கப்படாதார்: அறிவில்லார், இழிகுலத்தார் முதலாயினர். 1

**752. இல்லாரை யெல்லா ரெள்ளுவர் செல்வரை
எல்லாருஞ் செய்வர் சிறப்பு.**

*எல்லா நன்மையு முடையாராயினும் பொருள் இல்லாரை எல்லாரும் இகழ்ச்சி செய்வர். எல்லாத் தீமையு முடையாராயினும் பொருளுடையோரை எல்லாருஞ் சிறப்புச் செய்வர்.* 2

**753. பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று.**

*பொருளென்று சொல்லப்படும் அவியா விளக்கு தன்னைத் தேடி வைத்தவன் நினைத்த தேசத்துச் சென்று, பகை யென்னும் இருளைக் கெடுக்கும்,* 3

**754. அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.**

*செய்யுந் திறத்தினை யறிந்தரசன் கொடுங்கோல் இலனாக, தீவினைவிட்டு ஈட்டிய பொருள் அவனுக்கு அறத்தையுங் கொடுக்கும், இன்பத்தையுங் கொடுக்கும்.* 4

**755. அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.**

*அரசர் தாம் குடிகளிடத்துச் செய்யும் அருளோடும் குடிகளரசனிடத்துச் செய்யு மன்போடும் கூடி வாராத பொருளீட்டத்தை அரசர் பொருந்தாது கழிய விட்டெறிக.*

*புரளவிடல் : எறிந்து விடல். அப்பொருள் இருக்கில் தன்குடி நாசமாம்.* 5

**756. உறுபொருளு முல்கு பொருளுந்த னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.**

*ஒருவற்குஞ் சுதந்திர மில்லாமல் தானே வந்துற்ற பொருளும், சுங்கமாகிய பொருளும், தன் பகைவரை வென்று திறை கொண்ட பொருளும் அரசனுக்கு உரிய பொருள்கள்.*

*உறுபொருள் : ஞாதியரில்லாமல் இறந்து போனவர் பொருள், மண்ணிற் கிடந்த பொருள். உல்கு பொருள் : ஆயம் வாங்கிய*

பொருள். ஒன்னார்த் தெறு பொருள் : பகைவரை வென்ற பொருள் என்றறிக. 6

757. அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியா லுண்டு.

அன்பென்னுந் தாய் பெற்ற அருளென்னும் பிள்ளை, பொருள் என்னுஞ் செல்வத்தையுடைய செவிலித்தாயால் வளரும்.

ஒருவர்மேல் அன்பு வளர்ந்து அருளினாற் கொடுக்குங் கொடை, செவிலி என்னுஞ் செல்வமாகிய பொருள் உண்டாகில் உண்டாமென்றது. அன்பும் அருளும் இருந்தும் பொருளில்லையாகிற் கொடையில்லை என்க. 7

758. குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை.

தன் கையதாகிய பொருள் உண்டாக ஒரு வினையைத் தொடங்கிச் செய்தல் ஒருவன் மலையின் மேல் ஏறியிருந்து மதயானைப் போரைக் கண்டாலொக்கும்.

மலைமேலேறி, நிலத்து யானைப் போரை யச்ச மில்லாமற் காண்பது போலத் தன் பொருளினால் வினை செய்வாரைக் கொண்டு அச்சமில்லாமற் செய்வித்துக் கொள்வான் என்றது. 8

759. செய்க பொருளைச் செறுநர்ச் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில்.

தொழிற் செய்து பொருளைத் தேடிச் சேர்க்க; பகைவர் செருக்கினை யறுக்கும் ஆயுதம் அதுவாம்; அதனைப் போலக் கூரிய படைக்கலம் பிறிதில்லை.

எஃகு - ஆயுதம்; செறுநர் - பகைவர்; பொருளுடையார்க்குத் தானே பகைவர் அடங்குவர் என்க. 9

760. ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொருள்
ஏனை யிரண்டு மொருங்கு.

ஒள்ளிய பொருளைத் தீதில்லாமல் மிகவுந் தேடிப் படைத்தார்க்கு மற்றை அறனு மின்பமும் ஒருங்கே எளிய பொருளாய் வந்தெய்தும்.

*அறம் பொருள் இன்பமென்னும் மூன்று பொருள்களுள் நடுவே நின்ற பொருளைத் தான் தேடில் இரண்டு பக்கமும் நின்ற அறமும் இன்பமும் என்னும் பொருள்கள் தாமே வருமென்றது.*

பொருள் செயல் வகை முற்றும்.

---

## 77. படை மாட்சி

*அஃதாவது, அரசனுக்குரிய படையின் பெருமை.*

**761. உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை.**

*யானை முதலிய நான்குறுப்பானும் அமைந்து, போரின்கண் ஊறுபடுவதற் கஞ்சாது நின்று பகையை வெல்வதாய படை, அரசன் செல்வங்கள் எல்லாவற்றுள்ளும் தலைமையான செல்வமாம்.* 1

**762. உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது.**

*சேனை சிறிதாய விடத்தும், அரசனுக்குப் போரின்கண் உலைவு வந்த விடத்தும், காயம் படுதற்கு அஞ்சாது நின்று தாங்கும் வன்கண்மை அவனுதீனத்திற் பழைய படைக்கல்லால் அரிது.*

*உலைவிடம் - தோற்குமிடம்; மூலப்படை, கூலிப்படை, நாட்டுப் படை, காட்டுப்படை, துணைப்படை, புதுப்படை யென்னும் அறு வகைப் படையுள்ளும் மூலப்படை யென்னும் பழம்படை வலி யுடைத்து என்றது.* 2

**763. ஒலித்தக்கா லென்னு முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.**

எலியாகிய பகை திரண்டு கடல் போல ஒலித்தால் நாகத்துக்கு என்ன ஏத முண்டாம்? *அந்நாகஞ் சீறியவுடனே எலிப்படை யெல்லாங் கெடும்.*

*வீரரல்லாத பலர் திரண்டு ஆர்த்தால் அதற்கு அஞ்சாத வீரனொருவன் எழுந்த வுடனே தோற்றோடுவர் என்க;* கடலொலித் தாவதென்னை? அவ்வொலி அவ்வெல்லையை விட்டு நீங்காது என்றுமாம். 3

764. அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

போரின் கண் முறிந்தோடுதலின்றிப் பகைவர் கீழறுக்கப் படா தாகித் தொன்று தொட்டு வந்த தறுகண்மையை யுடையதே அரசனுக்குப் படையாவது.

அறை போதல் : கீழறுத்தல். வழிவந்த வன்கண் : பாரம் பரியமாக வந்த சவுரியம். 4

765. கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை.

கூற்றுவன் தானே வெகுண்டு மேல் வந்தாலும், ஓடாமல் அஞ்சாமல் கூடி எதிர் நின்று போர் செய்யும் மனவலியை யுடையதே படையாவது.

ஆற்றல் : மனவலி. 5

766. மறமான மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே யேமம் படைக்கு.

தறுகண்மையும், அபிமானமும், வீரராயினர் சென்ற நன்னெறிக்கட் செல்லுதலும், அரசனால் தேற்றப்படுதலும் என இந் நான்கு குணமுமே படைக்கு அரணாவது.

மாண்டவழி : பிணத்தின் மேல் நடத்தலும், வீரர் எதிர்த்த விடத்து மனத்தெளிவுமாம். " ஏமமே சேமங் காவல் " என்பதனால் அறிக.

767. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து.

மாற்றார் வகுத்துக்கொண்டு தம்மேல் வந்த படையின் போரை விலக்கும் வகுப்பறிந்து வகுத்துக் கொண்டு, பகைவர் தூசிப்படை தம்மேல் வாராமல் தடுத்துத் தாம் அதன்மேற் செல்வதே படையாவது.

தார்தாங்கல் : " தாருங் கொடியுந் தூசியும் முன் படை " என்பதனால் அறிக. படை வகுப்பு : வியூக இலக்கணத் தறிந்து கொள்க, 7

768. அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும்.

*தானை பகைமேல் தான் சென்றடுந் தறுகண்மையும், தானை தன்மேல் வந்தால் பொறுக்கு மாற்றலும் இல்லையாயினும் தன் தோற்றப் பொலிவினானே பெருமை பெறும்.*

*தோற்றப் பொலிவாவன : யானை, குதிரை, சேனை, குடை, கொடி, பல்லியம், காகளம், அலங்காரத் தோற்றப் பொலிவு ; இவை கண்டு பகைவர் அஞ்சுதல்.* 8

769. சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையும்
இல்லாயின் வெல்லும் படை.

*படை தேய்ந்து சிறிதாகலும், நீங்காப் பிணக்கும், வறுமையும் இல்லையாயிற் படை பகைவரை வெல்லும்.*

*சிறுபடை : பகைவர் படைக்குத் தக்க படையல்லாத சிறு படை. செல்லாத் துனி : அரசன்மேல் நீங்காப் பிணக்கு. வறுமை :* சம்பளமில்லாத வறுமை. *இம்மூன்று மில்லாப் படை வெல்லும் என்றவாறு.*

770. நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில்.

*போரின்கண் நிலை பெற்ற வீரர் மிகவுடைத்தே யாயினும்* அரசில்லாப் படை *நில்லாது.*

*அரசரில்லாவழி தானை நில்லாது* என்க. படைத்தலைவரில்லாயி னென்றுமாம். 10

படை மாட்சி முற்றும்.

---

## 78. படைச் செருக்கு

*அஃதாவது, படை* போர் செய்யும் வகை.

771. என்னைமு னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின்ற வர்.

*செருக்களத்தில் அரசனை வெல்லச் சில வீரர் வரும்போது அரசன் முன்னின்ற ஒரு வீரன் கூறுதல் : என்னுடைய அரசன் முன்னே நிற்க வேண்டாம் பகைவரே ; நும்மைப் போற் பலர் வந்தென் [அரசன்] முன்னே நின்று கன்முன்னே நின்றவர்.*

அரசன் முன்னே நிற்க வேண்டாம் ; என்முன்பே நின்று கன்முன்னே நில்லுமின் என்றது. ஐ : அரசன். என் ஐ முன் எனப் பிரித்துக் காண்க. கல் முன்னே நிற்றல் : செருக்களத்நிற் *பட்டவரைச் சிலையாகச் செய்து நிறுத்தல். என் முன்னே நின்று பட்டவர் பலர் என்றது.* 1

**772. கான முயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.**

*கானின்கண் ஓடும் முயலைப் பிழையாமல் எய்த அம்பை ஏந்த லினும், வெள்ளிடை நின்ற யானையை எறிந்து படாமற் பிழைத்த வேலை ஏந்துதல் இனிது.*

*எதிர்த்த வீரனைவிட்டுப் புறங் கொடுத்தானைத் தொடருஞ் சேவகனைப் பார்த்து ஓர் சுத்த வீரன் சொல்லியது.* 2

**773. பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றத னெஃகு.**

*பகைவரிடத்துக் கண்ணோட்டமில்லாமல் வெட்டி வெல்லுந் தறுகண்மையை நூலோர் மிக்க ஆண்டகைமை யென்று சொல்லு வர். அப்பேராண்மை யுடையவர்க்கு ஒரு தாழ்வு வந்தால் அதனைப் பகைவரிடத்துச் செய்யும் உபகாரமாம்; அது, அப் பேராண்மைக்குக் கூர்மையாம்.*

*பேராண்மைக்குத் தாழ்வு வருதல் : எதிர்த்தவன் போர் செய்திளைத்த விடத்து விட்டு விடுதல். ஊராண்மை : உபகாரம். எஃகு : கூர்மை.*

*இலங்கை வேந்தனை யின்றுபோய் நாளைவா என்றல் என்ப தனால் அறிக.* 3

**774. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.**

*கைப்படையாகிய வேலைத் தன்மேல் வந்த களிற்றின் முகத் தின் எறிய அக்களிறு வேலொடு மோடிப் போகப் போக்கி, வரு*

இன்றவன், மேல் வருங் களிற்றுக்கு வேல் நாடும் போது தன் மார்பின் கண் நின்ற வேலைக்கண்டு பறித்து மகிழும்.

போர் மகிழ்ச்சியின் மார்பிற்றைத்த வேல் வருத்த மறியாமை யறிந்து கொள்க. 4

775. விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு.

பகைவர், வெகுண்டு நோக்கியவுடனே வேலைக் கொண்டெறிய, அப்படிச் செய்யாமல் தன்னுடைக்கை யழித்திமைத்துப் பார்த்துப் பின் அப்பகைவர்மேல் எறிந்தானாகில் அவ்வீரர்க்குப் புறங் கொடுத்தலாம்.

இமைப்பளவு பொறுத்தலும் புறங்கொடுத்தலாம் என்றது.

776. விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து.

தனக்குச் சென்ற நாட்களை எடுத்து எண்ணியவற்றுள் விழுமிய காயம் படாத நாள்களை யெல்லாம் பயன்படாது கழிந்த நாள்களுள்ளே வைக்குஞ் சுத்தவீரன்.

பயன்படும் நாள் : காயம் படுநாள் ; பயன் படாநாள் : காயம் படாநாள் என்க. 6

777. சுழலுமி சைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

துறக்கத்துத் தம்மொடு செல்லாது வையத்தைச் சூழ்ந்து நிற்கும் புகழை வேண்டி உயிர் வாழ்தலை வேண்டாத வீரர் கழல் கட்டுதல் அலங்கார நீர்மையுடைத்து.

சுழலுமிசை : உலகிற் சுழலும் புகழ். காரிகை : அழகு, அலங் காரம். கழல் : வீரக் கிண்கிணி. யாப்பு : கட்டுதல். 7

778. உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர்.

போர் பெறின் தம் முயிர்ப் பொருட்டு அஞ்சாது செல்லும் வீரர், தம்மிறைவன் போர் முகத்துச் செல்ல வேண்டாமென்று வெகுண்டு சொல்லினும் அவ்வீரமிகுதி குன்றார். 8

779. இழைத்த திகவாமற் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்.

*"இன்னானைக் கொல்வேன் இன்னது செய்வேன்" என்று சபதம் ஒட்டினது தப்பாமற் போர் புரிவான் சென்று, அச் சபதஞ் செப்புமுன்னே சாவவல்ல வீரரை, அது தப்பியவாறு சொல்லி இகழ்ச்சி செய்தற்குரியார் யாவர்.*

*இகழ்ச்சி : இன்னது செய்யாவிடின் இன்னுறுவேன் எனச் சொல்லி அது தப்பிய விகழ்ச்சி.* 9

[குறிப்பு : *இகவாமைச் சாவாரை என்பது அச்சுப்பாடம்.*]

780. புரந்தார்க ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து.

*தனக்குச் செய்த உதவிகளை நினைந்து ஆண்ட அரசன் கண்ணீர் ஒழுகும்வகை போரிடைச் சாவப் பெறின், அச் சாக்காடு இரந்தாயினுங் கொள்ளுந் தகுதியை யுடைத்து.*

*இரந்து கொள்ளுதல் : வரம் வேண்டுதல்.* 10

[குறிப்பு : *சாகற்பின் என்பது ஒரு அச்சுப்பாடம்.*]

படைச் செருக்கு முற்றும்.

---

## 79. நட்பு

*அஃதாவது, படைபோல அரசனுக்கு உதவி செய்வதாய நட்பு.*

781. செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.

*நட்புப் போலத் துணையாகச் செய்து கொள்ளத் தக்க அரிய பொருள் யாது? நட்புச் செய்து கொண்டால் அந்நட்புப் போலப் பகைவர் செய்யும் வினைக்குத் தடுக்கவரிய காவல் யாது?* 1

782. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

அறிவுடையார் நட்புக்கள் வளர்பிறைபோல் வளர்ந்து நிறைதல்; அறிவில்லார் நட்புத் தேய்பிறை போல் தேய்ந்து விடுதல்; நிறைமதி முன்னீர வெனவும் நிறைமதிப் பின்னீர வெனவுங் காண்க. 2

783. நவிறொறும் நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

நற்குணமுடைய மக்கள் தம்முட் செய்த நட்பு, பயிலுந் தோறும் பயிலுந்தோறும் இன்பஞ் செய்தல், நூலைக் கற்குந் தோறுங் கற்குந்தோறும் இன்பம் பெருகுதல் போலாம்.

தொடர்பு : நட்பு. நூல் பயிலுந்தோறும் அறிவு பெருகுதல் போல இன்பம் பெருகும். 3

784. நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

ஒருவனோடு ஒருவன் நட்புச் செய்தல், நகைத்து விளையாடற் பொருட்டன்று; அவற்குப் பொருந்தாத செய்கை யுண்டாய விடத்து இடித்துச் சொல்லித் தவிர்த்தற் பொருட்டு.

பொருந்தாத செய்கை : பழியும் பாவமும் வரும் செய்கை. மேற்செல்லுதல் : வரு முன்னர்ச் சென்றிடித்தல். 4

785. புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்.

ஒருவனோடு ஒருவன் நட்பாதற்குப் புணர்ச்சியும் பழகுதலும் ஆகிய காரணம் வேண்டுவதில்லை; இருவர்க்கும் ஒத்த மனமே நட்பாம் முறைமையைத் தரும்.

புணர்ச்சி : உறவாடுதல். பழகுதல் : பலகாலுங் கண்டு பழகுதல். ஒத்த உணர்ச்சி : ஒருவர் மனம்போல் இருவர் மனமும் இருத்தல்; அது கோச்சோழனும் பிசிராந்தையாரும் போலிருத்தல். 5

786. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பதே நட்பு.

கண்டவழி முகமலர்ச்சியாகிய நட்பு நட்புஅல்ல; நெஞ்சின் கண் அகமலர்ச்சியாவதே நட்பு. 6

[குறிப்பு : அகநக நட்பது அச்சுப்பாடம்.]

787. **அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்கண்
அல்ல லுழப்பதா நட்பு.**

*கேட்டினைத் தரும் நெறியிற் செல்லும்போது செல்லாமல் விலக்கி, நன்னெறிகளிற் செல்லாத போது நன்னெறியிற் செலுத்தி, ஊழ்வினைப் பயனாற் கேடு வந்த விடத்து அது விலக்கப் படாமையின் அத்துன்பத்தை உடனிருந் தனுபவிப்பதே ஒருவனுக் கொருவன் நட்பு.* 7

788. **உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதா நட்பு.**

*அவையிடை ஆடை குலைந்தவன் கை விரைந்து உதவி செய்வதுபோல, ஒருவனுக்கு இடுக்கண் வந்தவிடத்துடனே சென்று உதவி செய்வதாம் நட்பு.*

*உடுக்கை : புடவை.* 8

789. **நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
ஒல்லும்வா யூன்று நிலை.**

*நட்பிற் கரசிருக்கை யாதென வினவின், எஞ்ஞான்றும் மாறுபாடின்றி, இயலும் எல்லை யெல்லாம் அறம் பொருள் இன்பங்களில் தளராமல் தாங்குந் திண்மை.*

*விற்றிருக்கை : வீற்றிருக்கும் ஆசனம்.* 9

790. **இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னும் நட்பு.**

*இவர் நமக்கித்துணை யன்பினர்; யாமிவர்க்கின்ன தன்மையம், என்று ஒருவரை யொருவர் வியந்து சொல்லினும் நட்பு அற்பமாய்த் தோன்றும்.*

*தாம், அவர் என்னும் வேற்றுமையின்றி இருப்பதல்லது நட்பினைப் பாராட்டுதல், மிகுந்த நட்பன்று; காரிய நட்பு : அது புல்லிய நட்பு என்றது.* 10

**நட்பு முற்றும்.**

## 80. நட்பாராய்தல்

*அஃதாவது, மேற்சொல்லிய நட்பினை நட்புச் செய்தற்கு ஆராய்தல்.*

**791. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவற்கு.**

*ஒருவன் குணங் குறியை நாடாமல் நட்புச் செய்வது போல் கேடு தருவது பிறிதில்லை; குணங் குறியை நாடி நட்புச் செய்த பின் அந்த நட்பினை விடப்படாது, நட்பினை யாள்பவற்கு.*

*நட்ட நட்பினை விடப்படாதாகலான் ஆராய்ந்து நட்புச் செய்க வென்றது.* 1

[குறிப்பு : *நட்பாள்பவர்க்கு என்பது அச்சுப்பாடம்.*]

**792. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.**

*குணமும் செய்கையும் நல்லவனென்பது பல நாள் ஆராய்ந்தும், பல காரியங்களில் ஆராய்ந்தும், ஒருவனோ டொருவன் கொள்ளாத நட்பு, முடிவின்கண் தான் சாதற்கு ஏதுவாகிய துன்பத்தைத் தரும்.* 2

**793. குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்ற
இனனு மறிந்தியாக்க நட்பு.**

*ஒருவன் குணத்தினையும் குடிப்பிறப்பினையும் குற்றத்தினையும் குறைவற்ற சுற்றத்தினையும் ஆராய்ந்து அவனோடு நட்புச் செய்க.*

**794. குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளவேண்டு நட்பு.**

*உயர்ந்த குடியிற் பிறந்து, தன்னிடத்து உலகத்தார் சொல்லிப் பழிக்கும் பழிக்கு நாணத்தை யுடையானைச் சில பொருள் கொடுத்தாகிலும் நட்புக்கொள்ள வேண்டும்.* 4

[குறிப்பு : *கொளல் வேண்டும் என்பது அச்சுப்பாடம்.*]

795. அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

தாமுலக வழக்கல்லது செய்யக் கருதிய வழி, கிலேசம் பிறக்கும் வகை சொல்லி விலக்கிப் பின்னுஞ் செய்யாவகை யிடித்துக் காட்டி அப்படிச் செய்விக்கும் வழக்கறிய வல்லவரை ஆராய்ந்து நட்புக் கொள்க.

796. கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதாங் கோல்.

ஒருவனுக்குச் செல்வமன்றிச் கேடு வந்தவிடத்து ஓர் உறுதி யுண்டாம்; அஃது யாதெனில் தன் நாடாராகிய நிலத்தை நீட்டி அளப்பதாகிய அறிவு என்னும் கோல்.

செல்வக் காலத்தில் நட்பும் நட்பல்லாரும் வேற்றுமை தெரியாது; வறுமைக் காலத்தில் நட்பும் நட்பல்லாரும் வேற்றுமை தெரியும். 6

[குறிப்பு: அளப்பதோர் கோல் என்பது அச்சுப்பாடம்.]

797. ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

ஒருவனுக்கு ஆதாயம் என்று சொல்லப்படுவது, அறிவில்லாரோடு நட்புக் கொண்டானாகில் அதனை யொழித்து அவனோடு நீங்கி விடல். 7

798. உள்ளற்க உள்ளஞ் சிறுகுப கொள்ளற்க
அல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.

தம் மனவெழுச்சி சுருங்குதற்குக் காரணமாகிய வினைகளைச் செய்ய நினையா தொழிக; அது போலத் தமக்கு ஒரு துன்பம் வந்தவிடத்துக் கைவிடுவார் நட்பினைக் கொள்ளா தொழிக.

ஆற்றறுத்தல்: தொடர்பு விடுதல். 8

[குறிப்பு: சிறுகுவ என்பது அச்சுப்பாடம்.]

799. கெடுங்காலை கைவிடுவான் கேண்மை யடுங்காலை
உள்ளினு முள்ளஞ் சுடும்.

ஒருவன் கெடுங்காலத்து அவனைக் கைவிட்டு நீங்கினான், முன் அவனோடு செய்த நட்பை, தன்னைக் கூற்றுவன் வந்தடுங் காலத்து நினைப்பினும் உள்ளத்தைச் சுடும்.

அடுங்காலை : கூற்றுவன் வந்து பிடிக்குங் காலத்துப் பிராண அவத்தைக் காலம் என்றது. 9

[குறிப்பு : கைவிடுவார், என்பது அச்சுப்பாடம்]

800. மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்தும்
ஒருவுக வொப்பிலார் நட்பு.

உலகத்தோ டொத்துக் குற்றமற்றார் நட்பினையே மருவுக; உலகத்தோ டொத்த இயல்பில்லாதார் நட்பினை யறியாது கொண்டாராயின், யாதொன்றானுங் கொடுத்து, நட்பினை விடுக. 10

நட்பாராய்தல் முற்றும்.

---

## 81. பழைமை

அஃதாவது, பழைமையாய்ப் பாரம்பரியமாக வரும் நட்பு. நட்பிற் பிழை பொறுத்த லென்க.

801. பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

பழைமை யென்று சொல்லப்படுவது யாது என்று வினவின், அது பழைமையோர் உரிமையாற் செய்வனவற்றைச் சிறிதும் சிதையாது அவற்றிற்கு உடன்படும் நட்பு.

கிழமை : உரிமை ; கீழ்ந்திடல் : சிதைத்தல் ; நட்பு : பழைய நட்பு. 1

802. நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன்.

நட்பிற்கு அவயவமாவன நட்டார் உரிமையாற் செய்வன வாதல்; அவ் வுரிமைக்கு இனியராதல் அமைந்தார்க்கு முறைமை.

கெழுதகைமை : உரிமை ; உப்பாதல் : இனிமையாதல். 2

**803. பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை**
**செய்தாங் கமையாக் கடை.**

*பாரம்பரியமாக வந்த நட்பென்ன பயனைச் செய்யும்? தாம் உடன் படாதவேனும் நட்டாருரிமையாற் செய்வனவற்றிற்குத் தாமும் உடன் படாவிடத்து.*

*கெழுதகைமை : உரிமை. பழகிய நட்பினாற் பயனில்லை அவர் செய்த காரியத்துக்கு உடன்படாராயின் என்க. எவன் செய்யும் என்பது, என்ன செய்யும் எனக் கொள்க.* 3

**804. விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகைமை**
**கேளாது நட்டார் செயின்.**

*யாதானுமோர் கருமத்தை நட்டார் உரிமையாற் கேளாது செய்தாராயின், தாம் அவரோடு* பொருந்திய தன்மை பற்றி *விரும்பி யிருப்பர்.*

*விழை தகை : பொருந்திய தகை. கெழுதகை : உரிய தகை.*

[குறிப்பு : *கெழுதகையால் என்பது அச்சுப்பாடம்.*]

**805. பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க**
**நோதக்க நட்டார் செயின்.**

*தாம் வெறுக்கத் தக்கவற்றை நட்டார் செய்தாராயின், அதற்குக் காரணம் ஒன்றிற் பேதைமை யென்றுதல், ஒன்றில் மிக்க உரிமை யென்றுதல் கொள்க.*

*பெருங்கிழமை : பெரிய உரிமை. பேதைமை : அறியாமை.* 5

**806. எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துத்**
**தொல்லைக்க ணின்றார் தொடர்பு.**

*பழைய நட்பென்னும் எல்லைக் கண்ணே நின்றவர் நட்பினை விட்டு நீங்கார்; பொருட்கேடு போர்க்கேடு செய்தவிடத்துப் பழமையாக நின்றவர் தொடர்பினை.*

*தொலை விடம் : பொருட் சேதம், போர்ச் சேதம் என்க. தொல்லை : பழமை. தொடர்பு : நட்பு.* 6

[குறிப்பு : *தொலை விடத்தும் என்பது அச்சப்பாடம்.*]

**807. அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்.**

*நட்டார் தமக்கு அழிவு வந்தவற்றைச் செய்தாராயினும், அவரிடத் தன்பினை ஒழியார், அன்புடனே பழமையாக வந்த நட்பினையுடையார்.* 7

**808. கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்கல் நட்டார் செயின்.**

*நட்டார் செய்த பிழையைத் தாமாகவே யன்றிப் பிறர் சொல்லுங் கேளாத உரிமையறிய வல்லார்க்கு, நட்டார் பிழை செய்ய வல்லாராயின் அது பயன்பட்ட நாளாம்.*

*நாளிழுக்கல் என்பது : நாள் இழுக்கல்ல, பயன்பட்ட நாளென்க. கேளிழுக்குச் செய்வன : பொருள் வெளவல், அஞ்சாமை, பணியாமை முதலாயின. கெழுதகைமை வல்லார் : உரிமை வல்லார் என்க.* 8

[குறிப்பு : *நாளிழுக்கம் என்பது அச்சுப்பாடம்.*]

**809. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு.**

*உரிமையறாது பழையதாய் வந்த நட்பினை யுடையாரது நட்பினை, அவர் பிழை நோக்கி விடுதல் செய்யாதாரை உலகம் நட்புக் குறித்து விரும்பும்.* 9

**810. விழையார் விழையப் படுப பழையார்கண்
பண்பிற் றலைப்பிரியா தார்.**

*பழைய நட்டார் பிழை செய்தாராயினும் அவரிடத்துத் தம் பண்பு நீங்காதார் பகைவராலும் விரும்பப்படுவர்.*

*பண்பிற் றலைப்பிரியாதாரை, விழையாத பகைவரும் விழைவர் என்க. விழைதல் : பொருந்துதல்.* 10

பழைமை முற்றும்.

---

## 82. தீ நட்பு

அஃதாவது, பொறுக்கப் படாத குற்றமுடைய பொல்லாதவரொடு நட்பு ஆகாதென்று கூறுதல்.

**811. பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை**
**பெருகலிற் குன்ற லினிது.**

காதல் மிகுதியாற் பருகுவார் போன்றார் ஆயினும், தீக்குண முடையார் நட்பு வளர்தலின் தேய்தல் நன்று.

பருகுதல் : குடித்தல். 1

**812. உறினட் டறிவதொரூஉ மொப்பிலார் கேண்மை**
**பெறினு மிழப்பினு மென்.**

தமக்குப் பயனுள்ளவழி நட்புச் செய்தும், பயனில்லாவழி நட்பொழிந்தும், திரியும் ஒப்பில்லார் நட்பினைப் பெற்றால் அவரால் பெறுவது யாது, அவர் நட்பினை விட்டால் இழப்பது யாது.

ஒப்பில்லார் : பயன் பெற்றாலும் பயன் பெறாவிடினும் ஒத்திருத்தல் இல்லாதவர். 2

**813. உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது**
**கொள்வாருங் கள்வரு நேர்.**

தமக்கு நட்பினால் வரும் பயன் அளவு சீர்தூக்கிப் பார்க்கும் நட்பும், கொடுப்பாரைப் பாராது விலையைப் பார்க்கும் வேசியும், பிறரை வஞ்சித்துக் களவு செய்யுங் கள்வரும் மூவருந் தம்முள் ஒப்பர். 3

**814. அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்**
**தமரிற் றனிமை தலை.**

முன் சுமந்து கொண்டு போய்ச் செருக்களங் கண்டவுடனே உதறி வீழ்த்தோடும் கல்வியில்லாப் புரவி போல்வார் தமராதலில் தனியாதல் நன்று.

தமராதல் : நட்பாதல். கல்லாமா : மல்ல கதி, மயூர கதி, வானர கதி, சரகதி என்னும் பஞ்சகதியும்(?) பதினெட்டுச் சாரிகையும்போர் முக வலியும் அறியாத லண்டப்(?) புரவி ; அது போல ஒரு துன்பம் வந்த விடத்துச் சண்டைப்பட்டுக் கைவிடுவார் நட்பு.

815. செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலி னெய்தாமை நன்று.

*நட்புச் செய்து வைத்தாலும் தமக்கு அரணாகாத கீழ்மக்கள் நட்பு ஒருவற்கு உண்டாதலின் இல்லையாதல் நன்று.*

*ஏமம் : அரண் ; அரணாவது தம்மைக் காக்கும் அரண் என அறிக.* 5

816. பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையார்
ஏதின்மை கோடி யுறும்.

*அறிவில்லாதாருடன் பெரிதாகக் கலந்த நட்பினும் அறிவுடையார் பகை எண், கோடி மடங்கு நன்று.* 6

817. நகைவகைய ராகிய நட்பிற் பகைவரால்
பத்தடுத்த கோடி யுறும்.

*நகைவகைக்கு ஏதுவானவர் நட்பின் வருங்கேடு, பகைவர் செய்யுங் கேட்டிலும் பத்துக்கோடி மடங்கு வரும்.*

*நகைவகை நட்பு : விடரும், தூர்த்தரும், காமந் தூதரும் முதலாயினாரென்க. நகைவகை நட்பு முன் இன்பம் போல இருந்து பின் துன்பம் விளைக்கும் ; பகைவர் முன் துன்பம் போல இருந்து பகை தணியின் இன்பம் விளைக்கும் எனக் கொள்க.* 7

818. ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

*தம்மால் முடியுங் கருமத்தை முடியாதாகச் செய்வார் நட்பினை அவரைக் கண்டாற் சொல்லாதே சோர விடுக.*

*சோர விடுதல் : மெல்லென விடுதல்.* 8

819. கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

*செய்யுங் காரியம் வேறு, சொல்லுஞ் சொல் வேறு பட்டார் நட்பு, நனவின் கண்ணன்றிக் கனவின் கண்ணும் காணலாகாது.* 9

820. எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு.

*மனையின் வந்து பழகிப் பலருங் கூடிய மன்றிற் பழிப்பார் தொடர்பினைச் சிறிதாயினுங் கொள்ளாது பரிகரித்து விடுக.*

*மனைக்கட் கெழுமலும் மன்றிற் பழித்தலும் தீதாகலின் சிறிதாயினு நட்பாகாது என்றது.* 10

தீ நட்பு முற்றும்.

---

## 83. கூடா நட்பு

*அஃதாவது, பகையால் அக நட்பு கூடாமல் முக நட்புப் பாவித்துச் சதி செய்தற்குக் கூடிய நட்பு; அது கூடா நட்பென்று பெயர்.*

**821. சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.**

*நட்புக் கூடாதிருந்தே தமக்கு வாய்க்கும் இடம் கூடுமளவும் நட்புக் கூடினவர் போல ஒழுகுவார் நட்பு, சம்மட்டி எடுத்தடித்தற்குப் பட்டடைக்குறடாம்.*

*பகைவர் நட்புச் சம்மட்டியும்* அவர் வாய்க்கும் இடம் பட்டடைக் குறடும். *நேராம் - அதற்கு ஒப்பாம். நிரந்தவர் : பகைவர் ;* 1

**822. இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.**

*தமக்கு உற்றார் போன்று உற்றாரல்லாதார் நட்பு அவர்க்கு வாய்க்குமிடம் பெற்றால்* சோரக் கணவனோடு கூடிய *மகளிர் மனம் போல வேறுபடும்.*

சோரக் கணவனோடு கூடிய மகளிர் கணவனைக் கொல்ல நினைக்கு மனமாமென்க. வேறுபடு மனம் என்றதனாற் சோரஞ் செய்யும் மகளிர் என்க. 2

**823. பலநல்ல கற்றக் கடைத்து மனநல்லர்
ஆகுதன் மாணார்க் கரிது.**

*நல்லன பல நூல்களைக் கற்றவிடத்தும் அதனால் மனந்திருந்தி நட்பாதல் பகைவர்க்கு இல்லை,*

உள்ளே பகையுடையவரை, நல்ல நூல்களைக் கற்றிருந்தாலும் நட்பென்று கொள்ளற்க என்றது. மாணார் : பகைவர். 3

[குறிப்பு : நல்லராகுதல் என்பது அச்சுப்பாடம்.]

824. முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும்.

கண்டபோது முகமலர்ந்து இனியவாக நகைத்தாலும் மனத்திற் பகை வைத்திருக்கும் வஞ்சரை அஞ்சப்படும். 4

825. மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று.

மனத்தால் தம்மொடு மேவாதாரை யாதொரு கருமத்தினும் சொல்லினாற் றெளிதல் நீதியன்று. 5

826. நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொல்
ஒல்லை யுணரப் படும்.

நட்பானவரைப் போல நன்மை பயக்குஞ் சொற்களைச் சொன்னாராயினும், பகைவர் சொற்களை அவை நன்மை பயவாவென்று உடனே மனதிற் கருதவேண்டும். 6

827. சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான்.

வில் வணக்கம் எதிர்ந்தவர்க்குத் தீங்கு செய்தல் திண்ணமாதலாற் சொல் வணக்கம் ஒன்னிடத்து வணக்கமாகக் கொள்ள வேண்டாம். 7

828. தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னார்
அழுதகண் ணீரு மனைத்து.

தொழுத கையகத்தும் படைக்கலம் மறைந்திருக்கும்; அவ்வொன்னார் அழுத கண்ணீரும் அவ்வாறேயாம், பகைவர் குறிப்பறிய வல்லார்க்கு.

தொழுதும் அழுதும் பகையை மறைத்து வெல்வர். 8

829. மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று.

புறத்துப் பகை தோன்றாமல் தொழுது வணங்கி மிகச் சிறப்புச் செய்து மனத்தின்கண் தம்மை எப்போது வெல்வோம் என்று இகழும் பகைவரை அவ்வாறு மகிழச் செய்து மனத்தின் அவர் நட்புச்சாம் வண்ணம் பொருந்தும் பான்மைத்தரம் அரசர் நீதி.

நட்பின் உட் சாப்புல்லற் பாற்று எனப் பிரித்துக் காண்க. 9

830. பகைநட்பாங் காலம் வருங்கால் முகநட்
டகநட் பொரீஇ விடல்.

பகைவர் தமக்கு நட்பாகுங் காலம் வந்தாலும், முகத்தால் நட்புச் செய்து அகத்தால் நட்பினை ஒழித்துப் பின் முக நட்பையும் ஒழித்து விடுக. 10

கூடா நட்பு முற்றும்.

---

## 84. பேதைமை

அஃதாவது, யாதும் அறியாமை.

831. பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல்.

பேதைமை யென்று சொல்லப்படுங் குற்றம் எல்லாக் குற்றத்தினுமிக்க குற்றம்; அது யாதென்று வினவில், தனக்குக் கேடு வருவனவற்றைக் கைக் கொண்டு செல்வம் வருவனவற்றைக் கை விடுதல்.

கேடு வருவன : பாவம், பழி, அவகீர்த்தி முதலாயின. செல்வம் வருவன : புண்ணியம், புகழ் முதலாயின. 1

832. பேதைமை யுள்ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்.

ஒருவனுக்குப் பேதைமை யெல்லாவற்றுள்ளும் பேதைமை யாவது, தனக்காகாத ஒழுக்கத்தின்கட் காதன்மை செய்தல்.

காதன்மை : ஆசை. கையல்லது : ஒழுக்க மல்லாதது. 2

833. நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.

நாண வேண்டுவனவற்றிற்கு நாண மில்லாமையும், நாட வேண்டுவனவற்றிற்கு நாடுதலில்லாமையும், யாவருந் தன்னிடத்து அன்பில்லாமைக்கு ஏதுவாகிய செயலும், பேண வேண்டுவனவற்றைப் பேணுதலில்லாமையும் பேதையது தொழிலாம்.

நாண வேண்டுவன : பாவச் செயல். நாடவேண்டுவன : புண்ணியச் செயல். நார் : அன்பு. பேண வேண்டுவன : குடிப்பிறப்பு முதலாயின. இவை பேதைக்கு இல்லை என்றது. 3

834. ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தாமடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

மனம் வாக்குக் காயங்கள் அடங்குதற் கேதுவாய நூல்களை ஓதியும், அவ்வடக்கத்தான் வரும் பயனை உணர்ந்தும், அதனைப் பிறர்க்கு உரைத்தும் தாமடங்காத பேதையாரைப் போலப் பேதையார் இல்லை.

ஓதாதவர் அடங்காமையிற் குற்றமில்லை. ஓதினவர் அடங்காராயின் குற்றத்தின் மிகுந்த குற்றம் என்றது. 4

[குறிப்பு : தானடங்கா என்பது அச்சுப்பாடம்.]

835. ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையும்
தான்புக் கழுந்து மளறு.

ஒரு பிறப்பினுள்ளே செய்துகொள்ள வல்லனும் பேதை, எழு பிறப்புந் தான் புக்கு அழுந்தும் நரகமெல்லாம்.

எல்லாப் பிறப்பும் எழுபிறப்பாயடங்கு மெனக் கொள்க. இப் போது பிறந்த ஒரு பிறப்பிலே மேல்வரும் பிறப்பெல்லாம் அழுந்தும் நரகத்தைத் தேடிக்கொள்வான். 5

836. பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.

செய்யுந் தொழிலின் முறைமை யறியாத பேதை ஒரு கருமத்தை மேற் கொள்ளுவானாயின் அது பலியாது பொய்படும்; தானும் இகழ்ச்சியாகிய பூணைப் புனையும்.

ஒன்றோ என்பது இடைச்சொல். 6

837. ஏதிலா ரார்த் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை.

*பேதை ஆயினன் ஊழ்வினைப் பயனாற் பெருஞ் செல்வம் பெற்ற விடத்துப் பிறர் எல்லா மனுபவிப்பத் தமராயினர் பசித் திருப்பர்.*

*ஏதிலார் : அந்நியர். ஆர்தல் : உண்ணல்.* 7

838. மைய லொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின்.

*பேதையாயினன் கையில் ஒருடைமை பெற்றானாயின் அவன் மயங்குதல், முன்னே பித்தேறினன் மயக்கத்தின் மேலே கள்ளுண்ட மயக்கமுங் கூடினாற் போலும்.* 8

839. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்.

*பெரிதும் இனிது பேதையாயினர் நட்பு, பிரிவின்கட் பீழை தராது ஆதலான் பேதையார் நட்பு இனிது.* 9

840. கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்.

*அறிவுடைய பெரியோர் கூட்டத்தின்கட் பேதையாயினன் புகுந்து இருத்தல், தூயவல்ல மிதித்த காலைக் கழுவாமற் றூய்ய பட்டு மெத்தைமேல் வைத்தாற் போலும்.* 10

பேதைமை முற்றும்.

---

## 85. புல்லறி வாண்மை

*அஃதாவது, தான் சிற்றறிவினனாக இருந்துந் தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் சொல்லும் உறுதிச் சொற்களைக் கொள்ளாது அறிந்தவனைப்போல் மறுத்தல். புல்லிய அறிவினை ஆளுதல் : புல்லறிவாண்மை என்க.*

841. அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
இன்மையா வையா துலகு.

*ஒருவனுக்கு இல்லாமை பலவற்றுள்ளும் இல்லாமையாவது அறிவில்லாமை; மற்றப் பொருளில்லாமையோ வெனின் அதனை இல்லாமையாகக் கொள்ளார் உலகத்தார்.* 1

**842. அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாதும்**
**இல்லை பெறுவான் றவம்.**

*அறிவில்லான் ஒருவனுக்கு மனமுவந்து கொடுத்தல், அதற்குக் காரணம் வேறொன்றுமில்லை, பெறுகின்றவன் செய்த தவப் பலம்.* 2

**843. அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை**
**செறுவார்க்குஞ் செய்த லரிது.**

*நல்லறிவில்லாதவர் தாமே தம்மை வருத்தும்; இது பகைவர்க்குஞ் செய்தல் அரிது.*

*தாந் தம்மைப் பீழிக்கும் பீழை :* இம்மையில் அடாத காரியங்களைச் செய்து வருத்தப்படுவதன்றி மறுமையிலும் நரகத்தில் *அழுந்துவர் என்று கொள்க.* 3

**844. வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை**
**உடையம்யா மென்னுஞ் செருக்கு.**

*புல்லறிவுடைமையென்று சொல்லப்படுவது யாதென்று வினவில், அது தம்மைத் தாமே நல்லறிவு உடையம் என நன்கு மிதித்து மயங்கும் மயக்கம்.*

*வெண்மை : வெள்ளறிவு.* 4

**845. கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற**
**வல்லதூஉ மையந் தரும்.**

*புல்லறிவாளர் தாம் கல்லாத நூல்களையுங் கற்றாராகத் தாம் மேற்கொண்டு ஒழுகுதல் கசடறக் கற்றதொரு நூல் உண்டாயின் அதன் கண்ணும் பிறர்க்கு ஐயத்தை விளைவிக்கும்.* 5

**846. அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயின்**
**குற்ற மறையா வழி.**

புல்லறிவாளர் தம்மிடத்தில் இல்லாமையை மறைத்தலோ மறைப்பாது. தன்னிடத்து அறிவில்லை என்னுங் குற்றத்தை மறையாவிடத்து. 6

847. அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

பெறுதற்கரிய உபதேசப் பொருளைப் பெற்றாலும் உட்கொள்ளாது போக்கும் புல்லறிவாளன் அவ்வுறுதி யறியாமையால் தானே தனக்கு வருத்தத்தைச் செய்து கொள்ளும்.

அருமறை : அரிய மந்திர முதலாயின; சோர்தல் : கைவிடுதல்; பெருமிறை : பெரிய வருத்தம் என்று அறிக. 7

848. ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.

புல்லறிவாளன் தனக்கு உறுதியாய காரியங்களை அறிவுடையார் சொல்லவுஞ் செய்யான்; அதுவன்றித் தானாகவுமிவை செய்வன என்று அறியான்; அவன் அவ்வுயிர் யாக்கை நீங்கிப் போமளவும் நிலத்திற்குப் பொறுத்தற்கு அரியதொரு நோயாம்.

புல்லறிவாளனைச் சுமத்தல் நிலத்திற்கு நோய் என்றது. 8

849. காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு.

தன்னை நன்கு மதித்தற்குப் புல்லறிவாளன் மெய்யுணர்தல் முதலாகிய சாத்திரப் பொருள்களைக் காணாதவனுக்குத் தான்றான் காணாதவன் கண்டதுபோலச் சொல்லிக் காட்டுவன், அதனைக் கேட்டவன் காணாதவன் அவன் கண்டானுந் தான் கண்ணுற் கண்டது போல்.

இருவரும் புல்லறிவாண்மையாற், “குருடுங் குருடுங் குருட்டாட்ட மாடிக், குருடுங் குருடுங் குழிவிழு மாறே” என்றது போலக் கொள்க. இதனுக்கு இன்னும் பொருள் வேறு கூறுவாரும் உளர். 9

850. உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.

உயர்ந்தோர் பலரும் உண்டு என்பதோர் பொருளைத் தன் புல்லறிவாண்மையால் இல்லை யென்று சொல்லுவான் மனித

*என்று கருதப் படான்; வையத்துக் காணப் படுவதோர் பேய் என்று சொல்லி வைக்கப்படும்.* 10

புல்லறிவாண்மை முற்றும்.

---

## 86. இகல்

*அஃதாவது, இருவர் தம்முட் பொருது வலி தொலைதற் கேதுவாகிய மாறுபாடு.*

**851. இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும்**
**பண்பின்மை பாரிக்கு நோய்.**

*எல்லா வுயிர்க்கும் பிறவுயிரோடு கூடாமற் பகைப்படுந் தீக் குணத்தை விளைக்குங் குற்றம் இகல் என்று சொல்லுவர் நூலோர்.*

*பகல்: ஒன்றோடொன்று கூடாமற் பகைப்படுவது.* இகல் பண்பில்லாமற் சுமக்கு நோய் என்க. 1

**852. பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி**
**இன்னாசெய் யாமை தலை.**

*தம்மொடு கூடாமையைக் கருதியொருவன் வெறுப்பன செய்தானாயினும் அவனொடு மாறுபடுதல் குறித்து அவனுக்குப் பொல்லாதவற்றைச் செய்யாமல் இருப்பது உயர்ந்தது.* 2

**853. இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்**
**தாவில் விளக்கந் தரும்.**

*மாறுபாடென்று சொல்லப் படுந் துன்ப நோயை நீக்கியிருப்பின் அவனுக்குத் தவறில்லாத தாழ்வில்லாத புகழைத் தரும்.*

*தவல்: தவறு; தாவில் விளக்கம்:* தாழ்வில்லா விளக்கம். 3

**854. இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னும்**
**துன்பத்துட் டுன்பங் கெடின்.**

*மாறுபாடென்னும் துன்பம் எல்லாத்துன்பத்தினு மிகுந்த துன்பம் ஒருவனுக்கில்லையாயின் அஃது, அவனுக்கு இன்பத்துள் எல்லாம் மிகுந்த இன்பந் தரும்,* 4

855. இகலெதிர் சாய்த்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர்.

*ஒருவனுக்கொருவன் மாறுபாடு தோன்றிய விடத்து அதனை யேற்றுக் கொள்ளாமற் சாய்த்துக் கொண்டு போக வல்லாரை வெல்லக் கருதும் தன்மையுடையார் யாரே.*

*மிகல் ஊக்கல்: குற்றம் உண்டாக்கல். அவராற் கூடாது என்றது.* 5

[குறிப்பு: *சாய்ந்தொழுக என்பது அச்சுப்பாடம்.*]

856. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.

*பிறரொடு மாறுபடுதல் எனக்கு இனிதென்று மாறுபட்டுச் சண்டை செய்வான்* அவனுயிர் வாழ்க்கையுஞ் செல்வ வாழ்க்கையுந் தவறு வருதலுங் கேடுவருதலுஞ் *சிறிது பொழுதிலே உளதாம்.*

உயிர் தவறுதலும் வாழ்வு கெடுதலும் என்றது. 6

857. மிகல்மேவல் மெய்ப்பொருள் காணா ரிகல்மேவல்
இன்னா வறிவி னவர்.

*வெற்றி பொருந்துதலுடைய நீதி நூற் பொருளை யறியார், இகலொடு மேவுதலை யுடைய பொல்லாத அறிவினை யுடையார்.*

*மிகல்: வெற்றி; மேவல்: பொருந்தல்; மெய்ப்பொருள் காணார்: நீதி நூற் பொருள் காணார் எனப் பிரித்து அறிக.* 7

858. இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு.

*ஒருவன் மாறுபட்டு எதிர்த்த விடத்துத் தான் எதிராது சாய்த்துக் கொண்டு போதல் அது செல்வம்; அப்படிச் சாய்த்துப் போகாது மிகுத்து நிற்பானுகிற் கேடு மிகுத்து நிற்கும்.*

*ஊக்கினூக்குமாங் கேடென்றது:* மிகுக்கில் மிகுக்குமாங் கேடு *என்றது.* 8

859. இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு.

*ஒருவன் தனக்குச் செல்வம் வருங்காலத்தில் ஒருவரொடு மாறுபடக் கருதான்; தன் செல்வத்துக்குக் கேடு வருங்காலத்தில் யாவரொடும் மாறுபடுதலைக் கருதுவானும்.*

*காணுதல் : கருதுதல்.* 9

760. இகலானு மின்னாத வெல்லா நகலானும்
நன்னய மென்னுஞ் செருக்கு.

*ஒருவனுக்கு மாறுபாடு ஒன்றினாலே பொல்லாதன எல்லாம் உண்டாம்; நட்பொன்றினாலே நல்ல செல்வமென்னுஞ் செருக்கெல்லாம் உண்டாம்.* 10

இகல் முற்றும்.

---

## 87. பகை மாட்சி

*அஃதாவது,* மிகுந்த பகை ஆகாதென்று *விலக்கியது.*

861. வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேல் மேக பகை.

*தம்மின் வலியார்மேல் மாறுபட்டு எதிர்த்தலை ஒழிக; தம்மின் மெலியார்க்குப் பகையாதலை ஒழியாது விரும்புக.*

மேவுக பகை என்பது மேகபகை என நடுவெழுத்துக் குறைந்து நின்றது. ஓம்பா மெலியார் - பரிகரிக்கலாகா மெலியார் என்க. 1

862. அன்பிலா னென்ற துணையிலான் றன்றுவ்வான்
என்பரியு மேதிலான் றுப்பு.

*ஒருவன் தன் சுற்றத்தின்மேல் அன்பிலன்; அதுவன்றி வலிய துணையிலன்; தான் வலியிலன்; அப்பெற்றியான் மேல் வந்திறங்கிய பகையாளி வலியை எப்படித் தொலைப்பன்?*

*துவ்வான் என்பது, வலியிலான் என்றது. ஏதிலான் துப்பு என்பது, அயலான் வலி என்றது.* 2

[குறிப்பு: *துணையிலன் என்பது அச்சுப்பாடம்.*]

**863. அஞ்சு மறியா னமைவிலா னீகலான்
தஞ்ச மெளியன் பகைக்கு.**

*அஞ்சப் படுவனவற்றிற்கு அஞ்சான்; அறிய வேண்டுவன வற்றை அறியான்; பிறரோடு அமைந்திருக்கவுஞ் செய்யான்; ஈகையும் இல்லான்; அவன் பகைவர் யாவர்க்கும் மிகவும் எளியன்.*

*அஞ்சுதலும், அறிவும், அமைவும், ஈகையும் எனப் பிரித்துப் பொருள் காண்க. தஞ்ச மெளிமை, எளியும் எளிமை என்க. பகையிலகப்பட்டவன் எளியன் எனப் பொருள் கொள்க.* 3

[குறிப்பு: *அமைவிலன் என்பது அச்சுப்பாடம்.*]

**864. நீங்கான் வெகுளி நிறைவில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது.**

*ஒருவன் கோபம் நீங்கான், அதுவன்றித் தான் நிறையுடைய னல்லன், அவன் எந்நாளும் யாங்கணும், யார்க்கும், எளியன்.* 4

[குறிப்பு: *நிறையிலன் என்பது அச்சுப்பாடம்.*]

**865. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது.**

*தான் நீதி நூலை யோதி அப்பொருளை நோக்கான்; நீதி நூல் விதித்த தொழில்களைச் செய்யான்; தனக்கு வரும் பழிகளைப் பாரான்; தான் பண்புடையனல்லன்; அவன் பகைவர்க்கு அவன் பகை இனிது.*

*வழி: நூல் வழி.* 5

**866. காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும்.**

*தன்னையும் பிறரையும் அறியாத கோபத்தை யுடையான்; மிகுந்த பெரிய காமத்தை யுடையான்; அவன் பகையை மிகவும் பகையாகக் கொள்ள வேண்டும்.*

*கழி பெருங் காமம்: மிகுந்த பெண் போகம்.*

867. கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து
மாணாத செய்வான் பகை.

*தனக்கடங்காத வினையைத் தொடுத்திருந்து, அதற்குப் பொருந்தாதன செய்வான் பகையைச் சிலபொருள் அழியக் கொடுத்தாகிலும் விலையாகக் கொள்ள வேண்டும்.*

தனக்கு அடங்காத வினை : தான் மெலியனாயிருந்து வலியார்மேற் பகைத்தல் துணையில்லாது தனித்து நிற்றல். 7

868. குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனா மேமாப் புடைத்து.

ஒருவன் தன் குணம் ஒன்றும் இல்லாதவனாகிப் பல குற்றங்களை யுடையனாகி யிருப்பின், *அவ்வின மில்லாமையால் அவன் பகைவர்க்கு அது தானே துணையாம்.*

*குணமில்லாமையுங் குற்றம் பலவுமாதலது தானே மாற்றா ருக்குத் துணையான தென்றது. மாற்றாருக்கு ஏமாப்புடைத்து என்பது, மாற்றாருக்குத் துணையுடைத்து என்றது; துணையில் லாது தனித்து நிற்றல். ஏமாப்பு : துணை. இதன் பொருளை யுய்த் தறிக.* 8

[குறிப்பு : *இனனிலனா மேமாப்புடைத்து என்பது அச்சுப் பாடம்.*]

869. செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
வஞ்சும் பகைவர்ப் பெறின்.

*நீதி நூலைக்கற்று* அறிதலில்லாது *அஞ்சும் பகைவரைப் பெற்றால் அவரைப் பொருது வெல்வார்க்கு உயர்ந்த இன்பங்கள் நீங்கா.*

*சேணிகவா இன்பம் : உயர்ந்து நீங்கா இன்பம் என்க.* அறிவில்லா வஞ்சும் பகைவர் : அறிவில்லாமையால் அஞ்சும் பகைவர் என்க. 9

870. கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்றும்
ஒல்லானை யொல்லா தொளி.

*நீதி நூலைக் கல்லாதானோடு பகைத்தலான் வரும் எளிய பொருளை மேவாதானை எஞ்ஞான்றும் புகழ் மேவாது.*

கல்லானை வெல்வதற்குச் செலவு சிறிது பொருள் செய்து வெல்லாதவனைப் புகழ் மேவாது என்க. 10

பகை மாட்சி முற்றும்.

---

## 88. பகைத் திறந்தெரிதல்

*அஃதாவது, பகையினது வகையறிதல்.*

**871.** **பகையென்னும் பண்பி லதனை யொருவன்**
**நகையேயும் வேண்டற்பாற் றன்று.**

*பகை யென்று சொல்லப்படுந் தீயதனை ஒருவன் விளையாட்டிடத்தும் விரும்புவது அன்று.*

*பண்பிலதனை என்பது : குணத்தைக் கெடுப்பது என்க.* 1

**872.** **வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க**
**சொல்லே ருழவர் பகை.**

*ஒருவன் வில்லை ஏராக உடைய உழவரொடு பகை கொண்டானாயினுஞ் சொல்லை ஏராக வுடைய உழவரொடு பகை கொள்ளாது ஒழிக.*

*வெல்லும் வீரரொடு பகை கொளினுஞ் சொல்லுஞ் சூழ்ச்சியரொடு பகை கொள்ளற்க என்றது.* 2

**873.** **ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்**
**பல்லார் பகைகொள் பவன்.**

*தானொருவனாகிப் பலரோடும் பகை கொள்வான் பித்துற்றாரினும் அறிவிலன்.*

*தமியன் : துணையில்லாதவன். ஏமுற்றவன் : பைத்தியம் பிடித்தவன்.* 3

**874.** **பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்**
**தகைமைக்கட் டங்கு முலகு.**

நட்பாக வேண்டிப் பகையை வேறு படுத்து நட்பாகச் செய்து நடந்து கொள்ளும் இயல்பையுடைய அரசன் பெருமையுள்ளே இவ்வுலகம் அடங்கும்.

பகையை நட்பாக்கல் : பகையைத் தணித்து உறவாக்கல். 4

[குறிப்பு : தங்கிற்றுலகு என்பது அச்சுப்பாடம்.]

875. தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவன்
இன்றுணையாக் கொள்கவற்றி னொன்று.

தனக்குத் துணையோ இல்லை ; பகைவரோ இருவர் ; தானோ ஒருவனாகில், பகைவர் இருவரிற் பொருந்திய ஒருவனைப் பிரித்து அப்பொழுது இனிய துணையாகக் கொள்க. 5

876. தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல்.

பகைவனைத் தெளிந்தாயினுந் தெளிந்திலனாயினும் தனக்குப் புறத்தொரு வினையாற் றாழ்வு வந்த விடத்துப் பகையொடு கூடாது, பகையை நீக்காது இடையே விட்டு வைக்க.

தேறான் என்பது கூடான் எனவும், பகாஅன் என்பது, விடான் எனவும் அறிக. தானொரு பகைவனோடு பொருது கெடுதி வந்த விடத்து மற்றப் பகைவரைப் பகையாகவும் உறவாகவுங் கொள்ளாது பொதுவாய் நிற்க என்றது. 6

877. நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து.

நொந்ததனைத் தாமாக வறியாத நட்பாளர்க்குத் தன்னோவு சொல்லற்க. வலியின்மை பார்த்திருக்கும் பகைவர்க்குத் தன் வலியின்மையை மேலிட்டுக் கொள்ளற்க.

மேவற்க மென்மை பகைவரிடத்து என்பது, தன் வலியில்லாமையைப் பகைவரிடத்துக் காட்டாது மறைக்க என்றது. மறைப்பது : தான் கிலேசப் படாமற் கம்பீரமாயிருத்தல், 7

878. வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு.

தான் வினை செய்யும் வகையை அறிந்து, அது முடிதற் கேற்ப தனைப் பெருக்கி, பகை புகுதாமற் றன்னைக் காக்கவே தன் பகைவரிடத்து உண்டாகிய களிப்புக் கெடும்.

வகையறிதல் : போர் வெல்லும் உபாயம் அறிதல் ; தற் செய்தல் : படையைப் பெருக்கச் செய்தல் ; தற்காத்தல் : பகைவர் முற்கோலி தன்னிடத்து வாராமற் காத்தல். 8

879. இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.

களைய வேண்டுவதாய முண்மரத்தை முற்கோலி இளமையாய பொழுதே களைக ; அன்றி முதிர்ந்து வயிரம் பற்றிய போது களையுநர் கையை வருத்தப் படுத்தும்.

இது பிறிது பொருள் உரைத்தமையாற் பகைவனைக் களையும் பருவ மறிந்து களைக என்றது. 9

[குறிப்பு : கொல்க என்பது அச்சுப்பாடம்.]

880. உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

தம்மொடு பகைப்பாரது தருக்கினைக் கெடுத்தலாயிருக்க இகழ்ச்சியான் அது சிதையாத அரசர் பின் ஒரு மூச்சு விடும் பொழுதளவாகிலும் ஒரு தலையாக உளரல்லர்.

உயிர்ப்ப உளரல்லர் என்பது, மூச்சு விடும் போதளவாகிலும் உளரல்லர் என்க. செயிர்ப்பவர் : பகைப்பவர். செம்மல் : இளமை. சிதைத்தல் : கெடுத்தல் என்க. இளமைக் காலத்திற் சிதைக்க என்றது. 10

பகைத் திறந் தெரிதல் முற்றும்.

---

## 89. உட்பகை

*அஃதாவது, புறப் பகைக்கு இடங்கொடுத்துத் தன்னுள்ளே நிற்கும் பகை.*

**881. நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரும்
இன்னாவா மின்னா செயின்.**

*ஒருவனுக்கு அனுபவிக்க வேண்டுவதாய நிழலும் நீரும் முன்னினிய வேனும் பின் நோய் செய்வன இன்னாவாம்; அது போலத் தழுவ வேண்டுவனவாய தமர் இயல்புகளும் முன்னினிய வேனும் பின் இன்னாச் செய்யின் இன்னாவாம்.*

*இன்னாது: பொல்லாது. தமர்; உறவு. அவர் பொல்லாது செய்யின் நிழலும் நீரும் போலவாம் என்றது: நிழலும் நீரும் குளிர்ந்து கொல்லும் என்றது.* 1

**882. வாள்போற் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போற் பகைவர் தொடர்பு.**

*வாள்போல வெல்லுது மென்று வெளிப்பட நிற்கும் பகை வரை யஞ்ச வேண்டாம்; உறவு போல மறைந்து நிற்கும் பகை வரை யஞ்ச வேண்டும்.* 2

**883. உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.**

*உட்பகை யாயினாரை யஞ்சித் தன்னைக் காத்துக் கொண் டொழுகுக; அப்படிக் காவாத விடத்துத் தனக்கு ஒரு தளர்ச்சி வரின் குயவன் மட்கலத்தை அறுக்குங் கத்திபோல உட்பகையா யினார் தப்பாமற் கெடுப்பர்.*

*"மட்பகை குயவர் மண்ணரி வாளே" என்பதனால் அறிக.* 3

**884. மனமாணா உட்பகை தோன்றி னினமாணா
ஏதம் பலவுந் தரும்.**

*மன மடங்காத உட்பகை ஒருவனுக்கு உண்டாயின் அஃது அவனுக்கு ஈனமடங்காத் துன்பங்கள் பலவும் வரும்.*

*ஈனம் இனமென்றாயிற்று.* 4

**885. உறன்முறைய னுட்பகை தோன்றி னிறன்முறையான்
ஏதம் பலவுந் தரும்.**

*உறன் முறையாக இருந்து உட்பகையாகத் தோன்றினு னுயின், அஃதவனுக்கு இறத்தல் முறையான துன்பங்கள் பலவும் தரும்.*

*"ஏதந் துன்பங் குற்றப்பேர்" என்பதனுல் அறிக.* 5

**886. ஒன்ருமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்ருமை பொன்ற லரிது.**

*பொருந்தாமையாகிய வுட்பகை, பொருந்தியவனிடத்து, உண் டாயின் அஃது அவனுக்கு எஞ்ஞான்றுஞ் சாகாமற் சாத லரிது.*

*சாகாமற் சாத லாவது : உட்பகையாவான் கையிற் சாகாமல் தற்சாக்காடாகச் சாதல் அரிது என்றது.* 6

[குறிப்பு: *யொன்றலரிது என்பது அச்சுப்பாடம்.*]

**887. செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
உட்பகை யுற்ற குடி.**

*செப்பினது புணர்ச்சி போலப் புறத்து வேற்றுமை தெரியாமற் கூடினுராயினும், உட்பகை உண்டாய குடியின் கூடாது.* 7

**888. அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி.**

அரத்தால் தேயப்பட்ட இரும்பு போல உட்பகையினுரம் தேய்ப்பக் குடி நாளிலே தேயும்.

*உட்பகை உற்றகுடி அரம் பொருத இரும்பு போல உரந்தேயும் என்க.* 8

**889. எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும்
உட்பகை யுள்ளதாங் கேடு.**

*அரசனது உட்பகை அவன் பெருமை நோக்க, எள்ளின் பிளவை ஒத்த சிறுமைத்தே யாயினும், பெருமை எல்லாம் அழிய வருங் கேடு அதனகத்தே உள்ளதாம்.*

*உட்பகையின் சிறுமை, எள்ளின் அளவாயினும் அரசன் பெருமை யெல்லாங் கெடும் என்றது.* 9

**890.** **உடன்பாடில் லாதவன் வாழ்க்கை குடங்கருட்**
**பாம்போ டுடனுறைந் தற்று.**

மனம் பொருத்த மில்லாதாரொடு கூட ஒருவன் வாழும் வாழ்க்கை ஒரு குடிலின் உள்ளே பாம்போடு கூட உறைந்தாற் போலும்.

“குடங்கரே குடிசை கும்பம்” என்பதனாற் குடங்கர் குடிசை என்க. 10

[குறிப்பு: உடம்பா டிலாவர் என்பது அச்சுப்பாடம்.]

உட்பகை முற்றும்.

---

## 90. பெரியாரைப் பிழையாமை

அஃதாவது, பெரியாராய வேந்தரையும் தவத்திற் பெரியாரையும் அவமதித்து ஒழுகாமை.

**891.** **ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்**
**போற்றலு ளெல்லாந் தலை.**

எடுத்துக் கொண்டன யாவும் முடிக்க வல்லாருடைய ஆற்றலை அவமதியாமல் தீங்கு வாராமற் காப்பார் தம்மைக் காக்குங் காவலுள் எல்லாம் தலைமையான காவலாம்.

ஆற்றல்: வலியுடைமை. 1

**892.** **பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாரால்**
**பேரா விடும்பை தரும்.**

பெரியவர்களை வேந்தர் நன்கு மதியாது அவமதித்து ஒழுகுவாராயின், அவ்வொழுக்கம் பெரியவர்களாலே நீங்காத துன்பங்களைக் கொடுக்கும். 2

**893.** **கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டின்**
**ஆற்று பவர்க ணிழுக்கு.**

தான் கெடவேண்டுமாயின் பொருந்தாத காரியங்களைச் செய்க, வேற்று வேந்தரைக் கொல்ல வேண்டிற் கொல்லும வலியுடைய பெரியோரிடத்து இழுக்கினை, 3

894. கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
ஆற்றாதா ரின்னா செயல்.

தன்னைக் கொல்லக் கூற்றுவனைக் கைகாட்டி யழைத்ததற் கொக்கும், தவத்தாற் பெரியோர்க்கும் வேந்தர்க்கும் வலிமை யில்லாதவர் பொல்லாங்கு செய்தல்.

விளித்தல் : அழைத்தல். 4

895. யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.

எவ்விடத்திற் சென்று எவ்விடத்தினு மிருக்க மாட்டார் வேகும் வலியினையுடைய வேந்தனாற் கோபிக்கப் பட்டவர்.

வேந்துப்பு : வேகும் வலி, பிறரைக் கொல்லும் வலியென்க. துப்பு : வலி. 5

[குறிப்பு : வெந்துப்பின் என்பது அச்சுப்பாடம்.]

896. எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

மிகுதியாக எரியும் எரியாற் சுடப்பட்டாராயினும் அதனை யாற்றிக் கொள்வார் ; ஆற்றிக் கொள்ள மாட்டார், பெரியாருக்குப் பிழை செய்து ஒழுகுவார் ; பெரியவர் கோபமாகிய தீயில் வெந்து போவார். 6

897. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னும்
தகைமாண்ட தக்கார் செறின்.

அருளுஞ் சாபமு மிகுதியாகிய தகைமை யுடைய பெரியோர் அரசரை வெகுண்டாராயின் படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் முதலாகிய வாழ்க்கையும் மிகுந்த பொருளும் அரசாட்சியும் இவையெல்லாம் ஆகாமற் கெடும்.

அரசர் செல்வக் களிப்பாற் பெரியோரை இழ்கச்சி செய்யிற் கெடும் என்றது. 7

898. குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.

குன்றத்தை யொக்கும் அருந்தவர் கெட நினைப்பின், குடியொடு நிலைபெற்று நின்றவர் கெடுவர் இந்நிலத்தில். 8

899. ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

காத்தற் கருமையுடைய விரதங்களை மிகுதி யுடையார் சீறிக் கோபித்து நின்றாராயின், இந்திரனும் இடை நடுவே தன்பதியு மிழந்து கெடுவன்.

வேந்தன் : இந்திரன் ; வேந்து : தன்பதி ; தேவேந்திரன் பாம்பாகிய கதையை யறிக. 9

[குறிப்பு : வெந்துகெடும் என்பது அச்சுப்பாடம்.]

900. இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்.

மிகவும் அமைந்த தவத்தினை உடையார் வெகுண்டாராயின், அந்த வெகுட்சி பெற்றவர் மிகவும் பெரிய சார்புடையாராயினும் உய்ய மாட்டார் ; கெடுவர். 10

பெரியாரைப் பிழையாமை முற்றும்.

---

## 91. பெண்வழிச் சேறல்

அஃதாவது, தனக்கடங்கி நடக்குந் தன் மனையாளவள் சொன்னபடிக் கேட்டுத் தானடங்கி நடத்தல்.

901. மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளு மது.

காமங் காரணமாகத் தன் மனையாள் சொன்னபடிக் கேட்டு நடப்பார், தமக்குத் துணையாகிய மிகுந்த புண்ணியங்களைச் செய்ய மாட்டார் ; காம வினையே செய்வார்க்கு இல்லறஞ் செய்து பெறும் பயன் வேண்டாப் பொருளாம்.

பயன் வேண்டாப் பொருளாவது : காம விழைவினால் தொழில் செய்து பொருள் தேடாமற் காமத்தில் அழுந்துதல். 1

902. பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்.

*தன்னுண்மை விட்டு மனையாளுடைய பெண்மையைப் பொருந்துவான் செல்வம் உலகத்து ஆண்பாலர்க் கெல்லாம் பெரியதோர் நாணமுண்டாக்கும்; தனக்கும் நாணத்தைக் கொடுக்கும்.*

*பிறர்க்கு ஈயுமிடத்தும் தான் புசிக்குமிடத்தும் செல்வம் நாணி நிற்கும் என்றது.* 2

903. இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும்.

*ஒருவன் இல்லாளிடத்துத் தாழ்தற் கேதுவாகிய அச்சம் அச்சமில்லாத நல்லாரிடத்துத் தான் செல்லும்போது நாணத்தை எக்காலமுங் கொடுக்கும்.* 3

904. மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று.

*தன் மனையாளுக்கு அஞ்சி நடக்கும் மறுமைப் பயனில்லாதவன் செய்யுந் தொழில், நல்லோராற் கொண்டாடப் படுதலில்லை.* 4

905. இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்.

*தன் மனையாளுக்கு அஞ்சுவான், தான் தேடிய பொருளே ஆயினும், அதனால் நல்லார்க்கு நல்லன செய்தற்கு எந்நாளும் அஞ்சி நிற்பான்.* 5

906. இமையாரின் வாழினும் பாடிலரே யில்லாள்
அமையார்தோள் அஞ்சு பவர்.

*தேவரைப் போலக் குறைவில்லாமை வாழ்ந்தாராயினும், அவர்க்குப் பெருமை யில்லையாம்; தம் மனைவி யுடைய மூங்கிற் போன்ற தோளுக்கு அஞ்சுங் கணவர்க்கு.*

தோளுக்கு அஞ்சுதல்: அவள் அடிக்கும் அடிக்கு அஞ்சுதல். 6

907. பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னுணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து.

*நாணமில்லாமல் தன் மனையாள் ஏவலைச் செய்து திரிகின்றவன்* நாணமுடைய பெண்ணுயினுகில் அவனுக்குப் பெருமை யுடைத்து. 7

**908. நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்**
**பெட்டாங் கொழுகு பவர்.**

*தம்மொடு நட்புச் செய்தார் குறையைத் தீர்க்க மாட்டார்; அதுவுமின்றித் தமக்கு மறுமைக்கு உதவியாய் நன்மைகளையுஞ் செய்து கொள்ளமாட்டார்; நல்ல நுதலையுடைய மனையாள் சொன்ன படிக் கேட்டு நடந்து கொண்டு திரிபவர்.*

*தம் இச்சையன்றி மனையாளிச்சையின்படி யொழுகுவார் என்க.* 8

**909. அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்**
**பெண்ணேவல் செய்வார்க ணில்.**

*அறஞ் செய்தலும் அறஞ் செய்தற்கு ஏதுவாகிய நிறைந்த பொருளும் தமக்கின்பமாகிய செயல்களும் மனையாள் ஏவல் செய்வாரிடத்து உளவாகா.*

பிறவினை : தமக்கின்பமாக உண்பன உடுப்பன செயல்கள். 9

**910. எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்**
**பெண்சேர்ந்தாம் பேதைமை யில்.**

*கருமச் சூழ்ச்சிக்கட் சென்ற நெஞ்சத் திட்பமும் அதனால் வருஞ் செல்வத்தினையும் உடையாராகிய வேந்தர்க்கு மனையாளைச் சேர்தலான் வினையும் பேதைமையும் எக்காலத்தும் உண்டாகாது.*

*பெண்சேர்ந்த பேதைமை : விழைதல் மிகுதி, ஏவல் செய்தல், அஞ்சுதல் இல்லை யென்க.* 10

பெண் வழிச் சேறல் முற்றும்.

---

## 92. வரைவின் மகளிர்

*அஃதாவது, தமக்குரிய மனையாளன்றி வரைவில்லாத விலை மாதரைச் சேர்தலாகாதென்று விலக்குதல்.*

**911. அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியார்**
**இன்சொ லிழுக்கந் தரும்.**

ஒருவனை அன்புடன் தழுவிப் புணராது பொருளைப் பற்றிப் புணரும், நல்ல வளையலை யுடைய விலைமகளிர் இனிய சொல்லும் அவனுக்குப் பின் வறுமைக்கு ஏதுவாகிய இழுக்கத்தினைத் தரும்.

[குறிப்பு : இழுக்குத்தரும் என்பது அச்சுப்பாடம்.]

912. பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல்.

ஒருவனுக்குள்ள பொருளை அளந்தறிந்து அதனை வாங்கும் அளவும் பண்பு பாராட்டிப் பின்பு பண்பில்லாத விலைமாதர் நயத்தினைச் சீர்தூக்கிப் பார்த்து அவரோடு பொருந்தாது விடுக.

அவரை விடுதற்கு உபாயங் கூறியது. 2

913. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையுள்
ஏதில் பிணந்தழீஇ யற்று.

பொருட் பெண்டிராகிய விலை மகளிர் பொய்யாகிய கலவி மயக்கம், இருட்டறையிற் கிடந்த தமக்கின மல்லாத பிணத்தைப் பொருளுக்காக எடுத்தாற் போலும்.

சாதியும் வயதும் ஒவ்வாது அழகுமில்லாத பிணிநோய் மூப்புடையானை விலைமகளிர் தழுவுதல் பிணத்தை எடுத்தது போலும் என்க. 3

[குறிப்பு : இருட்டறையில் என்பது அச்சுப்பாடம்.]

914. பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொருள்
ஆயு மறிவி னவர்.

இன்பப் பொருளை யிகழ்ந்து, பொருளையே பொருளாக விரும்பும் பொது மகளிர் அற்ப நலத்தினை, அருளொடு கூடிய பொருளை ஆராயுமறிவினையுடையவர் தோயார். 4

915. பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர்.

பொருள் கொடுப்பாரெல்லார்க்கும் பொதுவாகிய நலத்தினை யுடையார் புன்னலத்தினைத் தோயார், இயற்கையாகிய மதிநலத்தினையுடைய மாட்சிமைப் பட்ட அறிவினையுடைய பெரியோர். 5

**916. தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்.**

*ஆடல் பாடல் அழகு என்பனவற்றான் களித்துத் தம் புல்லிய நலத்தைப் பொருள் கொடுப்பார் யாவரிடத்தும் பாராட்டும் பொதுமகளிர் தோளினை, அறிவு கல்வி நல்லொழுக்கமாகிய புகழ் நலத்தினைப் பாராட்டும் பெரியவர் தோயார்.*

*அறிவுடையார் நல்லொழுக்கம் அழியுமாதலால் தோயார் என்க.* 6

**917. நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சின்
பேணிப் புணர்பவர் தோள்.**

*நெஞ்சினாற் பிறர் பொருளை ஆசைப்பட்டுப் பொருள் காரணமாகக் கொடுப்பாரை மெய்யாற் புணரும் பொதுமகளிர் தோள்களைத் தோய்வர், நிறையாற்றிருந்திய நெஞ்சமில்லாதவர்.*

*பொருள்மேலாசை பற்றிக் கொடுப்பார் மேலாசை உரைப்பவரென்க.* 7

**918. ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.**

*ஆடலினாலும் பாடலினாலும் வடிவினாலுஞ் சொல்லினாலும் வஞ்சித்தலை வல்ல விலை மகளிர் மயக்கு முயக்கத்தினை ஆராய்ந்தறியும் அறிவுடைய ரல்லாதார்க்கு அணங்குதாக்கு என்று சொல்லுவர் நூலோர்.*

அணங்கு தாக்கு : பேய் பிடித்தல்; அணங்கென்ப அணங்கு தாக்கென்ப என்க. *8*

**919. வரைவிலா மாணிழையார் மென்றோட் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு.**

*உயர்ந்தோர் இழிந்தோர் என்னாது விலை கொடுப்பார் யாவரையும் முயக்கும் பொது மகளிர் மெல்லிய தோள்கள், குற்றத்தையறியும் அறிவில்லாக் கீழ் மக்கள் புக்கு அழுந்தும் நரகமாம்.*

*அளறு : நரகம்.* *9*

920. இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

*இரண்டு நெஞ்சினை யுடைய பொதுப் பெண்டிரும், கள்ளும், சூதும் என இம் மூன்றும் திருமகளாற் றுறக்கப் பட்டார்க்கு நட்பாம்.*

*இருமனம் : ஒருவர் மேல் ஆசை யிருப்ப, மற்றொருவன் மேலாசை கூறுதல். திருநீக்கப்படுதல் : திருமகள் விட்டு நீங்கப் படுதல்.* 10

வரைவின் மகளிர் முற்றும்.

---

## 93. கள்ளுண்ணாமை

*அஃதாவது, கள்ளைக் குடியாமை.*

921. உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றும்
கட்காதல் கொண்டொழுகு வார்.

*கள்ளின் மேல் ஆசை கொண்டொழுகும் அரசர்க்கு எஞ்ஞான்றும் பகைவர் அஞ்சார்; அது வன்றி முன் எய்திய புகழினை யும் இழப்பர்.*

*ஒளி : புகழ். அரசன் கட்குடித்து மயங்க, பகைவரும் அஞ்சார் என்றது.* 1

922. உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரால்
எண்ணப் படவேண்டா தார்.

*உண்ணுதொழிக கள்ளை ; உண்ண வேண்டுவாருஞ் சிலர் உளராயின், நல்லோ ரெண்ணப்பட வேண்டாதார் உண்க.*

*நல்லோ ரெண்ணுதல் : நன்கு மதிக்கப்படுதல். உணில் உண்க என்பது : சிலருணில் யாமும் அப்படி உண்போம் என்று எண்ணற்க என்றது.* 2

923. ஈன்றாள் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

*யாது செய்யினு முவப்பாகும் தாய் முன்பாயினும் கள்ளுண்டு மயங்குதல் பொல்லாதாம்; ஆனபின் குற்றம் யாதும் பொருத சான்றோர் முன், கள்ளுண்டு மயங்கிக் குளறுதல் அவர்க்கு யாதாம்.*

*களித்தல் : மயங்கல். உடை சோருதல், மொழி தடுமாறுதல் மயங்கி வீழ்தல். தாய் முகத்தும் இன்னது என்க.* 3

**924. நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்**
**பேணாப் பெருங்குற்றத் தார்க்கு.**

*நாணமென்னும் நல்லாள் கண்டால் புறங்கொடுத்து ஓடிப் போவள், கள்ளென்னும் யாவராலும் பேணப்படாத பெரிய குற்றத்தினை உடையாருக்கு.*

*கள்ளுண்டவனைத் தூரத்தே காணில் நாண முள்ளவர் புறங் கொடுப்பர் என்க; பேணாப் பெருங் குற்றம் : யாவராலும் தடைபடாத பெரிய குற்றம் என்க.* 4

**925. கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து**
**மெய்யறி யாமை கொளல்.**

ஒருவன் விலைப்பொருளைக் கொடுத்துக் கள்ளாற்றனக்கு மெய்ம் மறந்து போதலைக் கொள்ளுதல், அவன்றன் பழவினைப் பயன் செய்வதறியாமை யுடைத்து.

*கையறியாமை : பழவினைப் பயன் அறியாமை என்க.* கை என்பது : வினை. *தீவினையை விலை கொடுத்துக் கொள்ளுதல் கையறியாமை என்க.* 5

**926. துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்**
**நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.**

*உறங்கினார் செத்தாரின் வேறுதலுடையரேனும், அக் காலத்து அறிவின்மையால் வேறல்லர்; நஞ்சுண்டு மயங்குவாரின் வேறல்லர் கள்ளுண்டவரும்.*

கள்ளுண்பார் காலத்து மயக்கத்தாற் சாதல் மாத்திர மொழிய நஞ்சுண்பாரோடு ஒப்பர். 6

**927. உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்**
**கள்ளொற்றிக் கண்சாய் பவர்.**

கள்ளை மறைத்துண்டவர் கள் மயக்கத்தால் அறிவு தடுமாறுவார்; அதனால் உள்ளூரில் வாழ்பவர் இவன் கள்ளுண்டு மயங்கினன் என்று ஒருவர்க்கொருவர் உள்ளுணர்வாகக் கைதட்டி நகுவர்.

கண்சாய்தல் : மயக்க மாதல். ஒற்றுதல் : மறைந்துக் குடித்தலும் மறைத்துச் சொல்லுதலும். 7

**928. களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்**
**தொளித்ததூஉ மாங்கே தரும்.**

கள் குடியாத போது மறைத்துக் கள் குடித்தறியேன் என்று சொல்லுதலைக் கைவிடுக; கள் குடித்தபோது முன் ஒளித்துச் சொன்னதும் அவ்விடத்தில் வெளிபடுதலான்.

களித்தல் : கள் குடித்து மயங்கல். 8

[குறிப்பு : மிகும் என்பது அச்சுப்பாடம்.]

**929. களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்**
**குளித்தானைத் தீத்துரீஇ யற்று.**

கள்குடித்து மயங்கிக் கிடப்பவனை, இப்படி ஆகாதென்று காரணங் காட்டித் தெளிவித்தல், ஆழ்ந்த நீரில் மூழ்கினன் ஒருவனை விளக்குப் பிடித்துத் தேடுதலோடு ஒக்கும்.

துரீஇ என்பது : தேடுதல். 9

**930. கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கால்**
**உள்ளான்கொ லுண்டவன் சோர்வு.**

கள்ளுண்பா னொருவன், கள்ளுண்ணாத போது காணான் கொல்லோ? கள்ளுண்டவனைக் கண்டபோது உண்டவன் மயங்கிக் கிடத்தலை நினையான் கொல்லோ? இப்படித் தானன்றோ நாமும் மயங்குதல் என நாணமில்லாதவன். 10

கள்ளுண்ணாமை முற்றும்.

---

## 94. சூது

அஃதாவது, பொருளொட்டிச் சூதாடலாகாதென்று விலக்கப் பட்டது.

931. வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.

தான் வெல்லும் ஆற்றல் உடையனாயினும் சூதாடலை விரும்பா தொழிக; தான் வென்ற பொருள் தனக்கெப்படி யென்னில், தூண்டிலிரும்பின் இரை கோத்துவிட அதை இரையெனக் கருதி மீன் விழுங்கினாற் போலும்.

தூண்டிற் பொன்: தூண்டிலிரும்பு. பொருள் இழத்தலேயன்றி உயிருக்கும் இறுதி வரும் என்றது.

கையறுத்து வைத்துச் சூதாடிய கதையை யறிந்து கொள்க. 1

932. ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோ ராறு.

முன் சொன்ன தூண்டிற் பொன்போல ஒன்றினைப் பெற்றிடினும் பின்னும் பெறுது மென்னுங் கருத்தால் நூறினையிழந்து வறியராம் சூதற்கும், பொருளொன்றுனும் இன்பமும் நன்மையும் எய்தி வாழ்வதொரு வழி உண்டாமோ? ஆகாது. 2

933. உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.

உருளுங் கவற்றினை யகப்பட்ட சூதாடலை இடைவிடாது கூறிச் சூதாடுமாயின், அரசன் தேடிய பொருட் கூட்டம் எல்லாம் போய்ப் பகைவரிடத்தே தங்கும்.

உருளாயம்: உருளுங் கவறு. பொருளாயம்: பொருட் கூட்டம்; பொருளும் பொருளால் வரும் ஆதாயமும் என்க. 3

934. சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.

துன்பங்கள் பலவற்றையும் விளைவித்துச் செல்வத்தையும் இழக்கும் சூது போல வறுமை கொடுக்க வல்லது பிறிதொன்றும் இல்லை. 4

935. கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
இவறியா ரில்லாகி யார்.

கவற்றினையுங் கவருடுங் தொழிலினையும் மேற்கொண்டு களித்து விளையாடும் அரசர், முற்காலத்துக் கெடாதவர் யார்? சூதாடிக் கெட்டவரேயாம்.

நளன், பஞ்சபாண்டவர் முதலாயினூர் கதை அறிக. இவறல் : மறந்து கெடுதல். 5

936. அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னும்
முகடியால் மூடப்பட் டார்.

வயிற்றிற்குச் சோறு முண்ணூர் ; அல்லலும் உழப்பர் ; சூதாகிய மூதேவியால் விழுங்கப்பட்டவர்.

அகடு : வயிறு. முகடி : மூதேவி. மூடப்படுதல் : மூடிக் கொள்ளப்படுதல். 6

937. பழகிய செல்வமும் பண்புங் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின்.

அறம் பொருள் இன்பங் கல்வி முதலிய தொழிலிற் காலம் போக்காது அரசன் சூதாடுமிடத்திற் காலம் போக்குமாயின், பழகித் தொன்றுதொட்டு வந்த செல்வத்தையும் நற்குணத்தையும் கெடுக்கும்.

காலை புகின் என்பது : காலங் கழிப்பது என்க. 7

938. பொருள் கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது.

பொருள் கெடுத்துப் பொய்யை மேற்கொள்ளப் பண்ணி மனத்தின் அருளைக் கெடுத்துப்பின் இம்மை மறுமையினும் அல்லல் உழப்பச் செய்யுஞ் சூது. 8

939. உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்தும்
அடையாவா மாயங் கொளின்.

அரசன் சூதினைத் தனக்கு வினைதத் தொழிலாக விரும்புமாயின், உடையாடையுஞ் செல்வமும் உண்பதும் ஒளி நிறத்தலும் கல்வியும் என்று சொல்லப்பட்ட ஐந்துஞ் சாராவாம்.

உடை : புடவை ; செல்வம் : பொருள் ; ஊண் : புசிப்பு ; ஒளி : அலங்காரம் ; கல்வி : மநுநீதி சாத்திரம் ; ஆயம் : சூதாடல். 9

940. இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்பம்
உழத்தொறூஉங் காதற் றுயிர்.

பொருள் தோற்குந் தோறும் வெல்வோம் என்று காதலைத் தரும் சூதுபோல, உடம்பு துன்பம் அனுபவிக்குந்தொறும் உடம்பின்மேற் காதல் விடாது உயிர். 10

சூது முற்றும்.

---

## 95. மருந்து

அஃதாவது, பழவினையாலும் தற்காரணத்தினாலும் வரும் வியாதி தீர்க்கும் மருந்தின் திறங் கூறுகின்றது. தற்காரணமாவது உண்பன, தொழில் செய்வன முதலிய என்க.

941. மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று.

உணவுஞ் செயலும் ஒருவன் பகுதிக்கு ஒத்த அளவின்றி மிகுந்தாலும் குறைந்தாலும் ஆயுள் வேதமுடையவர் எண்ணிய வாத பித்த சேத்துமம் என்னும் மூன்றும் அவனுக்கு நோய் செய்யும்.

நூலோர் : மருத்துவக் கலைஞர் என்க. 1

942. மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றமை போற்றி யுணின்.

ஒருவன் முன் உண்டது செரிந்தபடி அறிந்துபின் உண்ணுமாயின் அவன் யாக்கைக்கு மருந்துண்ண வேண்டுமென்று சொல்ல வேண்டா. 2

[குறிப்பு : அற்றது என்பது அச்சுப்பாடம்.]

**943.** அற்ரு லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்ருன் னெடிதுய்க்கு மாறு.

*முன்னுண்டது செரித்தாற் பின் உண்பதனைச் செரிக்கும் அளவு அறிந்து உண்க. அப்படி அறிந்து உண்பாஞகில் உடம்பு பெற்ருன் அவ்வுடம்பினை நெடுங்காலம் வைத்திருப்பான்.* 3

**944.** அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

*முன் உண்டது செரித்தபடி அறிந்து, மறவாது கடைப் பிடித்து, வயிற்றுக்கு மாறுகொள்ளாத உணவுகளை மிகவும் பசித்தபின் உண்க.*

*துவரப் பசித்து என்பது, மிகவும் பசித்தபின் என்க. மாறல்லாது : வாத பித்த சிலேத்துமங்களதனல் மாறுகொள்ளுத லல்லாமை.* 4

**945.** மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை யுயிர்க்கு.

*வாத பித்த சிலேத்துமங்கள் மாறுபாடில்லாத உண்டியை* மிகாமல் மறுத்துண்பாஞயின் *அவன் உயிருக்கு இடையூறு வாராது.*

மறுத்துண்ணல் : மிகுதியை மறுத்து உண்ணல். *ஊறு : இடையூறு.*

**946.** இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கும்
கழிபே ரிரையான்க ணேய்.

*தனக்குச் செரிக்கும் அளவறிந்து உண்பவனிடத்து உண்டாகிய இன்பம் போல, இடைவிடாது நிற்கும், செரிக்கும் அளவறியாது மிகப் பெரிய இரையை விழுங்குவானிடத்து நோய்களும்.* 6

**947.** தீயன வின்றித் தெரியான் பெரிதுண்பான்
நோயள வின்றிப் படும்.

*தன் வயிற்றின் நிற்கும் நெருப்பின் அளவும் பசியளவும் அதற் கேற்ற காலத்தின் அளவும் உண்ணும் உணவின் அளவும் ஆராய்ந்து அறியான் பெரிது உண்ணுமாயின் அவன் நோய் அளவிலாமற் படுவன்.*

நோயளவின்றிப்படுதல் : நோய் உடலை தீராமையும் மிகுதியும் என்க. 7

[குறிப்பு : *பெரிதுண்ணின் என்பது அச்சுப்பாடம்.*]

**948. நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.**

*மருத்துவனாயினான், நோயுடையானிடத்து நிகழ்கின்ற நோயின் குறிகளான் இன்னதென்று உணர்ந்து, பின், அது வருதற்குக் காரணத்தை ஆராய்ந்து தெளிந்து, பின், அது தீர்க்கும் உபாயத்தினை யறிந்து அதனைச் செய்யும் வழி பிழையாமல் வாய்ப்பச் செய்க.*

உணவு பழவினை செயல்கள் என மூன்றும்; *அவற்றை ஆயுள் வேதியர் நிதானஞ் செய்தல், நோயினையும்* ஆயுளையும் *ஐயமறத் தெளிதல்,* மருந்தூட்டல், தயிலமாட்டல், *உதிரங்களைதல்,* மலம் போக்கல், மிதி இடுதல், *அறுத்தல், சுடுதல் முதலாயின நோய் தணித்தல் எனக் கொள்க.* 8

**949. உற்றா னளவும் பிணியளவுங் காலமும்
கற்றான் கருதிச் செயல்.**

*ஆயுள் வேதத்தினை, வாகட சாத்திரத்தினைக் கற்ற மருத்துவன், நோய் தீர்க்கும் உபாயத்தினைக் கருதிச் செய்யு மிடத்து, நோயுற்றவன் அளவினையும், அவன் கண் நிகழ்கின்ற நோயினளவினையும், தன் செயற்கேற்ற காலத்தினையும், அந்நூல் நெறியால் நோக்கி அவற்றொடு பொருந்தச் செய்க.*

நோயுற்றான் அளவு : பாலன், குமாரன், யௌவனன், விருத்தன். யாக்கையின் பகுதியறிந்து பிணியளவும் காலமும் அறிக *என்றது.* 9

**950. உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து.**

*பிணிக்கு மருந்தாவது ; நோயுற்றவன், நோய் தீர்க்கும் மருத்துவன், நோயினைத் தீர்க்கும் மருந்து,* அதற்குக் கருத்தனாகத் திரிபவன்(?) *என்று சொல்லப்பட்ட நான்கு கூறுபாட்டினையு முடையது மருந்து.*

*ஒவ்வொன்றினை நான்கு நான்கு கூறாகச் சொல்வாரும் உளர்.*

மருந்து முற்றும்.

*அங்கவியல் முற்றும்.*

---

# ஒழிபியல்

## 96. குடிமை

*அஃதாவது, உயர்ந்த குடியினிடத்துப் பிறந்தவரது நன்மை; உயர்ந்த குடி நால்வகை வருணத்துள்ளும் வருதல்.*

951. **இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.**

*செம்மையும் நாணமும் ஒருமிக்கக் குடிப்பிறந்தாரிடத் தல்லது பிறரிடத்து இயற்கையாக இல்லை.*

இல்லென்பதும் குடியென்பதும் ஒன்று. செப்பம் : சொல்லும் கருத்துஞ் செயலும் மாறுபடாமை. *நாணம் : பழி பாவத்துக்கு அஞ்சுதல். இவை குடிப்பிறந்தார்க்கு இயற்கை; மற்றவர்க்குக் கற்பிக்கப்படுஞ் செயற்கை.* 1

952. **ஒழுக்கமும் வாய்மையும் நாணுமிம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார்.**

*உயர்ந்த குடியின்கட் பிறந்தார், நல்லொழுக்கமும் பொய் சொல்லாமையும் நாணமும் என இம் மூன்றும் தம்மிடத்து இழுக்கு வாராமற் காப்பர்.*

*குடிப்பிறந்தார் மனம், வாக்கு, காயங்களின் இழுக்கில்லை என்க.*

953. **நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.**

*எக்காலத்தும் பிழையாத வாய்மை தப்பாத குடியின்கட் பிறந்தார்க்கு, வறியார் சென்ற விடத்து முகமலர்ச்சியும், உள்ளன கொடுத்தலும், இன்சொற் சொல்லலும், இகழாமையுமாகிய இந் நான்கும் உரியவகை என்று சொல்லுவர் நூலோர்.*

*இந்நான்கு வகை என்று பாடம் ஓதுவாரும் உளர்.* 3

954. **அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர்.**

பலவாக அடுக்கிய கோடிப் பொருளைப் பெற்றாராயினும் உயர்ந்த குடியிற் பிறந்தார், தம் ஒழுக்கங் குன்றுந் தொழில்களைச் செய்யார். 4

955. வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று.

தொன்று தொட்டு வருகின்ற குடியின்கட் பிறந்தார், தாம் கொடுக்கும் பொருள் பண்டையிற் சுருங்கிய விடத்தும் தம் பண்புடைமையின் நீங்கார்.

சேர சோழ பாண்டியர் என்றது போல வருங்குடி. அவர்க்கு வறுமையாவது, கொடுத்தல் சுருங்குதல் என்க. 5

956. சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார்.

வசையற்று வருகின்ற நம் குடிமரபோடு ஒத்து வாழக்கடவோம் என்று கருதுவார் வறுமையுற்ற வழியும், வஞ்சனையைப் பொருந்தி அமைவிலவாய தொழில்களைச் செய்யார்.

சலம் : வஞ்சனை ; சால்பில்லாமை, அமைதியில்லாமை என்க.

957. குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.

உயர்ந்த குடியின்கட் பிறந்தாரிடத்து உண்டாகிய குற்றம் தான் சிறிதே யாயினும், விசும்பின்கண் மதியிடத்து மறுப்போல ஓங்கித் தோன்றும். 7

958. நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும்.

குலநல முடைவனாக வருகின்றவனிடத்து அன்பும் அருளு மில்லையாயின், அவனை அக்குலங் குடியின் ஐயப்படும் உலகம். 8

959. நிலத்திற் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

நிலத்தினியல்பை அதனிடத்தின் கிடந்து முளைத்த முளை காட்டும் ; அது போலக் குலத்தின் இயல்பை அதன்கட் பிறந்தார் வாயிற் சொற் காட்டும்.

நல்ல நிலம் பொல்லா நிலம் என்பது பயிரிற் காணப்படும். நல்ல குலம் பொல்லாக் குலம் என்பது சொல்லாற் காணப்படும் என்க. கால் - முளை. நிலத்திற் பிறந்தாரைக் கால் காட்டும் என்றும், நிலத்திற் பிறந்தாரைக் கார் காட்டும் என்றும் இன்னும் பல விகற்பமாகப் பாடமோதிப் பொருளுரைப்பாருமுளர். அவை யெல்லாம் பாடமல்ல; அதற்கேற்பச் சொல்லுவதும் பொருளல்ல என்க. 9

960. நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு.

*ஒருவன் தனக்கு நலனுடைமை வேண்டுவனாயில், தான் நாணுடைய னாதலை வேண்டும். குலனுடைமையை வேண்டு வானாயின், தன்னால் பணியப் படுவார் யாவர் மாட்டும் பணிதலை வேண்டும்.*

*நலம் : புகழும் புண்ணியமும். குலம் : நற்குலம். தன்னால் பணியப்படுவார் : அந்தணர், அரசர், சான்றோர், அருந்தவர், தம் முன்னோர், தந்தையர், தாயர், தக்கோர் முதலாயினோர்.* 10

குடிமை முற்றும்.

---

## 97. மானம்

*அஃதாவது, எஞ்ஞான்றும் தன்னிலையில் தாழாமையும் ஊழ் வினையால் தாழ்வு வரின் உயிர் வாழாமையும் ஆம்.*

961. இன்றி யமையாச் சிறப்பின வாயினும்
குன்ற வருப விடல்.

*அக்காரியஞ் செய்யா விடத்துத் தாம் அமையாத சிறப்பில்லை யாயினும் தம் குடிப்பிறப்புத் தாழ வருஞ் செயல்களைச் செய்யா தொழிக.*

ஈனஞ் செய அது வருஞ் சிறப்பினைச் செய்யா தொழிக என்றது. 1

962. சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

*புகழ் செய்யுமிடத்துந் தங்குடிக்குச் சீரல்லாத காரியங்களைச் செய்யார், புகழுடனே மானத்தை நிறுத்தல் விரும்புவார்.*

*பேராண்மை : மானம்.*

**963. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய**
**சுருக்கத்து வேண்டு முயர்வு.**

*குடிப் பிறந்தார் செல்வம் உயர்ந்த விடத்து யாவரிடத்தும் பணிதல் வேண்டும் ; சிறிய வறுமை வந்த விடத்துத் தாழ்வு படாமல் உயர்வு வேண்டும்.* 3

**964. தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்**
**நிலையி னிழிந்தக் கடை.**

*குடிப்பிறந்த மாந்தர் தலையை விட்டு நீங்கிய மயிரினை ஒப்பர்; தம்முடைய உயர்ந்த நிலையை விட்டு இழிந்த செயல்களைச் செய்த விடத்து.*

*தலையினிருப்பின் மயிரினுக்குச் சிறப்புச் செய்வர் ; தலைவிட்டு நீங்கின் இழிவு செய்வர் என்க.* 4

**965. குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ**
**குன்றி யனைய செயின்.**

*குடிப்பிறப்பினால் மலை போல் உயர்ந்தாரும் தாழ்தற்கு ஏது வாகிய செயல்களை ஒரு குன்றி மணி அளவாயினுஞ் செய்வாராயின், தம்முடைய நிலையில் குன்றிப் போவர்.* 5

**966. புகழின்றாற் புத்தேளுட் டுய்யாதா லென்மற்**
**றிகழ்வார்பின் சென்று நிலை.**

*மானத்தை விட்டுத் தன்னை அவமதிப்பார் பின்னே ஒருவன் சென்று நிற்கின்ற நிலை, இவ்வுலகத்துப் புகழ் இல்லை ; தேவருலகத்துஞ் செலுத்தாது; என்ன காரியஞ் செய்தான் ?*

இகழ்ச்சி செய்வார் பின்னே திரிபவனுக்குப் புகழ் இல்லை, சுவர்க்கமும் இல்லை என்றது. *6*

**967. ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே**
**கெட்டா னெனப்படுதல் நன்று.**

*தன்னை யிகழ்வார் பின்னே சென்று, பொருள் பெற்று அதனால் ஒருவன் வாழ்தலின், அப்படிச் செய்யாது செத்தான் என்று சொல்லப்படுதல் அவனுக்கு நன்று.*

சாதலிற் புகழ் உண்டாம் ; அதனாற் சுவர்க்கம் பெறுவன் ; அதனால் நன்று என்றார் என்க. 7

968. மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து.

*பெரிய தகையாகிய தன் மானம் அழிய வந்த விடத்துச் சாகாமல் உயிரை ஓம்பி வாழும் வாழ்க்கை பின் சாவாமைக்கு மருந்தாமோ ?*

*பெருந்தகைமை : உயர்குடிப் பிறப்பு. பீடு : மானம்.* 8

969. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்.

*தன் பல மயிரினும் ஒரு மயிர் நீங்கின் உயிர் வாழாக் கவரி மானை ஒப்பார், உயிரை நீக்கத்தக்க மானம் வந்த விடத்துத் தாங்காமல் உயிரை நீக்குவர்.* 9

970. இளிவரின் வாழாத மான முடையார்
ஒளிதொழு தேத்து முலகு.

*தமக்கு ஓர் அபகீர்த்தி வந்த விடத்து உயிர் வாழாது உயிரை நீக்கும் மான முடையார் புகழைத் தொழுதேத்தும் உலகம்.* 10

மானம் முற்றும்.

---

## 98. பெருமை

அஃதாவது, குலத்தினும் குணத்தினும் மானத்தினும் செல்வத்தினுங் கல்வியினும் பெரிதுடைமை, அறம் செய்தல், புகழ் செய்தல், *பிறர் குற்றங் கூறாமை முதலிய என்க.*

971 ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்வோ மெனல்.

*ஒருவனுக்கு ஒளியாவது பிறராற் செய்தற்கரிய செயல்களைச் செய்வோம் என்று கருதும் ஊக்கமிகுதி ; ஒருவனுக்கு மாசாவது அச்செயலின்றி உயிர்வாழக் கடவேமென்று கருதுதல்.*

ஒளி ஒருவருக்குச் செல்வம். இகழ்ச்சி, ஒருவருக்குப் புகழ் செய்யாமல் வாழ்தல் என்க.

*ஒளி : புகழ். ஈகையே ஒருவற்குச் செல்வம் ; ஈகையில்லாத வாழ்வே ஒருவற்கு வறுமை என்றுமாம்.* 1

[குறிப்பு : *வாழ்தும் என்பது அச்சுப்பாடம்.*]

**972. பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.**

*மக்கட் பிறப்பு எல்லா வுயிர்க்கும் ஒக்கும் ; சிறப்பு ஒவ்வாது, அவரவர் செய்யுந் தொழில் வேற்றுமையால்.*

சிறப்பு : பெருமை. புண்ணியஞ் செய்தலும் பாவஞ் செய்தலுந் தொகையிற் காண்க, விரித்துரைப்பிற் பலவாம். சிவிகை மேல் இருப்பானும் எடுப்பானும் முதலாயின. 2

**973. மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்.**

*இழிதொழில் செய்வார் உயர்ந்த ஆசனத்திலிருந்தாலும் பெரியராகார்; உயர்ந்த தொழில் செய்வார் வறு நிலத்தில் இழிந் திருந்தாலுஞ் சிறியராகார்.*

இதுவும் நானுவித மாகலான் அவை யெல்லாம் விரித்துரைத்துக் காண்க. மேல் கீழ் : பெருமை சிறுமை என்க. 3

**974. ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.**

*கவரா மனத்தை யுடைய கற்புடைய மகளிர் நிறையின் வழுவாமல் தன்னைத் தான் காப்பது போலப் பெருமையும் ஒருவன் நிறையின் வழுவாமல் தன்னைத்தான் காத்து ஒழுகுவானாயின் அவனிடத்து உண்டாம்.* 4

**975. பெருமை யுடையவ ராற்றுவா ராற்றின்
அருமை யுடைய செயல்.**

*பெருமை யுடையராயினோர் தாம் வறியராய வழியும் பிறர் செய் தற்கரிய செயல்களை விடாது செய்யும் நெறியாற் கடை போகச் செய்ய வல்லர் ஆவர்.*

*ஆற்றுதல் : செய்தல்.* 5

**976. சிறியா ருணர்ச்சியு ளில்லை பெரியாரைப்**
**பேணிக்கொள் வோமென்னு நோக்கு.**

*சிறியராயினோர் அறிவின் இல்லை, மானம் குலம் கல்வி யுடைய பெரி யாரைப் பேணி அவர் சொல்லும் நன்னெறியின் நடந்து கொள் வோம் என்னும் கருத்து.* 6

[குறிப்பு : *கொள்வேம் என்பது அச்சுப்பாடம்.*]

**977. இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புத்தான்**
**சீரல் லவர்கட் படின்.**

*பெரியாரிடத்து இருக்குஞ் சிறப்புத்தான் சிறியாரிடத்து உண்டாகுமாயின், அவர் மிகவும் தருக்கிப் பலரிடத்தும் மிகையே தொழிலாகச் செய்வர்.*

*இறப்பே புரிந்த தொழில் : மிகையே செய்யுந் தொழில். சீரல்லவர் : சிறியவர்.* 7

[குறிப்பு : *சிறப்புந்தான் என்பது அச்சுப்பாடம்*].

**978. பணியுமா மென்றும் பெருமை சிறுமை**
**அணியுமாந் தன்னை வியந்து.**

*பெருமையுடையார் சிறப்பு உண்டாகில் தருக்கின்றி யாவரை யும் வணங்கி நடப்பார் ; மற்றைச் சிறுமை யுடையார் சிறப்புண் டாகில் தம்மைக் கொண்டாடி அலங்கரித்துக் கொள்வார்.* 8

**979. பெருமை பெருமித மின்மை சிறுமை**
**பெருமித மூர்ந்து விடல்.**

*பெருமைக் குணமாவது, தருக்கின்றி யாவரையும் வணங்கி வழிபடுதல் ; சிறுமைக் குணமாவது தருக்கித் தன் பெருமை காட்டி நடந்து விடல்.* 9

**980. அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்**
**குற்றமே கூறி விடும்.**

பெருமையுடையர் பிறர் நன்மையைப் பாராட்டிக் குற்றத்தை மறைப்பர்; மற்றைச் சிறுமை யுடையார் பிறர் நன்மையை விலக்கிக் குற்றமே கூறிவிடுவர். 10

பெருமை முற்றும்.

---

## 99. சான்றாண்மை

அஃதாவது, நன்மையென்று சொல்லப்பட்ட பல குணங்களையும் ஆளுதல். 'சால்பு நிறைவு சால்பு மாட்சிமை சான்றாண்மை' என்பதனாலறிக. ஆண்மை: ஆளுதல்.

**981. கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து**
**சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.**

*நமக்குத் தகுவன இவையென்று அறிந்து சான்றாண்மையை மேற்கொண்டு ஒழுகுவார்க்கு நல்லனவாய குணங்கள் எல்லாம் இயல்பாய் இருக்கும் என்று சொல்வர் நூலோர்.* 1

**982. குணநலஞ் சான்றோர் நலமே பிறநலம்**
**எந்நலத் துள்ளதூஉ மன்று.**

*சான்றோர் மனமாவது குணங்களினால் ஆயநலமே; அஃது ஒழிந்த பிறவுறுப்புக்களினாய நலம் ஒரு நலத்தினும் உள்ளதன்று.*

[குறிப்பு: *நலனே என்பது அச்சுப்பாடம்.*]

**983. அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ**
**டைந்துசால் பூன்றிய தூண்.**

*சுற்றத்தார் மேல் அன்றிப் பிறர் மேல் அன்பும் நாணமும் ஒப்புரவும் கண்ணோட்டமும் பொய் சொல்லாமையும் எனச் சால்பென்னும் பாரத்தைத் தாங்கிய தூண்கள் ஐந்து.*

*இவை ஐந்து பொருளும் முன்சொன்ன அதிகாரத்துள் அறிந்து கொள்க.* 3

**984. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை**
**சொல்லா நலத்தது சால்பு.**

தவ விரதத்துட் கொல்லா விரதமே விரத நலம்; பிறர் குற்றத்தைச் சொல்லா நலமே சால்பின் நலம். 4

985. ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

ஒரு தருமத்தைச் செய்து முடிப்பார் ஆற்றலாவது அத் தருமத்திற்குத் துணையாவாரைத் தாழ்ந்து கூட்டிக் கொள்ளுதல்; சால்புடையார் தம் பகைவரை வெல்லும் படையாவது பகைவரைத் தாழ்ந்து துணையாகக் கூட்டிக் கொள்ளுதலாம்.

அற என்பது முன்சொன்ன பணிதல் எனக் கொள்க. 5

986. சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்.

சால்பாகிய பொன் உரைத் தறிதற்கு உரை கல்லாகிய செயல் யாதெனில், தம்மினும் உயர்ந்தாரிடத்து அல்லது இழிந்தாரிடத்தும் தோற்றுப் போதலைக் கொள்ளுதலாம்.

தோல்வி : தோற்றுப் போதல். துலையிலார் : இழிந்தார் என்க. "கட்டளை நிறைகல் உரைகல் ஒப்பாம்" என்பதனால் அறிக. 6

987. இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு.

தமக்குப் பொல்லாதவற்றைச் செய்தார்க்குஞ் சால்புடையார் இனியவற்றைச் செய்யாராயின், அச்சால்பு வேறென்ன பயனை உடைத்து? 7

988. இன்மை யொருவற் கிழிவன்று சால்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்.

சால்பென்று சொல்லப்படும் வலி உண்டாகில், ஒருவனுக்கு வறுமை இழிவாகாது. 8

[குறிப்பு : இளிவன்று என்பது அச்சுப்பாடம்.]

989. ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி எனப்படு வார்.

உகாந்த காலம் வருங்காலத்து அன்றி வாராக் காலத்து வந்தாலுஞ் சால்புடையார் தங்கள் சான்ருண்மை தவருர், 'சான்ருண்மைக்குக் கடல் எனப்படுவார்.

கடல் எல்லை தப்பினுஞ் சான்ருண்மைக் கடல் எல்லை தப்பாது என்றது. சான்ருண்மைக்குக் கடல் எனப்படுவார் சான்ருண்மை தவருர் என்க. 9

990. சான்றவர் சான்ருண்மை குன்றி னிருநிலம்
தாங்காது மன்னே பொறை.

நிறையுடைய சான்றவர் தங்கள் சான்ருண்மையாகிய நிறை தப்பில் மற்றைப் பெரிய நிலம், பாரத்தைத் தாங்காது தள்ளி விடும்.

[குறிப்பு : *இருநிலந்தான் என்பது அச்சுப்பாடம்.*]

சான்ருண்மை முற்றும்.

---

## 100. பண்புடைமை

*அஃதாவது, பெருமை, சான்ருண்மை வழுவாமை நின்று அவரவர் குணம் அறிந்து நடந்து கொள்ளுதல். 'பண்பெனப் படுதல் பாடறிந் தொழுகல்' என்பதனுல் அறிக.*

991. எண்பதத்தா னெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

*யாவரிடத்தும் எளிய செவ்வியராதல் கிடைத்தால், பண்புடைமை யென்னும் வழக்கு கிடைத்தல் எளிதென்று சொல்லுவர் நூலோர்.*

எண் : *எளிமை.* பதம் : *செவ்வி.* 1

992. அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

*பிறர் மேல் அன்புடைமையும், உலகத்தோடு அமைந்த குடியின் கட் பிறத்தலும், ஆகிய இவ்விரண்டும் ஒருவனுக்குப் பண்புடைமை என்று உலகத்தார் சொல்லி வழங்கும் வழக்கமாம்.* 2

993. உறுப்பொத்தல் மக்களொப் பன்ருல் வெறுத்தக்க
பண்பொத்த லொத்ததா மொப்பு.

உடம்புறுப்பால், பண்பில்லாத மக்கள் பண்புடை மக்களோடு ஒத்தல், ஒப்பன்று; உலகத்தாரால் வெறுக்கத் தக்கது. பண்பால் ஒப்பதே ஒப்பாம்.

பிணமான போது உடம்பு வெறுக்கப்பட்டது; பண்பு விரும்பப்பட்டது; ஆதலால் வெறுக்கத்தக்கது என்க. 3

[குறிப்பு: ஒப்பதாம் என்பது அச்சுப்பாடம்.]

994. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.

நீதியையும் அறத்தையும் விரும்புதலால் தமக்கும் பிறர்க்கும் பயன் படுதலுடையார் பண்பினைப் பாராட்டி நிற்பர் உலகத்தார்.

புரிதல்: விரும்புதல்; செய்தலும் ஆம். 4

995. நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

நகைத்து விளையாடு மிடத்தும் இகழ்ச்சி செய்தலின்னாதாகலான், பிறர் குணமறிந்து ஒழுகுவாரிடத்துப் பகையுள்ள வழியும் இகழ்ச்சி உளவாகா, இனிய பண்புகளே உளவாவன. 5

996. பண்புடையார் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்.

பண்புடையாரிடத்தே உலகியல்பு உண்டாயிருத்தலால் எஞ்ஞான்றும் உலகியல்பு நடந்து வருகின்றது. பண்புடையாரிடத்தில்லையாயின் உலகியல்பு மண்ணிடத்து வீழ்ந்து மாய்ந்து போவதாம்.

உலகியில்பாவது; மானம், குலம், ஈகை, ஒப்புரவு, நட்பு முதலாயின பல நன்மைகள் என்க. இவை பண்புடையாரிடத்திருத்தலால் உலகத்தினும் நடக்கின்றது. 6

997. அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

நன் மக்கட்கு உரிய பண்பில்லாதவர், இரும்பைத் தேய்க்கும் அரத்தின் கூர்மை போலக் கூர்மை யுடையரே ஆயினும் ஓரறிவியற்கை யாகிய மரத்தினை ஒப்பர். 7

998. நண்பற்று ராகி நயனிலசெய் வார்க்கும்
பண்பாற்று ராதல் கடை

தம்மிடத்தில் நட்புச் செய்யாமல் பகை செய்வார்க்கும் தாம் பண்புடையராய் ஒழுகாமை, அறிவுடையார்க்கு, அவர் கடையராம்.

பண்பு செய்யாராதல், எனப் பதம் அறிக. 8

999. நகவல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலின்பாற் பட்டன் றிருள்.

பகைமை பற்றி மாயிரு ஞாலத்தில் ஒருவரோ டொருவர் கலந்து நகைத்து மகிழ்ந்து விளையாட வல்லரல்லார்க்குப் பகற்காலத்து இராத்திரிக் காலம் வந்து கலந்து இருட்டியது போலாம்.

பகைமையாற் கண்டுங் காணுமல் முகஞ்சாய்த்துப் போதலால் பகலின்பாற் பட்ட இருள் என்க. மாயிரு ஞாலம் : பெரிய பூமி. பகலின்பாழ் பட்டன்றிருள் என்றும் பாடம். 9

[குறிப்பு : நகல்வல்ல, பகலும்பால் என்பன அச்சுப்பாடங் கள்.]

1000. பண்பில்லான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

பண்பில்லான் முன்னை நல்வினையான் வந்த பெருஞ் செல்வம் எவர்க்கும் பயன் படாமையால் அச்செல்வங் குணங் கெட்டது. குணங் கெட்ட கலசத்திலிருந்த பால் குணங்கெட்டது போலாம்.

நல்ல பால் கலசத்தின் பொல்லாக் குணத்தினுற் கெட்டது போல நல்ல செல்வம் பொல்லாக் குணம் உடைவனிடத்திருந்த தனுற் குணங் கெட்டது என்க.

கலம் : கலசம். 10

[குறிப்பு : பண்பிலான் என்பது அச்சுப்பாடம்.]

பண்புடைமை முற்றும்.

---

## 101. நன்றியில் செல்வம்

*அஃதாவது, பொருளைத் தேடினவனுக்கும் பிறருக்கும் பயன் படுதலில்லாத செல்வத்தினியல்பு. செல்வமுடையான் குற்றத் தைச் செல்வத்தின் மேல் வைத்தது.*

1001. வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில்.

*தன் மனையெல்லாம் நிறையத் தேடிவைத்து உலோபத்தால் அப்பெரும் பொருளை உண்ணாதவன் இருந்துஞ் செத்தானும். அவனால் செய்யக் கிடந்ததொரு உரிமையில் மாட்டாமையால் செத் தானும்.* 1

1002. பொருளானா மெல்லாமென் றீயா திவறும்
மருளானா மாணாப் பிறப்பு.

*பொருளொன்றும் உண்டாக, அதனால் எல்லாம் உண்டாம், என்று அறிந்து அதனை ஈட்டிப்பின் தானும் உண்ணாது பிறர்க்கும் ஈயாது பொருள் மேல்* ஆசை பற்று மயக்கத்தாலே செத்தபின்பு பொல்லாத பேயாய்ப் பிறப்பானும்.

*மருள் : மயக்கம் ; மாணாப் பிறப்பு : பேய்ப் பிறப்பு.* 2

1003. ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

பொருள் தேடுதல் மேல் ஆசை வைத்துத் தேடிய பொருளாற் புகழைத் தேடாத மக்கள் சாகாமல் எல்லாரும் காணத் தோற்றியிருப்பது நிலத்திற்குப் பாரமாம்.

*நிலத்திற்குப் பாரமல்லாமல் பிறர்க்கு உதவியில்லை என்றது.*

1004. எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரான்
அச்சப் படாஅ தவன்.

*ஒரு பொருளும் கொடுத்தறியாமையின் ஒருவராலும் நச்சப் படுதலில்லாதவன் செத்தால் நமக்கு ஒழிந்து வருவது யாதென்று எண்ணும் கொல்லோ ?*

எல்லாப் பொருளும் வைத்துச் சாகின்றவன் ஒழிந்து வருவது யாதெனக் கருதுவான் கொல்லோ என்றது. ஒழிந்து நிற்கும் புகழ் யாது என்றுமாம். ஒழிந்து நிற்பதும் வருவதும் புகழும் புண்ணியமும். 4

1005. கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

பிறர்க்குக் கொடுப்பதும் தான் உண்பதும் இல்லார்க்குப் பலவாகிய கோடி பொருளுண்டாயினும் ஒன்றுமில்லாத வறியனும்..

இரண்டு மில்லாதவனுக்கு ஒன்று மில்லை யென்க. ஒன்று மில்லாதவர் போற் பயனிரண்டும் இழந்தாராம் என்றது.

1006. ஏதம் பெருஞ்செல்வம் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
றீத லியல்பிலா தான்.

தானனுபவியான் தக்கார்க்கு ஒன்றுங் கொடான் இரண்டியற்கையும் மில்லான் பெருஞ் செல்வம் அவனுக்கு வந்த துன்பமாம்.

தானும் அனுபவியான் தக்கார்க்கும் கொடாதவன் பெருஞ் செல்வம் தேடலுங் காத்தலுந் துன்பமாதலின் துன்பமாயிற்று. 6

1007. அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றா டமியள்மூத் தற்று.

ஒரு பொருளும் இல்லாராயினர்க்கு ஒன்றினையும் கொடாதவன் செல்வம் வைத்தவன் சாதல், பெண்களில் மிக்க நலம் பெற்றாளொருத்தி மணஞ்செய்து கொடுப்பார் இன்மையில் கணவனின்றித் தனித்திருந்து கிழவியாய்ச் செத்தவளோடு ஒக்கும். 7

1008. நச்சப் படாதவன் செல்வ நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று.

ஒருவராலும் நச்சப்படாத கொடுமையாளன் செல்வம் ஊருக்கு நடுவே நச்சுமரம் பழுத்தது போலாம்.

நச்சு மரத்தின் பழத்தை நச்சினால் சாவுக்கு வருவதால், நச்சாத நச்சுமரம் பழுத்தது போலாம்; ஒருவராலும் நச்சப்படாத கொடுமையாளன் செல்வம் என்க.

1009. அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்.

ஒருவன் கொடாமைப் பொருட்டுச் சுற்றத்தார் நட்டாரிடத்து அன்பை ஒழித்து வேண்டியதனைப் புசியாது தன்னை வருத்தப் படுத்தி வறியார்க் கீந்து புண்ணியம் பெறுதலைக் கருதாது தேடிய நல்ல பொருளை அவனிருக்கவும் பிறர் கொண்டு போவார்.

அவன் பிள்ளைக்கு முதவாது; அரசன், கள்வர், நெருப்பு முதலாயினர் கொள்வர் என்க.

**1010. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி**
**வறங்கூர்ந் தனைய துடைத்து.**

புகழினையுடைய செல்வத்தினையுடையவர் யாவர்க்குங் கொடுத்து வறியராய்க் கொடுத்தற்குப் பொருளில்லாமலிருப்பது, மேகம் மழை பொழிந்து தன்னிடத்து நீரில்லாமல் செல்வது போலும்.

[குறிப்பு: *சிறுதுளி என்பது சில அச்சுப் பதிப்பிற்காணும் பாடம்.*]

நன்றியல் செல்வம் முற்றும்.

---

## 102. நாணுடைமை

அஃதாவது, பெரியோர்க் கொவ்வாத கருமங்களின் நாணுடையராதல்.

**1011. கருமத்தா னாணுத னாணுந் திருநுதல்**
**நல்லவர் நாணுப் பிற.**

நன்மக்கள் நாணுவது இழிந்த கருமங் கண்டவிடத்து இது நன்மையன்று என்று நாணுதல்; அதுவன்றி மன மொழி மெய்கள் ஒடுக்கத்தான் வருவனவோ என்னில், அது நன்மக்களாகிய ஆண் பாலன்றிப் பெண்பாலுள் கற்புடைய திருநுதலினையுடைய நல்ல குலமகளிர் நாணங்களாம்.

ஆண்பாலில் நன்மக்கள் கருமங் காரணமாக நாணுவர்; அது செயற்கை நாண்; குலமகளிர் நாண் இயற்கை நாண் என்றது. நாண் இருவகையாக நாணின் இலக்கணம் கூறியது. 1

**1012. ஊனுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல**
**நாணுடைமை மாந்தர் சிறப்பு.**

ஊணும் உடைமையும் மற்றும் ஒழிந்தனவும் மக்களுயிர்க் கெல்லாம் வேருகாது பொதுவாம் ; இனி வேருவதும் நன்மக்கட்குச் சிறப்பாவதும் ஊணும் உடைமையும் அல்ல நாணமாம்.

ஊணும் உடைமையும் ஒழிந்தனவும் பொது ; நாண் சிறப்பு என்க. 2

1013. ஊனைக் குறித்த வுயிர்க்கெல்லா நாணென்னும்
நன்மை குறித்தது சால்பு.

ஊனைக் குறித்து விடாதிருக்கும் உயிரெல்லாம்; அப்படிபோல் நாணென்றும் நன்மையைக் குறித்து விடாதிருப்பர் சான்ருேர்.

ஊனை விட்டு நீங்கில் உயிர்போம் ; நாணைவிட்டு நீங்கிற் சால்பும்போம் எனக் கொள்க. 3

[குறிப்பு : உயிரெல்லாம் என்பது அச்சுப்பாடம்.]

1014. அணியன்ருே நாணுடைமை சான்ருேர்க்கஃ தின்றேல்
பிணியன்ருே பீடு நடை.

சான்ருேர்க்கு நாணுடைமை ஆபரணமாம் ; அவ்வாபரண மில்லையாயின் அவர் பெருமிதத்தை உடைய நடை கண்டார்க்குப் பிணியாம். 4

1015. பிறர்பழியுந் தம்பழிபோ ஞணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு.

பிறர்க்கு வரும் பழியையும் தமக்கு வரும் பழிபோல ஒப்ப மதித்து நாணுவாரை, உலகத்தார், நாணிருக்கும் இடன் என்று சொல்லுவர்.

உறைபதி : உறைந்திருக்கும் இடம். 5

[குறிப்பு : தம்பழியும் என்பது அச்சுப்பாடம்.]

1016. நாண்வேலி கொள்ளாது மன்னே வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

உயர்ந்தவர் தமக்குக் காவலாகிய நாண் என்னும் நிலத்தைக் கொள்வதன்றி, அகன்ற ஞாலத்தைக் கொள்ள விரும்பார்.

மேலாயவர் வியன் ஞாலத்தைக் கொள்ளாது பேணலாம் வேலியைக் கொள்ளும் என்றது.

வேலி : காவலும் நிலமும். 6

**1017.** **நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டால்**
**நாணிறவார் நாணாள் பவர்.**

நாண் சிதையாமற் பொருட்டு உயிரை விடுவர்; உயிர் சிதையாமற் பொருட்டு நாணினை விடார், நாணினை ஆள்பவர். 7

[குறிப்பு : நாண்டுறவார் என்பது அச்சுப்பாடம்.]

**1018.** **பிறர்நாணத் தக்கது தானாணா னாயின்**
**அறநாணத் தக்க துடைத்து.**

கேட்டாருங் கண்டாரும் நாணத்தக்க பழி ஒருவன் தான் நாணாது செய்யுமாயின், அவனைக் கண்டால் தன்மதேவதை நாணி நீக்கத்தக்க குற்றமுடைத்து.

அறன் : தன்மதேவதை. 8

[குறிப்பு : அறநாணத் தக்கது என்பது அச்சுப்பாடம்.]

**1019.** **குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடும்**
**நாணின்மை நின்றக் கடை.**

ஒருவன் ஒழுக்கநெறி பிழைக்குமாயின், அவன் குலம் ஒன்றினையுஞ் சுடும்; நாணினை நீத்துவிட்டவிடத்து அவன் நலம் எல்லாவற்றையுஞ் சுடும். 9

**1020.** **நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை**
**நாணா லுயிர்மருட்டி யற்று.**

நாணந்தன் அகத்தில்லாத மக்கள் உயிர் உடையார் போலத் திரிவது, மரத்தாற் செய்த பாவை கயிற்றால் உயிருடையார் போல மயக்கினாற் போலும். 10

நாணுடைமை முற்றும்.

---

## 103. குடிசெயல் வகை

அஃதாவது, ஒருவன் தான் பிறந்த குடியைச் செல்வக் குடியாகச் செய்தல்.

1021. கருமஞ் செயவொருவன் கைதூவா னென்னும்
பெருமையிற் பீடுடைய தில்.

*கருமஞ் செய்யுமிடத்து ஒருவன் கை ஒழியாமல் பல கருமங் களையும் செய்யுமாயின்,* அப்பெருமையினுல் அவன் பிறந்த குடி பெரிய குடியாம்.

கை தூவாமை : கையொழியாமை. பெருமையினுற் பெருமை யுடையது வீடு என்க. இல் என்பது வீடு. பெருமையினுற் பெருமையுடையது பிறிதில்லை என்றும் ஆம். 1

[குறிப்பு : *கைதூவேன் என்பது அச்சுப்பாடம்.*]

1022. ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டின்
நீள்வினையான் நீளுங் குடி.

*ஆள்வினை யுடைமையும் நிறைந்த அறிவுடைமையும் என்று சொல்லப்பட்ட இரண்டினையுடைய இடைவிடாக் கருமஞ் செய் வான் ஒருவன் குடி, பெரிய குடியாம்.*

ஆள்வினை : பலகருமம். 2

1023. குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.

*தன் சிறிய குடியைப் பெருங்குடியாகச் செய்யக் கடவேன் என்று கொண்டு அதற்கேற்ற கருமங்களின் முயலும் அவனுக்குத் தெய்வந்தான் புடைவையை வலிந்து கட்டிக்கொண்டு தான் முந்துற்று நிற்கும்.*

*மடி : புடைவை. தறல் : உடுத்தல்.* 3

1024. சூழாமைத் தானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு.

தம் குடிக்காம் வினையைத் தாழ்வுபடாமல் முயன்று செய்வாராயின், வினை முடிக்கும் திறம் ஆராய்ந்து பார்க்க வேண்டாமல் தானே முடிவெய்தும்.

தம் குடி என்பது : தங்குடிக்கேற்ற தொழில் என்க. உஞற்றல் : செய்தல். 4

[குறிப்பு : சூழாமல் என்பது அச்சுப்பாடம்.]

1025. குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாய்ச் சுற்று முலகு.

குற்றமாயின செய்யாது குடிக்கேற்ற வினைசெய்து வாழ்கின்றவனைச் சுற்றமாகத் தாமே சென்று சுற்றிக்கொள்வர் உலகத்தார்.

குடிக்கேற்ற வினை செய்யச் செல்வக்குடியாக, அயலாருஞ் சுற்றத்தாராகச் சுற்றுவர் என்க. 5

[குறிப்பு : சுற்றமாச் சுற்றும் என்பது அச்சுப்பாடம்.]

1026. நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல்.

ஒருவனுக்கு நல்லாண்மை என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, தான் பிறந்த குடியினைத் தானாளுந் தன்மை தனக்காக்கிக் கொண்டானாகில்.

இல்லாண்மை ஆக்கிக்கொளல் : கருமத்தால் தான் எல்லார்க்கும் தலைவன் ஆதல். 6

1027. அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை.

செருக்களத்துப் பலருள்ளும் ஒரு வன்கண்ணன், போர் செய்து வென்று எல்லாரையும் காப்பதுபோலக் குடியின்கட் பிறந்தார் பலர்மேற் பாரத்தையும் மாற்றித் தாம் பொறுக்க வல்லாரே பாரந்தாங்க வல்லார்.

பொறை : பாரந் தாங்கல். 7

**1028.** **குடிசெய்வார்க் கில்லை பருவ மடிசெய்து**
**மானங் கருதக் கெடும்.**

*தம் குடியினை உயரச் செய்வார், செயலையே நோக்கிச் செய்யாது, காலத்தை நோக்கி மடியாகிய சோம்பு செய்துகொண்டு, மானத்தையும் கருதுவாராயின், குடி கெடும் ; ஆதலால் அவர்க்குக் கால நியதி இல்லை.*

*பருவம் : காலம். மடி : சோம்பு.* 8

**1029.** **இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்**
**குற்ற மறைப்பா னுடம்பு.**

*தன் குடும்பம் உற்ற குற்றத்தை நீக்குவான் உடம்பு,* துன்பத்திற்கே கொள்கலமோ, இன்பத்திற்கே கொள்கலமோ தெரிகிலம்.

*தொழில் செய்வதனால் துன்பம் என்றும், இல்லறத்தினால் இன்பமென்றும் சொல்வார், கொள்கலங் கொல்லோ என்று குறிப்பு மொழியால் சொல்லியது என்க. கொள் கலம் : கொள்ளும் பாத்திரம். எந்நாளும் விடாது தொழில் செய்வானை நோக்கிப் புகழாப் புகழ்ச்சியாகச் சொல்லியது.* 9

**1030.** **இடுக்கண்கா லூன்றிட வீழு மடுத்தூன்ற**
**நல்லாளில் லாத குடி.**

துன்பமாகிய பொறை காலாகிய அடிமரத்தில் தோன்ற அப் பொறை மிகுத்து அசைந்து முரிந்து சாய, ஒரு பற்றின்றி வீழும், அக்காலத்துப் பற்றாகக் கொடுத்துத் தாங்கவல்ல நல்ல ஆண் மகன் பிறவாத குடியாகிய மரம்.

இடுக்கண்கால் கொன்றிட என்று *பாடம்* ஓதுவாருமுளர்.

[குறிப்பு : *கால்கொன்றிட, அடுத்தூன்று, நல்லாளி லாத என்பன அச்சுப்பாடங்கள்.*]

குடி செயல் வகை முற்றும்.

---

## 104. உழவு

அஃதாவது, உழவுத் தொழில் செய்தல்.

1031. சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனல்
உழன்று முழவே தலை.

உழவுத் தொழிலான் மெய்வருத்தம் நோக்கிப் பிற தொழில்களைச் செய்து திரிந்தும் முடிவிலே உழுவாரிடத்தாயிற்று உலகம்; ஆதலால் எல்லா வருத்த முற்றும் தலைமையான தொழில் உழுதலே

பிற தொழிலால் பொருள் தேடி உழுவாரிடத்துக் கொள்ள வேண்டுமாதலால், உழுதலே வேண்டும் என்கிறது. 1

[குறிப்பு : உழந்தும் என்பது அச்சுப்பாடம்.]

1032. உழுவா ருலகத்தார்க் காணியஃ தற்ரு
தெழுவாரை யெல்லாம் பொறுத்து.

உழுவார் உலகத்தாராகிய தேர்க்கு அச்சாணி. உழவுத் தொழில் செய்யா தொழுந்து பிறதொழில் செய்வாரை எல்லாம் தாங்கிப் பொறுத்து நிற்றலான்.

தொழுவாரே எல்லாம் பொறுத்து என்று பாடமோதி, உழ மாட்டாதவர், காப்பவர் செய்யுஞ் செயலெல்லாம் பொறுத்து அவரைத் தொழுவார் என்று உரைப்பாரும் உளர்.

1033. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்.

உழுதுண்டு வாழ்கின்றவரே தம்மிச்சையில் வாழ்கின்றவர் ; மற்றையரெல்லாம் பிறரைத் தொழுது அதனல் உண்டு, அவர் பின் செல்பவர்.

கொடுப்பவரிச்சையில் திரிதலால் தம்மிச்சையில் திரிபவரல்லர் என்க. 3

1034. பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்.

பல வேந்தர் குடை நிழலும் தம் மன்னன் குடை நிழலிலே தங்கி நிற்பக் காண்பர், அலகாகிய நெற்கதிர் விளைவிக்கும் தொழிலுடையர்.

*அலகு : நெற்கதிர். நீழல் : தொழில்.* பல குடை நீழலுந் தங் கொடைக் கீழ்க் 'காண்பர் என்றும் பாடம்; அதற்குப் பொருள் தாம் கொடுக்கும் கொடைக்கை நீழலிற் காண்பர். 4

1035. இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

*தம் கையால் உழுதுண்டலை இயல்பாக உடையார், பிறரைத் தாம் இரவார்; தம்மை இரப்பார்க்கு ஒன்றினைக் கரவாது கொடுப்பர்.*

*மாலை : இயல்பு. கரத்தல் : ஒளித்தல்.* 5

1036. உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை.

உழுதுண் வாழாமற் கை மடங்குமாயின் யாவரும் அருந்துவன பொருந்துவன எல்லாம் விட்டுத் துறந்தோம் என்னும் தவமுடையார்க்கும் நிலையில்லை.

ஒன்றினை மனத்தால் விழைதலும் ஒழிந்தவர் என்றும் ஆம். 6

1037. தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.

*ஒரு பலம் புழுதி காற்பலமாக உழுது காயப்போடுவானாகில் ஒரு பிடி எருவும் போடாமல் நன்றாக நிறைய விளையும்.*

*தொடி : ஒரு பலம்.* கஃசு : காற்பலம். 7

[குறிப்பு : *கஃசா, சாலப் என்பன அச்சுப்பாடங்கள்.*]

1038. ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபின்
நீரினு நன்றதன் காப்பு.

*உழுதலே நன்று; அதனினும் நன்று எருவிடுதல்; அதனினும் நன்று விதைத்து முளைத்த பின்பு களை வெட்டுதல்; அதனினும் நன்று நீர் விடுதல்; அதனினும் நன்று செவற் காத்தல்.* 8

[குறிப்பு: கட்டபின் என்பது அச்சுப்பாடம். உரையில், செவ்வன் காத்தல்' என்பதனைச் 'செவற் காத்தல்' எனப் பிழை பட எழுதி யுளார் போலும்.]

1039. செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
இல்லாளி னூடி விடும்.

பயிர்செய்யும் நிலத்தின்கட் செல்லாமல், பயிர்த் தலைவன் தான் இருந்து, செய்வாரைக் கொண்டு செய்விப்பானாகில், நில மாகிய குலமகள் தன் மனையாளைப்போலத் தன்னுள்ளே வெறுத்து அவனுடனே பிணங்கி விடும்.

கிழவனொடு இல்லாளைப்போல ஊடி விடுதல். கிழவன்; பயிர்த் தலைவன். மனையாள் தலைவன் பிரியிற் பிணங்குவது போல நிலம் மிகுதியாக விளையாதென்க. 'தானேறிப் பாரா உழவும்' என்ற போற் காண்க. 9

1040. இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்
நிலமென்னு நல்லா ணகும்.

யாம் வறியமென்று மடிந்திருப்பாரைக் காணில் நிலமகள் என்னும் நல்லாள் நகைப்பள்.

நாமிருப்ப நம்மிடத்தில் உழுது உண்ணுமல் இருப்பது என் இவன் வறிய னாக என்று நகைக்கும்.

உழவு முற்றும்.

---

## 105. நல்குரவு

அஃதாவது, வறுமை; உண்பன உடுப்பன யாவும் இல் லாமை.

1041. இன்மையி னின்னாத தியாதெனி னின்மையின்
இன்மையே யின்னா தது.

ஒருவனுக்கு வறுமை போலப் பொல்லாதது யாது எனின், வறுமைப் போலப் பொல்லாதது அவ்வறுமை தானே பொல்லாது; பிறிதில்லை.

இன்மை: வறுமை. இன்னாது: பொல்லாது. 1

1042. இன்மை யெனவொரு பாவி மறுமையும்
இம்மையு மின்றி வரும்.

*வறுமையென்று சொல்லப்பட்ட ஒரு பாவி ஒருவனிடத்து வரும் போது மறுமை இன்பமும் இம்மை இன்பமும் இல்லாமல் வரும்.*

பொருளில்லாமையால் மறுமைக்குப் புண்ணிய மில்லை ; இம்மைக்குப் புசிப்பன இல்லை என்க. 2

1043. தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை.

*நல்குர வென்று சொல்லப்படும் ஆசை வந்து பிடித்தால், அவனுடைய பழைய குடி மரபினையும் பழைய புகழினையும் ஒருமிக்கக் கெடுக்கும்.*

தோல் என்பது : பெருமை, புகழ் ; உடம்பு என்றும் ஆம். ஆசையில்லார்க்கு வறுமை இல்லை ; ஆதலால் ஆசையே வறுமை என்றார். 3

1044. இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்.

*இகழ்ச்சியாகிய சொல் பிறவாத குடிப்பிறந்தாரிடத்தும் இகழ்ச்சியாகிய சோர்வினை வறுமை யுண்டாக்கும்.*

இளிவந்த சொல் : சோர்வு, தளர்ச்சி ; மறதியும் ஆம். இன்மை : வறுமை.

1045. நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.

*நல்குரவாகிய வறுமையென்று சொல்லப்படும் துன்பம் ஒன்று வரவே பல துன்பங்களும் வந்து விளையும்.*

*நல்குரவு : வறுமை. இடும்பை : துன்பம். படுதல் : உண்டாதல்.* 5

1046. நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

*மெய்ந் நூற் பொருளைத் தெளிய அறிந்து சொன்னாராயினும் வறுமை கூர்ந்தார் சொல்லிய சொற்பொருள் இகழ்ச்சிப்படும்.*

வறுமையாளர் சொல்லிய மெய்ப்பொருள் கேட்டவர் இவர் நம்மை யாதானுங் கேட்பர் என்று இகழ்வர் என்க.

நல் கூர்ந்தார் : வறுமை கூர்ந்தார். 6

**1047. அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.**

புண்ணியஞ் சாரா வறுமையாளனைப் பெற்ற தாயும் பிறனைப் பார்ப்பது போலப் பார்ப்பள்.

அறஞ்சாரா வறுமை : முற் பிறப்பிற் புண்ணியஞ் செய்யா வறுமை. 7

**1048. இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலு நிரப்பு.**

நேற்றுத் துன்பப் படுத்தியது போல இன்றைக்குந் துன்பப் படுத்த வருங் கொல்லோ வறுமை ; வந்தால் யாது செய்வேன்.

நெருநல் : நேற்று. நிரப்பு : வறுமை. 8

**1049. நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதானுங் கண்பா டரிது.**

மந்திரத்தால், மருந்தால், நெருப்பினுங் கிடந்து உறங்கலாம் ; வறுமை வந்தால் யாதொன்றினாலும் கண்ணுறங்குவ தரிது. 9

[குறிப்பு : யாதொன்றும் என்பது அச்சுப்பாடம்.]

**1050. துப்புர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்குங் காடிக்குங் கூற்று.**

புசிக்கப்படும் பொருள் இல்லாதவர் செய்ய வேண்டுவது யாது என்னில், முற்றத்துறக்க வேண்டும் ; துறந்து தவசியாகாமற் றிரிவது பிறர் மனையில் உப்பிற்குங் காடிக்குங் கூற்றுவனும்

துப்புரவு : புசிப்பு. துவரத் துறத்தல் : முழுதுந் துறத்தல். 10

நல்குரவு முற்றும்.

---

## 106. இரவு

அஃதாவது, வறுமையால் இரத்தல்.

1051. இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பின்
அவர்பழி தம்பழி யன்று.

வறுமை கூர்ந்தார் இரக்கத் தக்கவரைக் காணில் அவரிடத்து இரக்க ; இரந்தால் அவர் இல்லை யென்றாராயின் அவர்க்குப் பழியாகாமற் றமக்குப் பழியாகாது.

கரத்தல் : இல்லை என்றல் ; ஒளித்தலும் ஆம். இரப்பார் இடம் அறிந்து இரக்க என்றது. 1

4052. இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின்.

இரத்தலாவது துன்பமே யல்லாமல் இன்பமும் ஆம் ; ஒருவற்கு இரந்த பொருள்கள் ஈவார் துன்பமுறாமல் தானுந் துன்பமுறாமல் வருமாயின். 2

1053. கரப்பில்லார் நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து.

ஒளித்த லில்லாத நெஞ்சுடைய கொடுக்கு முறைமை யறிந்து கொடுப்பார் முன்னே நின்று இரத்தல் வறுமை யாளர்க்கு ஓர் அழகுடைத்து.

ஏர் : அழகு. கடனறிவார் : இரப்பவர் மான மறிவார். 3

[குறிப்பு : காப்பிலா நெஞ்சின் என்பது அச்சுப்பாடம்.]

1054. இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவினுந் தேற்றாதார் மாட்டு.

தமக்கு உள்ளதை ஒளித்தல் கனவினும் அறியாதாரிடத்தும் சென்று இரத்தல், தாம் ஒருவற்கு ஈதலே போலும். 4

1055. கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது.

*சொல்ல மாட்டாமல் முன்னே நிற்றல் மாத்திரத்தால் இரப்பார், உயிரோம்பற் பொருட்டு அதனை மேற்கொண்டு போகின்றது, தமக்கு உள்ளது ஒளியாமல் கொடுப்பார் சிலர் உலகத்து உண்டாய் இருத்தலான்.*

ஒளியாமற் கொடுப்பவர் உலகத்துச் சிலர் இருப்பதனால், கேளாமல் முன்னின்று இரப்பவர் இரப்பினை மேற்கொள்வது என்க. 5

**1056.** **கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை**
**எல்லா மொருங்கு கெடும்.**

*உள்ளத்தில் ஒளித்தலாகிய துன்பம் இல்லாரைக் காணில், மானங் கெடாமல் இரப்பவற்கு வறுமைத் துன்பமெல்லாம் ஒருமிக்கக் கெடும்.* 6

**1057.** **இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம்**
**உள்ளு ளுவப்ப துடைத்து.**

*தம்மை அவமதித்து இழிவு சொல்லாது, பொருள் கொடுப்பாரைக் கண்டால், அவரை இரப்பார் உள்ளம் மகிழ்ந்து உள்ளே உவக்குந் தன்மை யுடைத்தாம்.* 7

**1058** **இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞாலம்**
**மரப்பாவை சென்றுவந் தற்று.**

*வறுமையுற்று இரப்பவர் இல்லையாயின், குளிர்ந்த நிலத்தை யுடைய பெரிய நிவத்தையுடைய பெரிய ஞாலத்துள்ளார் போக்கு வரவுகளும் [உயிருமி]ல்லாத மரப்பாவை யந்திரக் கயிற்றாற் சென்று வந்தாற் போலும்.*

இரப்பார் இல்லையாயிற் கொடுப்பதில்லை ; கொடுப்பதில்லாமையாற் புகழும் புண்ணியமும் இல்லை ; புகழும் புண்ணியமும் இல்லாமையால் இன்பமில்லை ; இன்பமில்லாமையால் மரப்பாவையாம் என்க. 8

**1059.** **ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோள்**
**மேவா ரிலாஅக் கடை.**

கொடுப்பவர் பாற்சென்று இரந்து கொள்வதனை விரும்பா தவர் இல்லாதவழிக் கொடுப்பாரிடத்து என்ன புகழுண்டாம்? யாதும் இல்லை.

தோற்றம் : புகழ். மேவல் : விரும்பல். கடை என்பது : இடம். 'ஈவாருங் கொள்வாரும் இல்லாது, வானத்து வாழ்வாரே வன்கண்ணவர்' என்பதனால் அறிக. 9

**1060. இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை**
**தானேயுஞ் சாலுங் கரி.**

ஈவானுக்குப் பொருள் உதவாத வழி ஈகின்றிலன் என்று அவனை இரப்பான் வெகுளாது ஒழிதல் வேண்டும். வேண்டிய பொழுது உதவாது என்பதற்கு வேறு சாட்சி வேண்டாம்; தன் வறுமையாகிய இடும்பை தானே தனக்குச் சாட்சியாம்.

வெகுளல் : கோபித்தல். நிரப்பிடும்பை : வறுமைத் துன்பம். கரி : சாட்சி. 10

இரவு முற்றும்.

---

## 107. இரவச்சம்

அஃதாவது, மானத்தால் இரப்பதற்கு அஞ்சுதல்.

**1061. கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணும்**
**இரவாமை கோடி யுறும்.**

தமக்குள்ளது ஒளியாமல் உவந்து கொடுக்கும் கண்போல உரியாரிடத்தும் இரந்து செல்வம் பெறுதலிற் கோடி மடங்கு அதிகம், இரவாமல் இருக்கும் இன்பம். 1

**1062. இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து**
**கெடுக வுலகியற்றி யான்.**

இவ்வுலகத்தைப் படைத்தவன் இன்னுந் தன்னை இரந்து உயிர்வாழப் படைத்தானாகில், இவனும் இரப்பவனைப் போல எங்கும் இரந்து அலம் வந்து கெடுக.

பல் மக்களை இரவாமற் படைத்தும், சில மக்களை இரக்கப் படைத்தும், வைப்பதேன், ஒரு தன்மையாற் படையாமல், என்று இரப்பவன் கூறிய வசை.

**1063. இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்**
**வன்மையின் வன்பாட்ட தில்.**

வறுமையான் வருந்துன்பத்தைத் தாம் அனுவிக்கக் கடவம் என்று கருதாது, *இரந்து நீக்கக் கடவோ மென்று கருதும் வன்மைபோல வன்மைப்பாடு இல்லை.* 3

**1064. இடமெல்லாங் கொள்ளாத் தகைமைத்தே யிடமில்லாக்**
**காலு மிரவொல்லாச் சால்பு.**

*புசிக்கப் படுவன ஒன்று மின்றி வறுமையுற்ற வழியும், பிறர் பாற் சென்று இரக்க உடன்படாத அமைதி, எல்லா வுலகும் நிறைந்து பின்னும் பெருகிய பெருமை உடைத்து.*

*இரவொல்லாமை : இரவுக்குப் பொருந்தாமை.* சால்பு - அமைதி. *தகை : பெருமை என்க.* 4

[குறிப்பு: *தகைத்தே என்பது அச்சுப்பாடம்.*]

**1065. தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த**
**துண்ணலி னூங்கினிய தில்.**

*தெளிந்த நீர்போலச் சமைத்த கூழாயினும் தான் தொழில் செய்து வந்ததாயின், அதனை யுண்ணலின்மேல் இனிய தொன்று மில்லை.*

புற்கை : கேழ்வரகு முதலாய கூழ். தாள் : தொழில். *தந்தது : கொடுத்தது.* 5

**1066. ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்**
**கிரவி னிளிவந்த தில்.**

*தண்ணீர் குடியாமல் நிற்கும் பசுவினுக்குந் தண்ணீர் தரவேண்டும் என்று இரந்து சொல்லும் போதும், அவ்விரப்பைப் போல ஒருவர் நாவினுக்கு இழிவுவந்தது பிறிதில்லை.*

*ஆவினைக் காத்தோம்பல் பெரிய அறம்; ஆதலின் அதற்கு நீர் எளியபொருள் விலை கொடுத்துக் கொள்ள[வேண்டாத] பொருள்; அதனை யிரந்தாலும் நாவினுக்கு இழுக்காம் என்றது.* 6

**1067. இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பின்
கரப்பா ரிரவன்மி னென்று.**

*இப்பாரை யெல்லாம் யானிரப்பன்,* ' கேளுங்கோள் நுமக்கு இரக்க வேண்டுமாயின், உள்ளது கொடாமல் ஒளிப்பாரிடத்து இரக்க வேண்டாம் ' என்று

ஒளிப்பவரிடத்து இரக்க வேண்டா. ஒளியாமற் கொடுப்பவரிடத்து இரந்து கொண்மின்கள் என்று இரக்கின்றேன் என்றது. 7

**1068. இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.**

*வறுமை யென்னும் கடலை இதனாற் கடப்போம் என்று ஒருவன் ஏறிய இரத்தல் என்னும் ஏமாப்பில்லாத் தோணி அக் கடலினோடு மிடத்துக் கரத்தல் என்னுங்* கற்பாறையிற் *றட்டுப் படுமாயின் பக்கு விட்டு உடைந்து போம்.*

ஏமாப்பு : இறுமாத்தல். பக்கு : ஒட்டு விடுதல். 8

**1069. இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
உள்ளதூஉ மின்றிக் கெடும்.**

*உடையார் முன் இல்லார் சென்று இரந்து நிற்றலின் கொடுமையை நினைத்தால் உள்ளமுருகும் ; இனி அவர் இல்லை என்னுங் கொடுமையை நினைத்தால்* உருகியது போக நின்றது நில்லாமற் கெடும். 9

**1070. கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர்.**

*கரப்பார் இல்லை என்று சொன்ன அளவிலே இரப்பார்க்கு உயிர் போகும் ; இனி இல்லை யென்று சொல்வார்க்கு உயிர் யாங் கொளித்து நிற்குமோ போகாமல்.*

இல்லை என்ற அளவிற் கேட்பார்க்கு உயிர் போகச் சொல்வார்க்கு உயிர் போகாது என்கொலோ என்றது. 10

இரவச்சம் முற்றும்,

---

## 108. கயமை

அஃதாவது, பொல்லாக் குணம் எல்லாமுடைய கீழ்மக்களது தன்மை கூறியது.

**1071. மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாங்கண்ட தில்.**

*வடிவினால் மக்களேயே யொப்பர் கயவர். அவரன்ன ஒப்பார் இப்படி யாம் கண்டதில்லை.* 1

**1072. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.**

மக்களைப் போலக் கயவருமிருக்கின்றார் ; இது என்ன ஆச்சரியம் என்றது.

*நன்றறிவார் கவலை யுடையவர் ;* கயவர் நெஞ்சிற் கவலை யில்லாமையாற் செல்வமுடையவராம்.

*நன்மைகளை அறிவார் பாவம் வருதற்கு அஞ்சுதலாற்* கவலை *யுளர் ;* கயவர் *பாவத்திற்கு அஞ்சாமையாற் செல்வமுடையவர் ; நெஞ்சிற் கவலை யில்லை என்றது. அவலம் : துன்பம்.* 2

**1073. தேவ ரனையர் கயவ ரவரன்ன
மேவின செய்தொழுக லான்.**

தேவருங் கயவரும் ஒரு தன்மையர் ; யாதினாலென்னில், தேவரும் தடையின்றி விரும்பினவற்றைச் செய்வர் ; கயவருந் தடையின்றி விரும்பினவற்றைச் செய்தொழுகலான்.

அவர் நன்மை செய்வர் ; இவர் தீமை செய்வர் என்று குறிப்பு மொழியாற் கூறியது. 3

[குறிப்பு : *அவருந்தாம், என்பதும், மேவன என்பதும் அச்சுப் பாடங்கள்.*]

**1074. அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.**

*கீழ்மகனாயினான் தன்னிற் சுருங்கி அகப்பட்டியாய் ஒழுகுவாரைக் கண்டானாயின், அவ்வொழுக்கத்தின்கண் அவரின் தான் மேம்பட்டு அதனால் தன் மிகுதி காட்டி இறுமாக்கும்.*

*அகமாகிய பட்டி : அகப்பட்டி.* பட்டியாவது : கள்ளத்தின் வேண்டிய வாறு ஒழுகல். பட்டிமாடு என்றது போலக் *காண்க.* 4

1075. அச்சமே கீழ்கள தாசார மெச்சம்
அவாவுண்டே லுண்டாஞ் சிறிது.

கயவர்க்கு ஆசாரங் கண்டதில்லை; கண்டது உண்டாயின் அதற்குக் காரணம் அரசன் தண்டிப்பான் என்னும் அச்சமே. அது ஒழிந்தால், ஆசாரத்தால் அவாவப்படும் பொருள் உண்டாஉறிற் சிறிது ஆசாரம் உண்டாம். 5

1076. அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

*தாங்கேட்ட ரகசியங்களை இடந்தோறும் தாங்கிக்கொண்டு சென்று பிறர்க்கெல்லாஞ் சொல்லுதலால், கயவர்* நகரியில் தட்டப் பறை சாற்றுதற்கு ஒப்பார்.

*மறை : இரகசியம்.* 6

1077. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்
கூர்ங்கைய ரல்லா தவர்க்கு.

கயவர், தம் கன்னத்திணைக் குத்தி உடைப்பதாய கொடிய கையை உடையவர்க்குக் கொடுப்பர்; அப்படிச் செய்யாமல் இதமாகக் கேட்பவர்க்குத் தாம் உண்டு கழுவிய கையின் நீரையுந் தெறியார.

*ஈரங்கை : ஈரக்கை. கொடிறு : கன்னம்.* கூர்ங்கை : கொடிய கை.

[குறிப்பு : *கூன்கையர் என்பது அச்சுப்பாடம்.*]

1078. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்
கொல்லப் பயன்படுங் கீழ்.

*மெலியார் சென்று தங் குறையைச் சொல்ல இரங்கிப் பயன் படுவர் மேலாயினர்; மற்றைக் கீழாயினர் கரும்புபோல வலியார் தண்டிக்கப் பயன் படுவர்.* 8

1079. உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ்.

*செல்வமுடையார் பட்டுந் துகிலும் உடுத்துப் பலரோடுங் கூடி அடிசில் உண்டலைக் கீழாயினர் கண்டால், அது பொருது அவர் மேல் வடுவில்லையாயினும் வடுவுண்டாக்கிப் பழிக்கும்.*

**1080. எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.**

*கயவர் தாம் யாதானும் ஒரு துன்பம் உற்றவிடத்து அதுவே பற்றுக் கோடாக விரைந்து தம்மைப் பிறருக்கு அடிமையாக விற்றற்கு உரியர்; அன்றி வேறெத் தொழிற்கு உரியர்?*

கயவர்க்கு ஒரு துன்பம் வரின், தம் மக்களைப் பெண்டிரைத் தம்மை விற்றுக்கொள்வர் என்றது.

கயமை முற்றும்.

*ஒழிபியல் முற்றும்.*

பொருட் பால் முற்றும்.

# 3. காமத்துப் பால்

## 109. தகையணங் குறுத்தல்

ஓரிராச கன்னிகை பல தோழிப் பெண்களோடு கூடி சோலையில் விளையாட வந்தவிடத்து, தோழிமார் எல்லாரும் அம்மனை, பந்து, கழங்கு, பொன்னூசல் விளையாட, சுனையாட பூக்கொய்யப் பிரியும்போது அந்தக் கன்னி ஒரு பொதும்பரின் பச்சை மயிலாடப் பார்த்து நின்றாள்.

அப்போது ஓரிராச குமாரன் பல தோழன்மாருடனே வேட்டை விளையாட்டாகத் தேரேறி வந்து விளையாடும்போது ஒரு வராகம் எதிர்ப்பட்டது. அதனை அவன் துரத்தி வந்தான்; வரும் போது ஒரு காட்டாறு குறுக்கே கிடந்தது; அதனை நீந்தி அந்த வராகம் ஓடத் தேரையும் பாகனையும் நிறுத்திக் காட்டாற்றை நீந்தி வராகத்தைத் தொடரும்போது, அவன் அந்தச் சோலையில் வந்தான். வந்து சுற்றிப் பார்த்து வரும்போது அந்த ராச குமாரன் அந்த ராச கன்னிகையைக் கண்டான். அந்தக் கன்னிகையும் அவனைக் கண்டாள்.

இருவருங் கண்டது காட்சி.

கண்டு காந்தர்வ கலியாணமாகக் கூட நினைத்தான். இவ்வாறு கூடிப் பின்பு கலியாணஞ் செய்து, நாயகி கற்பு வழுவாமல் இல்லறஞ் செய்து இன்பம் உற்றிருத்தல் காமத்துப் பால் என்க.

அது களவுங் கற்புமென இருவகைத்து; தலைவனும் தலைவியும் மூப்பும், இறப்பும், இறையும், உருவும், திருவும், பருவமும், குலமும், அன்பும் முதலியவற்றால் இருவரும் ஒத்துக் கொடுப்பாரும் அடுப்பாரும் இன்றி எதிர்ப்பட்டுப் புணருவது களவு ஆகும். அது பல கிளவித் துறையுளது; அவற்றுள் முதற்கண் தகையணங் குறுத்தல் கூறுகின்றார்.

அஃதாவது, சோலையின் விளையாட்டு விருப்பான் வந்து தனியே நின்றாளை, வேட்டை விருப்பான் வந்து கண்ணுற்ற தலைவன் அவள் அழகை நோக்கித் தான் காம வருத்தமுற்றுச் சொல்லுதல்.

1081. அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் நெஞ்சு.

தலைவி யுருவம் தெய்வப் பெண்களழகிலும் மிக்காய், முன் கண்டறிவன வன்றிச் சிறந்தமையின் அவளைத் தலைவன் ஐயுற்றது.

*இக் கனவிய குழையை யுடையாள் இச் சாரலில் உறையும் தெய்வ மகளோ, அன்றி ஒரு விசேடமாகிய மயிலோ, அன்றி ஒரு மானிடப் பெண்ணோ, இவளை இன்னாள் என்று துணியமாட்டாமல் மயங்கா நின்றது என் நெஞ்சு.*

*எழுதலாகாச் சித்திர வடிவிலுமிக்க வடிவினால் அணங்கு என்றும், சோலையில் நிற்றலான் மயில் என்றும், தன் நெஞ்சு அவளிடத்திற் செல்லுதலானும் அவள் எதிர்நோக்கு நோக்குதலானும் மானிடப் பெண் என்றும் கூறினான் என்க. கணங்குழை என்று பாடம் ஓதுவாரும் உளர்.* 1

1082. நோக்கினா ளொக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைகொண் டன்ன துடைத்து.

மானிட மாதராகத் தெளிந்த தலைவன் சொல்லியது.

*மிகுந்த வனப்பினை உடையாள் என் நோக்கிற்கு எதிரே நோக்குதல், தாக்கி வருத்துவதோர் அணங்கு தாக்குதற்கு* வானினையுங் கூடக் *கொண்டுவந்தாற் போலும் தன்மை யுடைத்து.*

நான் பார்க்க அவள் பார்த்தது, வெட்டுதற்கு ஆயுதங் கொண்டது போலுங் கண்கள் என்றது. தாக்கணங்கு : பேரர் செய்யுந் தெய்வப் பெண். **தானை** : படை. 2

[குறிப்பு : *தானைக் கொண்டன்ன துடைத்து என்பது அச்சுப் பாடம்.*]

1083. பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு.

*முன்னங் கேட்டறிந்த தல்லாது கண்டறியேன் கூற்றுவனை. இனிக் கண்டறிந்தேன்; அது எப்படியிருக்கும் என்னில், பெண் தகையுடனே பெரிய அமர்த்த கண்களை உடைத்து.*

*பெண்தகை : நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு. அமர்த்த கண் : போர் செய்யுங் கண்.* 3

1084. கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்ந்தன கண்.

இதுவுமது

நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் பெண் தகைமையுடைய இப் பேதைக்குக் கண் தன்னைக் கண்டார் உயிரை உண்ணுந் தோற்றத்துடனே கூடி அமர்ந்திருந்தன. 4

[குறிப்பு : *அமர்த்தன என்பது அச்சுப்பாடம்.*]

1085. கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கமிம் மூன்று முடைத்து.

இதுவுமது

*என்னை வருத்துதலால் கூற்றமோ, என்னை விரும்பிப் பார்த்தலால் கண்ணோ, இயல்பாக மருளுதலால் பிணைமானோ, அறிகின்றிலேன்; இம் மடவரல் கண்களின் நோக்குகள் இம் மூன்று குணமும் உடைத்தாயிருந்தன.*

*இன்பமும் துன்பமுஞ் சொல்லியது.* 5

1086. கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண்.

இதுவுமது

*கண்ணை விட்டுப் பிரியாது வளைந்த புருவம் செப்பமுடைய வாய் விலக்கின் புருவத்தைக் கடந்து இவள் கண்கள் எனக்கு நடுங்கு துயரைச் செய்யா.*

*புருவம் விலக்கவில்லை யாதலால், கண் வருத்தஞ் செய்கின்றது என்றது.* 6

1087. கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
படாஅ முலைமேற் றுகில்.

அவள் முலைகள் தன்னை வருத்தும்வருத்தம் கூறியது

*இம்மாதர் முலைகள் மேலிட்ட துகில் அவை என்னைக் கொல்லாமல் காத்தலின், கொல்லுவதாய மதக் களிற்றின் மேலிட்ட முக படாத்தினை ஒக்கும்.*

*படாம் : முகபடாம். படாமுலை : சாயா முலை என்க.* 7

1088. ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரு முட்குமென் பீடு.

இது நுதலின் வருத்தம் கூறியது

*நுதல் : நெற்றி.*

*போர்க்களத்து வந்து நண்ணாதவரும், நண்ணினராகில் அவருடைந்து புறங் கொடுக்கும் என் வலி, இம்மாதர் அழகிய நுதலினுக்கே அழிந்து விட்டது.*

*ஞாட்பு : போர்க்களம். பீடு : வலி.* 8

1089. பிணையேர் மடநோக்கும் நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து.

அணிதல் வருத்தங் கூறியது.

*பிணை மானுக்கு ஒப்பாகிய மட நோக்கினையும் நாணத்தினையும் உடையாள்* இவளுக்கு ஒற்றுமையாகிய அணி இருப்ப, வேற்றுமையாகிய அணிகளை அணிதல் என்ன பயனுடைத்து?

*இவளுக்கு ஒற்றுமையாகிய அணி : அழகு. வேற்றுமையாகிய அணி : ஆபரணம்.* ஆபரணத்தை யணிந்து அழகை மறைத்தார் என்றது. 9

1090. உண்டார்க ணல்ல தடுநறுக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்த லின்று.

தலைவி குறிப்பறியச் சொல்லியது

*அடப்படுங் கள் தன்னை உண்டாரிடத்து மயக்குதல் அல்லது கண்டாரிடத்தும் மயக்குமோ, காமம் போல்.*

கள்ளினும் மயக்குங் காமம் என்றது. 10

தகையணங் குறுத்தல் முற்றும்.

---

## 110. குறிப்பறிதல்

*அஃதாவது, தலைவன், தலைவி குறிப்பினை அறிதலும், தோழி குறிப்பினை அறிதலும், தோழி தலைவன் தலைவி குறிப்பினை அறிதலுமாம்.*

**1091. இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு**
**நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.**

தலைவி கருத்தினை அவள் நோக்கு நோக்கினால் தலைவன் அறிந்தது.

*இவளுடைய மையுண் கண்ணகத்தாகிய நோக்கு என்மேல் இரண்டு நோக்காயிற்று ; அவற்றுள் ஒரு நோக்கு என்னைக் காம நோய் செய்விக்கும் நோக்கு ; ஒரு நோக்கு அந்தக் காமநோயைத் தீர்க்கும் மருந்தாம்.*

*தன்னை விரும்பி நோக்கும் நோக்கு நோய் நோக்காம்.* அக்குறிப்பினை வெளிப்படுக்கும் நோக்கு மருந்து என்க. 1

**1092 கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்தில்**
**செம்பாக மன்று பெரிது.**

இதுவுமது

*இவள் கண்கள் யான் காணாமல் என்மேல் நோக்கும் சிறிய நோக்கம், மெய்யுறு புணர்ச்சிக் கருத்துச் சமனான பாதியன்று ; அதனிலும் மிகும்.*

*செம்பாகம் : சமன்பாதி ; உள்ளப் புணர்ச்சியிலும் மெய்யுறு புணர்ச்சி என்னிலும் இவளுக்கு மிகுதி என்று அவள் கருத்தினை அறிந்து மெய்யுறு புணர்ச்சியின் கருத்தாகினான் என்க.* 2

**1093. நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள்**
**யாப்பினு ளட்டிய நீர்.**

நோக்கினாலும் நாணினாலும் அவள் கருத்து அறிந்து தலைவன் கூறியது.

யானோக்கும்போது தன்னோக்கினாலென்னை நோக்கித் தலையைச் சாய்த்து நாணி நின்றாள் ; அவள் குறிப்பு என் காமப் பயிர் வளர்தற்குப் பாத்தியுள் வார்த்த நீராம்.

யாப்பு : பாத்தி. அட்டிய நீர் : வார்த்த நீர் என்க. 3

[குறிப்பு : *நோக்கினா ணோக்கி என்பது அச்சுப்பாடம்.*]

1094. யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்கால்
தானோக்கி மெல்ல நகும்.

இதுவுமது

*யான் தன்னை நோக்கும்போது எதிர் நோக்காது நாணி நிலத்தை நோக்குவள் ; அதனை அறிந்து நான் நோக்காதபோது தான் என்னை நோக்கி மெல்ல நகைப்பாள்.* 4

1095. குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.

இதுவுமது

*நேரே குறிக்கொண்டு நோக்காத மாத்திரமல்லது ஒரு கண்ணைச் சிறக்கணித்தாள்போல என்னை நோக்கித் தன்னுள்ளே மகிழ்வள்.*

*ஒருகண் சிறக்கணித்தல் : ஒரு கண்ணைச் சாய்த்து நோக்கல்.* சிறக்கணித்தல், புறக்கணித்தல், சிருங்கித்தல் என்பதெல்லாம் இகழ்ச்சிக் குறிப்பு.

1096. உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொல்
ஒல்லை உணரப் படும்.

தோழி தலைவனைச் சேட்படுத்த வழி அவள் குறிப்பினை அறிந்து
தலைவன் சொல்லியது.

*புறத்து நொதுமலர் போலக் கடுஞ்சொற் சொன்னாராயினும் அகத்துப் பகையில்லாதார் சொல்லைக் குறையுற்றார் கடிதின் அறியப்படும்.*

*நொதுமலர் : பிறர்.* தோழியிடத்து அருளுடைமை அறிந்து, தலைவன் அவள் சொன்னபடி நிற்கவேண்டும் என்கின்றது. 6

1097. செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கும்
உறாஅர்போன் றுற்றார் குறிப்பு.

இதுவுமது

*பின் இனிதாய் முன் இன்னாதாய்ச் சொல்லலும், அகத்துப் பகை இல்லாதிருந்து புறத்துப் பகைவர் போன்ற வெகுளி நோக்*

கமும், நொதுமலர் போன்று நட்பாயினுர் ஒரு காரியத்தைக் குறித்து வரும் குறிப்பாம்.

தோழியால் நங்குறை முடியும் என்று தோழி குறிப்பைத் தலைவன் அறிந்து தெளிதல். 7

[குறிப்பு : சிறு சொல்லும் என்பது அச்சுப்பாடம்.]

1098. அசையியற் குண்டாண்டோ ரேஎர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும்.

இதுவுமது

இந்தப் பாங்கி கடுஞ்சொல் சொல்ல, அதற்கு யான் ஆற்ருது இரந்து நிற்க, அதனை அறிந்து நெகிழ்ந்து உள்ளே நகுகின்ருள்; அதனுல் கொடிபோல அசையும் இயல்பினை உடைய பாங்கி யிடத்துத் தோன்றுகின்றதோர் நன்மைக் குறிப்பு உண்டு.

அசையியல் : அசையும் இயல்பு ; ஏர் : நன்மை ; பசையினள் : அன்பு உடையவள் ; பைய நகும் : மெல்ல நகும் ; என்க. 8

1099. ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலர் கண்ணே யுள.

தலைவன் தலைவி குறிப்பைத் தோழி அறிந்தது.

தலைவனும் தலைவியும் முன் அறியாதார் போல ஒருவரை யொருவர் பொது நோக்கத்தால் நோக்குதல் காதலை உடையா ரிடத்தே உண்டு.

தலைவனும் தலைவியும் புணர்ச்சி உண்டென்று அவர் பார்க்கும் பார்வையில் தோழி அறிந்தது. 9

[குறிப்பு : காதலார் கண்ணே என்பது அச்சுப்பாடம்.]

1100. கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின்
டென்னை பயனு மில. [வாய்ச்சொற்கொண்

இதுவுமது

தலைவனும் தலைவியும் தாம் இருவருள் ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள் நோக்கினுல் ஒக்குமாயின், ஒருவரை யொருவர்

அறியேன் என்று சொல்லும் வாய்ச் சொல் மனத்தினுல் உண்டென்ற காரியத்தை வாயினுல் இல்லை யென்னல்.

தலைவனும் தலைவியும் புணர்ச்சியில்லை என்று வாயினுற் சொல்லியதனை பார்வையினுல் உண்டு என்று தோழி அறிந்தது. 10

[குறிப்பு: வாய்ச் சொற்கள் என்பதும், என்ன ''ஃனும் என்பதும் அச்சுப்பாடங்கள்.]

குறிப்பறிதல் முற்றும்.

---

## 111. புணர்ச்சி மகிழ்தல்

அஃதாவது, தலைவன், தலைவியைப் புணர்ந்த புணர்ச்சியினை மகிழ்ந்து கூறல்.

1101. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள.

தலைவி அழகைக் கண்ணுல் கண்டும், சொற்களைச் செவியினுல் கேட்டும், சுவைகளை நாவினுல் உண்டும், மணத்தை மூக்கினுல் மோந்தும், மெய்யை மெய்யினுல் தழுவியும் அனுபவிக்கப்படும் ஐம்புலனும் இவ் வொள்ளிய வளையலை யுடையாள் கண்ணே உளவாம்.

வேறு வேறனுபவியாது ஒரு காலத்து ஒரு மிக்க அனுபவிக்கப்படுவது இவரிடத்தல்லாது வேறில்லை என்றது. 1

1102. பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

இடந்தலைப் பாட்டின் புணர்ச்சியில் சொல்லியது.

வாத முதலிய பிணிக்கு மருந்தாவன பிற மருந்துகள். அது வன்றி அணியிழையினை யுடையாள், தன்னினுய பிணிக்கு மருந்து தானேயாம். 2

1103. தாம்விழைவார் மென்றோட் டுயிலி னினிதுகொல்
தாமரைக் கண்ணு னுலகு.

இது பாங்கற்குச் சொல்லியது

தம்மால் விரும்பும் மெல்லிய தோளை உடையாளைத் தழுவித் துயிலும் துயிலின் இன்பத்திலும் இனியதோ, தாமரைக் கண்ணன் உலக இன்பம்.

தாமரைக் கண்ணன் : செங்கண் மால். வருந்தாமல் எய்தும் மாதர் இன்பத்திலும் அதிகமோ, வருந்தித் தவம் செய்து பெறும் வீட்டின்பம் என்றது. 3

[குறிப்பு : தாம்வீழ்வார் என்பது அச்சுப்பாடம்.]

1104. நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னும்
தீயாண்டுப் பெற்றா ளிவள்.

பாங்கற் கூட்டத்தில் சொல்லியது.

இந்த நாயகி தன்னை அகன்றால் சுடவும், குறுகினால் குளிர்ந்திருக்கவும் ஆகிய நெருப்பினை, [என்னிடத்தில் அதற்கு], எவ்வுலகத்தில் பெற்றாள் இவள்.

நெருப்பு : காமாக்கினி என்க. 4

1105. வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள்.

தோழியிற் கூட்டத்தில் சொல்லியது.

மிகவும் இனியவாய பொருள்களைப் பெறாத போது விருப்ப மிகுதிக் கண் வந்து இன்பம் செய்யும் அந்த அந்தப் பொருள்கள் போலுமே, நீங்கி வந்து கூடிய, பூவினிதழ் பொருந்திய குழலையுடையாள் தோளின்பம்.

வேட்டல் : ஆசைப்படுதல். அவை யவை : ஆசைப்பட்ட பொருள்கள் என்க. தோடு : பூவின் இதழ். கதுப்பு : தலையின் மயிர். 5

1106. உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிர்தி னியன்றன தோள்.

இதுவுமது

தன்னைக் கூடாத போது வாடிய என்னுயிர், கூடுந்தோறும் தளிர்க்கும்வகை தழுவுதலால் பேதைப் பருவமுடையாளுக்குத் தோள்கள் அமிர்தத்தினால் செய்யப்பட்டன. 6

[குறிப்பு : அமிழ்தின் என்பது அச்சுப்பாடம்.]

**1107.** **தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றால்**
**அம்ம வரிவை முயக்கு.**

**இவளை வரைந்துகொள் என்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது.**

அழகிய நிறத்தினையுடைய அரிவையொடு கூடி முயங்கும் முயக்க இன்பம் *தமக்குரிய இல்லறத்தின் இருந்து உலகத்தோர் செய்து வந்த பொருளைத் தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் முதலிய ஐம்புலத்திலும் பகுத்திட்டு உண்டாற் போலும்.*

பாத்து : சோறு. அம்ம என்பது : அழகு; அதுவன்றித் தோழி நீ கேள் என்றும் ஆம். 7

[குறிப்பு : *அம்மா அரிவை என்பது அச்சுப்பாடம்.*]

**1108.** **வீழு மிருவர்க் கினிதே வளியிடைப்**
**போழப் படாஅ முயக்கு.**

**வரைந்து பிரியாது இருமின்கள் என்று வரைவு கடாய தோழிக்குத் தலைவன் சொல்லியது.**

*காற்று வந்து இடையே நுழையப் படாமல் தழுவி நெருங்க முயங்கு முயக்கம் ஒருவரை யொருவர் விழைவாரிருவர்க்கும் இனிது.*

வீழுதல் : புணருதல். *வளி : காற்று ;* போழ்தல் : காற்று வந்து நுழையாமல் தழுவல். 8

**1109.** **ஊட லுணர்தல் புணர்த லிவைகாமம்**
**கூடியார் பெற்ற பயன்.**

**இதுவுமது**

*புணர்ச்சி இனிதாகும் பொருட்டு ஊடுதலும், ஊடலை நீங்க லும், பின்பு புணர்தலும் இவை, வரைந்து கொண்டு காமத்தை இடை விடாதே கூடினவர் பெற்ற பயன்.*

*ஊடுதல் : பிணங்குதல் ; உணர்தல் : பிணக்கு நீங்குதல் ; புணர்தல் : புணர்ச்சி ;* வரைந்து எய்துவார்க்கு ஊடலும் உணர்தலும் உண்டு ; எங்கட்கு இல்லை என வரைதலை யிகழ்ந்து கூறியது. 9

**1110.** **அறிதோ றறியாமை கண்டற்றாற் காமம்**
**செறிதோறுஞ் சேயிழை மாட்டு.**

புணர்ந்து உடன் போகின்றான் தன்னுள்ளே சொல்லியது.

*நூல்களானும் நுண்ணுணர்வானும் பொருள்களை அறிய, அறியாமையைக் கண்டால் போலக் காணப்படா நின்றது, சிவந்த இழையினை உடையாளை இடைவிடாது செறியச் செறிய இவளிடத்துக் காதல்.*

அறிய அறிய அறிவு மிகுதியாதல் போல, நாயகியைச் செறியச் செறியக் காமம் மிகுந்தது.

புணர்ச்சி மகிழ்தல் முற்றும்,

---

## 112. நலம்புனைந் துரைத்தல்

அஃதாவது, தலைவன், தலைவி நலத்தினைக் கொண்டாடி உரைத்தல்.

1111. நன்னீரை வாழி யனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள்.

*அனிச்சப் பூவே நீ வாழ்வாயாக ; மென்மையான் நீயே எல்லாப் பூவினும் நல்ல இயற்கையை ; ஆயினும் எம்மால் விரும்பப் பட்டவள் நின்னினும் மெல்லிய இயற்கையை உடையள்.*

அனிச்சமே, நின் மெல்லிய தருக்கினை ஒழிவாய் என்றது. அவள் உடம்பின் மெல்லிய தன்மை தழுவி யறிந்தது. 1

1112. மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று.

இடந்தலைப்பாட்டின் சொல்லியது.

*நெஞ்சே, யானே காணப் பெற்ற இவள் கண்களைப் பலராலும் காணப்படும் பூவொக்கும் என்று கருதித் தாமரை, குவளை, நீலம், காக்கணன் முதலிய மலர்களைக் கண்டால் மயங்கா நின்றாய், நின்னறிவு இருந்தவாறு என்னை ?*

*மையாத்தல் : மயக்க மாதல் ;* ஒவ்வாதவற்றை ஒக்கு மென்று மயங்கல். 2

1113. முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

கூட்டுதலுற்ற பாங்கற்கு அடையாளம் கூறல்.

*வேய்போலும் தோளினை உடையவட்கு நிறம் தளிரின் நிறம்; பல்வரிசை முத்து; இயல்பாய நாற்றம் நறு நாற்றம்; மையுண்ட கண் வேலாயிருக்கும்.* 3

1114. காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கும்
மாணிழை கண்ணொவ்வோ மென்று.

பாங்கற் கூட்டத்துச் சொல்லியது.

*குவளைப் பூக்கள் கண்டால் கவிழ்ந்து நாணி நிலத்தை நோக்கும், மாட்சிமை பெற்ற அணிகலங்களை உடையாள் கண்களுக்கு யாம் ஒப்பாக மாட்டோம் என்று.* 4

1115. அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ளுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.

பகல் குறிக்கண் பூவணி கண்டு சொல்லியது.

*இவள் மென்மை கருதாது அனிச்சப்பூவைக் காம்பு கிள்ளாது சூடினாள்; இனி இவளிடைக்கு நல்ல பறைகள் ஒலியா.*

*அப்பூவின் காம்பின் பாரம் பொருது இடை முரியும்; முரிந்தால் நெய்தல்பறை அறைவர் என்றது. நெய்தல்பறை : சாப்பறை.* 5

1116. மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

இரவுக் குறிக்கட் சொல்லியது.

*வானத்து மீன்கள் அடையாளம் அறியாமல், அந்த மதியினையும் இதே மடந்தை முகத்தினையும் இது மதி, இது முகமென்று அறிய மாட்டாது, தன் பதியின் நின்று கலங்கித் திரிகின்றது.*

*ஓரிடத்தில் நில்லாது மயங்குதலால், பதியில் கலங்கிய மீன் என்றார்.* 6

1117. அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.

இதுவுமது

அம்மீன் கலங்குதற்குக் காரணம் யாது, முன் குறைந்த இடம் நிரம்பி விளங்கும் மதிக்கட் போலே இம்மாதர் முகத்து மறுவுண்டோ?

அறுவாய் நிறைந்த மதி : கலைகள் அற்றுத் தேய்ந்து வளர்ந்த மதி. 7

1118. மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி.

இதுவுமது

மதியே வாழ்வாயாக ; இம்மாதர் முகம் போலக் களங்கமில்லாமல் யான் மகிழும் வகை ஒளிவீச வல்லையாயின் நீயும் என் காதலுடையாய்.

காதல் : ஆசை. களங்கமில்லையாயின் தன் காதலி முகம் என்று ஆசைப்படுவான் என்க. 8

1119. மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றன் மதி.

இதுவுமது

மதியே, மலர்போலும் கண்ணை உடையாள் முகத்தை ஒப்பாயாகில், அவள் முகம் போல், யான் காணப்பலரும் காணுமல் தோன்ருது ஒழி.

தான் அனுபவித்தல் முகம்; மதி பலரும் அனுபவித்தல் ஆகலால் கூடாது கூடாது என்றது. 9

1120. அனிச்சமு மன்னத்தின் றூவியு மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்.

உடன்போக்கு உரைத்த தோழிக்கு உரைத்து மறுத்தல்.

உலகத்தார் மெல்லிய என்று சொல்லப்பட்ட அனிச்சப் பூவும் அன்னப் புள்ளின் சிறகும் இம் மாதர் மதிப்பின் அடிக்கு நெருஞ்சிப் பழம்போல வருத்தஞ் செய்யும்.

காயின் முள்ளினும் வலிது பழத்தின் முள் என்பதனால், பழம் என்றார் என்க. ஆகையால் பாலை நிலம் பொருது என்று மறுத்தது. 10

நலம் புனைந்துரைத்தல் முற்றும்.

---

## 113. காதற் சிறப்பு உரைத்தல்

அஃதாவது, தலைவன் காதல் மிகுதி கூறலும், தலைவி காதல் மிகுதி கூறலுமாம் என்க.

**1121. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி**
**வாலெயி றூறிய நீர்.**

இயற்கைப் புணர்ச்சியின் கூறல்.

மெல்லிய மொழியினை யுடையாள் வெள்ளிய எயிற்றில் ஊறிய நீர், பாலுடனே தேனைக் கலந்த கலவை போலும்.

வால் : வெண்மை ; எயிறு : பற்சந்து. 1

**1122. உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன**
**மடந்தையொ டெம்மிடை நட்பு.**

இது பிரிவச்சம் கூறியது.

உடம்போடு உயிரிடை உண்டாகிய நட்பு எத்தன்மைய, அம் மடந்தையோடு எம்மிடை யுண்டாகிய நட்பு (அத்தன்மைய).

உயிரும் உடம்பும் வேற்றுமையின்றிக் கலந்தது போல என்க. தெய்வப் புணர்ச்சியில் பிரியமாட்டாமல் தலைவன் கூறியது. 2

**1123. கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும்**
**திருநுதற் கில்லை யிடம்.**

இடந்தலைப் பாட்டிற் பிரிவிற் கூறியது.

*என் கண்ணின் கருமணியின் கண் உறையும் பாவாய்! நீ நீங்கிப் போதருவாயாக; போகா திருத்தியாயின் எம்மால் விரும்பப் பட்ட திருநுதலை உடையாட்கு இருக்க இடமில்லை.*

*என்னால் விட்டு நீங்கப்படாது, இவள் போகாமல் இருக்க வேண்டும் : இருவர்க்கும் இடம் போதாது, இப்பாவை இருப்பப் பாவாய், நீ போதாய் என்றது.* 3

**1124.** **வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாதல்**
**அதற்கன்ன ணீங்கு மிடத்து.**

பகல் குறியின் பிரிவில் சொல்லியது.

*தெரிந்து அணிந்த அணிகலத்தை உடையாள் எனக்குப் புணருமிடத்து, உயிர் உடம்போடு கூடி வாழ்தல்போலும்; பிரியு மிடத்து உயிரும் உடம்பும் பிரிந்து போதல் போலும்.* 4

**1125.** **உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்**
**ஒள்ளமர்க் கண்ணாள் குணம்.**

ஒருவழித் தணத்தலின் தோழிக்குச் சொல்லியது.

*ஒள்ளியவாய அமரைச் செய்யும் கண்ணிணை யுடையாள் குணங் களை மறந்தேனாயின் நினைப்பேன்; ஒரு பொழுதும் மறத்தலை அறியேன் ஆதலால் நினைத்தலும் அறியேன்.*

மறந்தால் நினைப்பேன் ; மறந்தறியேன் என்று தோழிக்குச் சொல்லியது.

**1126.** **கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்**
**நுண்ணியரெங் காத லவர்.**

ஒருவழித் தணத்தலின் தலைவி சொல்லியது.

*இவளை விட்டுப் பிரிந்தார் தலைவர் என்று சொல்லுவார் சொல்லுக; எம்முடைய காதல் நாயகர் எங் கண்ணகத்தை விட்டு நீங்கார்; யாம் அறியாது இமைத்தோமாயின், அதனால் பருவத்தும் வருத்தம் செய்யார்; ஆதலால் காணமாட்டாதவருக்கு நுண்ணியர்.*

காதலர் எப்போதும் என்னிடத்திலிருக்கின்றார் என்றது. 6

1127. கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேங் கரப்பாக் கறிந்து.

இதுவுமது

காதலர் எப்போதும் எங்கண்ணுள்ளார் ஆதலால் கண்ணினை அஞ்சனத்தால் எழுதுவதுஞ் செய்யேம், அப்போது அவர் மறைய, அதனை அறிந்து.

பாக்கு : எதிர்காலம். 7

1128. நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வெப்பாக் கறிந்து.

இதுவுமது

காதலர் என்னெஞ்சினுள்ளார் ஆகலான், உண்ணும்போது வெப்பாக உண்டலை யஞ்சுவோம்; அதனால் அவர்க்கு வெறுப்புறுதலை அறிந்து.

பாக்கு : எதிர்காலம். வெப்பம் : சூடாயிருத்தல். வேபாக் கென்று பாடமோதுவாருமுளர். அது பாடமல்ல என்க. 8

[குறிப்பு : வேபாக்கறிந்து என்பது அச்சுப்பாடம்.]

1129. இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
ஏதில ரென்னுமிவ் வூர்.

இயற்பட மொழிதல்.

என்கண் இமைக்குமாயின் உள்ளிருக்கின்ற காதலர் மறைதலை அறிந்து இமையேன்; அவ்வளவிற்கு அவரைத் துயிலாநோய் செய்தார் அன்பிலர், என்று சொல்லும் இவ்வூர்.

காதலர் மறைவர் என்று இமையாதிருத்தலைத் தூங்காதிருத்தல் என்று சொல்வர் என்க. இமைத்தல் : கண்ணை யிமையால் மூடுதல். 9

1130. உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவர்
ஏதில ரென்னுமிவ் வூர்.

**இதுவுமது**

*காதலர் எஞ்ஞான்றும் என் உள்ளத்துள்ளே உவந்து உறையா நிற்பர். அதனை அறியாது அவரைப் பிரிந்துறையா நின்றார் அன்பிலர், என்று சொல்லா நிற்கும் அவ்வூர்.* 10

[குறிப்பு : *இதன் உரை பிரதியில் இல்லை ; பரிமேலழகர் உரை சேர்க்கப்பட்டது.*]

காதற் சிறப்புரைத்தல் முற்றும்.

---

## 114. நாணுத் துறவுரைத்தல்

*அஃதாவது, நாணம் நீங்கலை உரைத்தல்.*

**1131. காம முழந்து வருந்தினுற் கேமம்
மடலல்ல தில்லை வலி.**

சேட்படுத்த தோழிக்குத் தலைவன் சொல்லியது.

*அரிய மாதரொடு காமத்தை யனுபவித்துப் பின் அது பெறாது துன்பமுற்று வருந்திய காமுகற்கு ஏமமாவது மடலல்ல தில்லை வலியது.*

காமுகற்கு ஏமமாவது, காமுகரை வருந்தாமற் காப்பது மடல் என்று தோழிக்குச் சொல்லியது. 1

[குறிப்பு : *வருந்தினார்க் கேமம் என்பது அச்சுப்பாடம்.*]

**1132. நோனா வுடம்பு முயிரு மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து.**

அம் மடலைத் தன்மேல் வைத்துச் சாற்றல்.

*காம வருத்தத்தைப் பொறா வுடம்பும் உயிரும் அதற்கு ஏமமாகிய மடல் மாவினை ஊரக் கருதும், அதனை விலக்குகின்ற நாணினை நீக்கி.*

*அறிவு, நிறையே, ஓர்ப்பு, கடைப்பிடி நீங்கவும் நாண் நீங்காது; அதுவும் நீக்குவேன் என்றவாறு; தோழிக்குச் சொல்லியது. நோனா உடம்பு : பொறாத உடம்பு.* 2

1133. நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல்.

இதுவுமது

நாணமும் மிக்க ஆண்டகையும் யான் பண்டுடையேன்; இன்று அவை காமத்தால் நீங்குதலால், காமமுற்றார் ஏறும் மடலை இன்றுடையேன். 3

1134. காமக் கடும்புன லுய்க்குமென் னாணொடு
நல்லாண்மை யென்னும் புணை.

இதுவுமது

நாணும் நல்லாண்மையும் காம வெள்ளத்திற்குப் புணையாகலின் நீக்குவனவல்ல என்ற தோழிக்குச் சொல்லியது.

யான் காமக் கடலைக் கடத்தற்குக் கொண்ட நாணும் நல்லாண்மையுமாகிய தெப்பை என்னைப் பிரித்துக் காமமாகிய கடிய புனல் கொண்டுபோகா நின்றது.

புணை காமக்கடலிலே தள்ளிவிட்டது என்றது. 4

[குறிப்பு: உய்க்குமே என்பது அச்சுப்பாடம்.]

1135. தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை யுழக்குந் துயர்.

இக்காமம் யார் தந்தார் என்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது.

மாலைப் பொழுதின்கண் அனுபவிக்கும் துயரினையும் அதற்கு மருந்தாம் மடலினையும் முன் அறியேன்; இப்போது தோழியரோடு விளையாடும் வளையலை யுடைய சிறியாள் எனக்குத் தந்தாள்.

தொடலை: விளையாடல். குறுந்தொடி: வளையலையுடைய சிறு பெண். 5

1136. மடலூர்தல் யாமத்து முள்ளுவன் மன்ற
படலொல்லாப் பேதைக்கென் கண்.

இதுவுமது

நின் பேதைப் பருவமுடையாள் காரணமாக என் கண்கள் துயில் பொருந்தா ; அதனால் எல்லாரும் துயிலும் இடையாமத்தும் யான் இருந்து மடலூர்தலையே கருதுவேன்.

பேதை : மடமையும் ஆம். 6

**1137. கடலன்ன காம முழந்து மடலேறாப்**
**பெண்ணிற் பெருந்தக்க தில்.**

பேதையர் ஆற்றார், ஆடவர் ஆற்றுவர் என்ற தோழிக்குச் சொல்லியது.

கடல் போலக் கரையற்ற காம நோயினை அனுபவித்தும் மடலூர்தலைச் செய்யாது ஆற்றியிருக்கும் பெண் பிறப்புப போல மிக்க தகுதியுடைய பிறப்பு உலகத்தில்லை.

இவை யெல்லாம் தலைவன் சொல்லியது ; இனித்தலைவி சொல்லுமாறு. 7

**1138. நிறையரியர் மன்னளிய ரென்னாது காமம்**
**மறையிறந்து மன்று படும்.**

காப்புச் சிறை மிக்குக் காமம் பெருகியவழித் தலைவி சொல்லியது.

இவர் நிறையான் மிகுதற்கு அஞ்சுதல் அரியர் என்று அஞ்சாது, மிகவும் அளிக்கத் தக்கார் என்று இரங்காது, பெண்கள் காமம் மறைத்தலைக் கடந்து மன்றின்கண் வெளிப்பட இருந்தது என் ?

தலைவி தன் காமத்தை அடக்கவும், அடங்காது வெளிப்படுகின்றது என்று காமத்தை ஒறுத்துச் சொல்லியது என்க.

நிறையுடையவள், மிகவும் மேம்பாடு உடையவள், கருணை உடையவள் என்னாது காமம் வெளிப்படும் என்றது. மன்றுபடுதல் : எல்லாரும் அறியப்படுதல். இதனை விரித்துரைத்துக் கொள்க. 8

**1139. அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காமம்**
**மறுகின் மறுகும் மருண்டு.**

இதுவுமது

யான்முன் அடங்கி நிற்றலால் எல்லாரும் என்னை அறிகிலர்; இனி அவ்வாறு நில்லாது யானே வெளிப்பட்டு அறிவிப்பல் என்று

*கருதி என் காமம் இவ்வூர்த் தெருவினிடத்தே மயங்கிச் சுழல்கின்றது.*

தன் காமம் வெளியே புறப்பட்டுத் தெருவிலே சுழலுகின்றது; யானடக்கவும் அடங்கவில்லை *என்றது. மறுகு: தெரு.* 9

1140. யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.

நகையாடிய தோழியைப் புலந்துரைத்தது.

*யாம் கண்ணால் காணுமாறு எம்மை அறிவிலார் நகுகின்றார்; அவர் அப்படி நகுகின்றது யாம்பட்ட நோயைத் தாமும் படாமையான்.*

யாம் கொண்ட காமத்தைத் தாமுங் கொண்டால் அந்த அருமை தெரியும் என்றது. 10

நாணுத் துறவுரைத்தல் முற்றும்.

---

## 115. அலரறிவுறுத்தல்

*அஃதாவது,* தலைவனும் தலைவியும் களவொழுக்கம் நடக்கப் பலரும் அறியப்படும் என்று அதற்கு அஞ்சி அவ்வலரை அறிவுறுத்தல். அலராவது: பலரும் அறியப்படுதல்.

1141. அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.

அல்ல குறிக்கண் தலைவன் தோழிக்குச் சொல்லியது.

அல்ல குறியின்கண் மடந்தையொடு எம்முடைய நட்பு ஊரின்கண் அலர் எழுதலால், அவளைக் கூடாது வருந்தும் என் ஆருயிர் போகாமல் நின்றது. அது என் ஊழ்வினைப் பயத்தால் *யானே அறிவது அல்லது அலர் தூற்றுவார் அறியார்.*

*அல்ல குறிப்பட்டுத் தலைவியைச் சேராது வருந்தும் வருத்தத்தால் உயிர்போம், போகாமல் நின்றது பலரும் அறிந்தார்*

அதனால் தலைவி குறியிடத்து வாராது நின்றாள் என்று தேறினேன்; அது என் விதிநல மாயிற்று; அதனை அலர் தூற்று வார் அறியார் என்று தலைவன் தோழிக்குச் சொல்லியது.

பார்க்கியம் : விதி. 1

1142. மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர்

இதுவுமது

மலர்போலும் கண்ணினை உடையாள் எய்தற்கு அருமை அறியாது இவ்வூர் அவளை எளியளாக்கி அலரை எமக்குத் தந்தது.

தான் அவளைச் சேராமலிருக்கவும் சேர்ந்தான் என்று அவளை எளியாளாக அவள் அருமை அறியாமல் அலர் தூற்றுகின்றார் இவ்வூரவர் என்று தலைவன் தோழிக்குச் சொல்லியது. 2

1143. உறாஅதோ வூரறிந்த கவ்வை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து.

இதுவுமது

எங்கட்குக் கூட்டமுண்மை இவ்வூர் அறிதலான் விளைந்த அலர் எனக்கு வாராதோ, அந்த அலர் கேட்ட என் மனம் அவளைச் சேராமலிருந்தும் சேர்ந்த மகிழ்ச்சிபோல் இருத்தலான்.

தலைவியைச் சேராமலிருந்தும் சேர்ந்தானென்று ஊரார் அலர் தூற்றலால் சேர்ந்த மகிழ்ச்சிபோல் ஆயிற்று என்று தோழிக்குச் சொல்லியது.

கவ்வை : அலர் தூற்றல். 3

1144. கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேல்
தவ்வென்னுந் தன்மை யிழந்து.

இதுவுமது

என் காமம் இவ்வூரெடுத்த அலரானே அலர்தலையுடைத் தாயிற்று; அலர் இல்லையாயின் என் காமம் தன்னியல்பு அழிந்து சுருங்கும்.

*கவ்வை : அலர் தூற்றல். கவ்விது : அலர்தல். அதுவின் றேல் என்பது : அது இல்லையாயின். தவலல் : சுருங்கல். தன்மை : இயல்பு.* 4

[குறிப்பு : *தன்மை யிழந்து என்பது அச்சுப்பாடம்.*]

1145. களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது.

இதுவுமது

*கள் உண்பார்க்குக் கள் வெறிக்குந்தோறும் கள் உண்டல் இனிதாமாறுபோல, எனக்கு மற்ற அலர் தூற்றுந்தோறும் இனிதாம்.*

அலர் தூற்றல் : இன்னானை யின்னான் களவில் சேர்ந்தான் என்பது. *அதுகேட்ட தலைவன் தனக்கு மகிழ்ச்சி என்றது.* 5

1146. கண்டது மன்னு மொருநா ளலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று.

இது தலைவி தோழிக்குச் சொல்லியது.

*யான் அத் தலைவரைக் கண்ணுறப் பெற்றதொரு நாள், அதனாலாய அலர் திங்களைப் பாம்பு கொண்ட அலர்போல் உலகெங்கும் பரந்தது.*

*திங்கள் : சந்திரன்.* 6

1147. ஊரவர் கவ்வை யெருவாக வன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்.

இதுவுமது

*காம நோயாகிய பயிர், இவ்வூர் மாதர் எடுக்கின்ற அலர் எருவாக, அதுகேட்ட அன்னை வெகுண்டு ஒறுக்கின்ற சொல் நீராக, வளரா நின்றது.* 7

1148. நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கவ்வையால்
காம நுதுப்பே மெனல்.

இதுவுமது

*ஏதிலார் எடுக்கின்ற அலரால் யாம் காமத்தை அவிப்போம் என்று கருதுகின்றது, பற்றி எரிகின்ற எரியை நெய்யை ஊற்றி அவிப்போம் என்று கருதுகின்றது போலாம்.*

நெய்யை ஊற்ற எரி வளர்தல்போல அலர் தூற்றக் காமம் வளரும் என்றது. *காமம் : ஆசை.* *8*

**1149. அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்**
**பலர்நாண நீத்தக் கடை.**

காமத்தை ஆற்றுவாய் என்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

*தலைவர் தம்மை யான் எதிர்ப்பட்ட ஞான்று, 'நின்னிற் பிரியேன், பிரியில் தரியேன் அஞ்ச வேண்டா' என்ற அவர் தாமே இன்று கண்டார் எல்லாரும் நம்மைக் கண்டு நாணும்வகை நம்மைவிட்டு நீங்கினபின், ஏதிலார் தூற்றும் அலருக்கு நாணக் கூடுமோ, கூடாது.*

*அலர் நாண ஒல்வதோ என்பது : அலருக்கு நாணக்கூடுமோ, கூடாது என்றது.* பலரும் நம்மைக்கண்டு நாணுதல் : களவொழுக்கங் கண்டு நாணுதல். நீத்தல் : விட்டு நீங்கல். கடை : இடம். *9*

**1150. தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டில்**
**கவ்வை யெடுக்குமிவ் வூர்.**

தலைவிக்குப் பாங்கி சொல்லியது.

*தலைவர் நம்மை வேண்டி நாம் வருந்தாமல் நமக்கு அருள் புரிவர்; நாம் அவரை வேண்டி வருந்தில் அவ் வருத்தத்தைக் கண்டு இவ்வூரவர் அலர் தூற்றுவார்.*

ஆதலால் வருந்தாது இருப்பாய் என்று தலைவிக்குத் தோழி சொல்லியது.

[குறிப்பு : *யாம்வேண்டும் என்பது அச்சுப்பாடம்.*]

அலரறிவுறுத்தல் முற்றும்.

*களவியல் முற்றும்.*

---

## கற்பியல்

## 116. பிரிவாற்றாமை

அஃதாவது, தலைவன் பொருள்மேல் பிரியத் தலைவி தனிமை ஆற்றாமை.

1151. செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

ஒன்று சொல்கின்றேன் என்ற தலைவற்குத் தலைவி சொல்லியது.

*நீ எம்மைப் பிரியாமை உண்டாயின் அதனை எனக்குச் சொல்லுக; அது ஒழியப் பிரிந்துபோய் விரைந்து வருதல் சொல்லுவாயாயின் அதனைக் கேட்டிருந்து உயிர் வாழ்வார்க்குச் சொல்லுக.* 1

1152. இன்கண் உடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்கண் உடைத்தாற் புணர்வு.

பிரிவு தலைமகன் குறிப்பான் அறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

*தழையும் கண்ணியும் கொண்டு பின்னின்ற ஞான்று அவர் நோக்குமாத்திரமும் புணர்ச்சி குறித்தமையான் நமக்கு இன்பம் உடைத்தா யிருக்கும்; இன்று அப் புணர்ச்சிதான் நிகழா நிற்கவும் அது பிரிவர் என்று அஞ்சும் அச்சத்தினை உடைத்தாயிற்று; அவர் அன்பின் நிலைமை இது.* 2

[குறிப்பு: *இதன் உரை பிரதியில் இல்லை, ஆகவே பரிமேலழகர் உரை எழுதப்பட்டது.*]

1153. அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.

இதுவுமது

*நம் பிரிவாற்றாமையை அறிதலுடைய காதலரிடத்தும் ஒரோவழிப் பிரிவு நிகழ்தலால் அவர் சொல்லும் தலையளியும்பற்றி நம்மிடத்து அன்புடையர் எனத் தேறுந் தேற்றம் அரிதாயிருந்தது.*

1154. அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொல்
தேறியார்க் குண்டோ தவறு.

**இதுவுமது**

*தம்மை எதிர்பட்டபோது தலையளி செய்து, 'நின்னிற் பிரியேன் அஞ்சல்' என்றவர் தாமே பிரிவராயின் அவர்க்கன்றி, அவர் தெளிவித்த சொல்லை மெய்யென நம்பித் தெளிந்திருந் தார்க்குக் குற்றம் உண்டோ?*

தேறியர் என்பது தன்னைப் பிறர்போலக் கூறல். 4

**1155. ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு.**

**இதுவுமது**

*என் உயிர் போகாமல் காப்பாயாகில் நம்மை ஆளுதற்கு அமைந்த தலைவர் செலவினை விலக்கு; விலக்குவரின்றி அவர் செல்வராயின் அவரால் ஆளப்பட்ட உயிரும் செல்லும்; சென்றால் பின் அவரைக் கூடுதல் அரிதாம்.*

*பிரிவோம்பல் என்பது பிரிவினை விலக்குவாய் என்றது.* 5

**1156. பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னு நசை.**

கடிதின் வருவர் என்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

*நம்முன் நின்று தம் பிரிவினை உணர்த்தும் வன்கண்ணராயின் அத்தன்மை கடிதின் வந்து தலையளி செய்வது அரிது. செய்வார் என்றிருக்கும் ஆசை விடப்படும்.*

*நசை : ஆசை.* 6

**1157. துறைவன் துறந்தமை தேற்றாய்கொல் முன்கை
இறையிறவா நின்ற வளை.**

**இதுவுமது**

*துறைவன் என்னைப் பிரியலுற்றமையை, அவன் உணர்த் தாமல் தானே உணர்ந்து என் முன்கை மணிக்கட்டினின்று வளைய லெல்லாம் கழன்று விழுந்தன; அவன் பிரிந்தமையை எனக்கு நீ தெளிவிக்க வேண்டா.*

*தலைவன் பிரிவினை யானறிய என் கைவளை அவன் பிரிந்தான் என்று வீழ்ந்து சொல்லிய; தோழி, நீ சொல்ல வேண்டா என்றது.*

விலக்காது சொல்ல வந்தாய் என்று புலந்து சொல்லியது. *துறைவன்: தலைவன்.* 7

[குறிப்பு : *தூற்றுகொல் என்பது அச்சுப்பாடம்.*]

1158. இன்னு தினனில்லூர் வாழ்த லதனினும்
இன்னு தினியார்ப் பிரிவு.

இதுவுமது

காமத்தில் வருந்தும் மாதர்க்குத் *தம் குறிப்பறியும் தோழியர் இல்லாத ஊரிலே வாழ்தல் பொல்லாது ; அதனினும் பொல்லாது காதலரைப் பிரிந்து உயிர் வாழ்தல்.*

தலைவன் பிரிதலை விலக்கமாட்டாத தோழியை வெறுத்துச் சொல்லியது. 8

1159. தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ.

காமத் தீயைத் தணிப்பாய் என்ற தோழிக்குச் சொல்லியது.

*தீ தன்னைத் தொட்டாற் சுடுவதல்லது, காமமாகிய நோயைப் போலத் தன்னை அகன்றாற் சுட வற்றோ, காட்டாய்.*

தீயினும் கொடியதனைத் தணிக்குமாறு என்னை என்றது. 9

1160. அரிதாற்றி யல்லல்நோய் நீக்கிப் பிரிதாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்.

பிரிந்த தலைவியர் பலர் ஆற்றி யிருப்பார் என்ற தோழிக்குச் சொல்லியது.

*பிரிவினை உடன்படுத்தும் தலைவியர் அதற்கு உடன்பட்டுப் பிரியும் போது அல்லல் நோயினையும் நீக்கிப் பிரிந்தாற் பிரிவினை ஆற்றிப் பின் இருந்து உயிர்வாழும் மகளிர் உலகத்துப் பலர்.*

*முன்னும் பின்னும் பிரிந்தவர், பிரிவாற்றியிருப்பர். யான் ஒருக்காலும் பிரிந்தில்லாமையால் ஆற்றுதல் அரிது என்றது.* 10

பிரிவாற்றுமை முற்றும்.

---

## 117. படர்மெலிந் திரங்கல்

*அஃதாவது, படர் : நினைத்தல்; மெலிவு : மேனி மெலிவு; இரங்கல் : புலம்பல். படரால் மெலிந்து இரங்கல் என்க.*

**1161. மறைப்பேன்மன் யானிதோ நோயை யிறைப்பவர்க்
ஊற்றுநீர் போல மிகும்.**

காம நோயை வெளிப்படுத்துதல் அன்றுனுக்கு ஏலாது என்று
தோழிக்குச் சொல்லியது.

*இந்நோயைப் பிறர் அறிதல் நாணி யான் மறைப்பேன்; மறைப்பவும், நீர் வேண்டும் என்று இறைப்பவர்க்கு ஊற்றுநீர் ஊறுமாறு போல மிகா நின்றது.* 1

[குறிப்பு : *யானிஃதோ என்பது அச்சுப்பாடம்.*]

**1162. கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும்.**

காம நோயை மறைத்துத் தலைவற்குத் தூது விடு என்ற
தோழிக்குச் சொல்லியது.

*காம நோயை ஒளிப்பதற்கும் என்னால் கூடாது; இந்நோய் செய்த தலைவற்கு உரைக்க வேண்டும் என்று நினைத்தாலும் நாணந்தருகின்றது; யான் என் செய்வேன்?* 2

**1163. காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
நோனா வுடம்பி னகத்து.**

இதுவுமது

*காம நோயும், அதனைச் செய்தவர்க்கு அறிவிக்கக் கூடாத நாணும் என் உயிர் காவடியாக எடுபப நோய் ஒரு பக்கமும் நாண் ஒரு பக்கமும் தொங்கிக் கிடந்தன, அதனைப் பொறுக்க மாட்டாத உடம்பினகத்தே.*

காவா என்பது : காவடியாக என்றது. நோனா உடம்பு : தாங்கமாட்டாத உடம்பு. தூங்கும் என்பது : இரண்டு பக்கத்தும் தொங்கிக் கிடக்கும் என்க. 3

**1164. காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்தும்
ஏமப் புணைமன்னு மில்.**

காமக் கடலை அதற்கேற்ற தெப்பைகொண்டு கடக்க வேண்டும்
என்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

காமக் கடல் என்னைக் கொள்ளா நின்றது : அதனை நீந்திக் கரை யேறுதற்கு ஏற்ற தெப்பையைக் காணேன்.

*புணை : தெப்பை.* 4

[குறிப்பு : *தெப்பை - தெப்பம் என்பது அச்சுப்பாடம்.*]

1165. துப்பி னெவனாவர் மற்கொ லுயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

தலைவர் மிகுந்த நட்பினர், வருவர் என்ற தோழிக்குச் சொல்லியது.

*இன்பஞ் செய்யத் தகும் நட்பினிடத்தே துன்பஞ் செய்யும் துயர் வரவினைச் செய்பவர், துன்பஞ் செய்யும் பகையிடத்தே என் செய்வர் கொல்லோ ?*

துப்பு : பகை. நட்பினுள் துயர்வரவு செய்பவர் பகையிடத்து என் செய்யார் என்றது.

தன்னைப் பகையாகச் சொன்னதுமாம். 5

1166. இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்கால்
துன்ப மதனிற் பெரிது.

இன்பமுள்ள விடத்துத் துன்பமும் சமனாக வரும் என்ற
தோழிக்குச் சொல்லியது.

காமப் புணர்ச்சியால் இன்பம் கடல்போலப் பெருகியது ; அந்தக் காமந் தானே துன்பஞ் செய்யுமிடத்து அக்கடலினும் பெரிதாகிய துன்பமானது.

காமந்தானே இன்பமுஞ் செய்து துன்பமுஞ் செய்தது. வேறு வேறு இன்பமும் துன்பமும் வந்ததில்லை என்றது. 6

1167. காமக் கடும்புன லீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே உளன்.

இதுவுமது

காமமாகிய துன்பக் கடற் புனலை நீந்தி, நீந்தியும் கரையைக் காணேன் ; எல்லாருந்துயிலும் நடுச்சாமத்திலும் அக்கடலிலே கிடக்கின்றேன்.

*யானே உளன் என்றது, எனக்கொரு துணையும் காணேன் என்றது.*

நீ துணையில்லை என்று தோழியை வெறுத்தது. 7

1168. மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
என்னல்ல தில்லை துணை.

இரவின் கொடுமை கூறியது.

*இவ்வுலகத்து நிலைபெற்ற உயிர்களை யெல்லாம் துயிலச் செய்து கருணையாயிருந்து, இவ்விரவு என்னைத் துயிலச்செய்யாமல் தனக்குத் துணையாக வைத்தது; யானல்லாமல் அதற்கு வேறு துணையில்லை.*

எல்லார்க்கும் அளித்தாக இருந்து எனக்கு அளியில்லை எனறது. *அளி : கருணை.* 8

1169. கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நாள்
நெடிய கழியு மிரா.

இதுவுமது

*நம்மைப் பிரிந்த கொடிய தலைவர் கொடுமையிலும் தாம் கொடியவாயின, இந்நாள் எல்லா நாளிராவிலும் நெடியவாகச் செல்கின்ற விரா.*

இரா என்பது : இராத்திரி என்க. தலைவர் கூடி இன்பஞ் செய்யும் நாளில் இன்பஞ் செய்து குறுகியும், அவர் பிரிந்து துன்பஞ் செய்யும் நாளில் துன்பஞ் செய்து நீட்டித்தும் நிற்பதனாற் கொடியார் கொடுமையினும் தாம் கொடிய என்றதென்க. 9

1170. உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோவென் கண்.

கண்கள் அழகழிய அழற்பாலை என்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

*மனம் போலக் காதலர் உள்ள தேசத்து கடிதிற் செல்ல வல்லவாயின், என் கண்கள், இங்ஙனம் வெள்ளமாக அழுகின்ற நீரை நீந்த மாட்டாவோ.*

*மனம் அவர்பின் செல்லக் கண்கள் பின் செல்லாது நின்றதனால் வெள்ள நீரை நீந்தலாகாதோ என்றது.* 10

படர் மெலிந்திரங்கல் முற்றும்.

---

## 118. கண்விதுப்பழிதல்

*அஃதாவது, கண்கள் காட்சி விதுப்பால் வருந்துதல்.* விதுப்பு : தலைவனைக் காணுதற்கு விரைதல்.

**1171. கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது.**

தோழிக்குச் சொல்லியது.

தலைவனைக் காட்டச் சொல்லிக் கண்கள் அழுகின்றதென் கருதியோ, இப்படி அழுகின்ற நோய் காதலரைத் தாம் காட்ட யாம் கண்டதல்லவோ.

*தண்டா நோய் : நீங்காத நோய் என்க.* தான் கண்டது : முற்காலத்துச் சோலையிற் கணவனைக் கண்டது. *1*

**1172. தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
பைத லுழப்ப தெவன்.**

இதுவுமது

*இயல் விளைவதனை ஆராய்ந்தறியாது அன்று காதலரை நோக்கி நின்ற உன் கண்கள் இன்று, ' இது நம்மால் வந்தது ஆகலின் பொறுக்க வேண்டும் ' என்று கூறுபடுத்தறியாது துன்பம் உழப்பது என் கருதியோ?*

*தெரிந்துணர்தல் : தேர்ந்தறிதல். உண்கள் : மையுண்கண்.* பரிந்துணர்தல் : கூறுபடுத்து அறிதல். *பைதல் : துன்பம். எவன் : என் கருதி என்றது.* *2*

**1173. கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்க துடைத்து.**

இதுவுமது

*இக்கண்கள் அன்று காதலரைத் தாமே விரைந்து நோக்கி இன்றும் தாமே இருந்தழுகின்றன. இது நம்மால் நகைக்கப்பட்ட இயல்பினை யுடைத்து.*

*கலுழ்தல் : அழுதல்.* *3*

**1174. பெயலாற்ற நீருலந்த வுண்க ணுயலாற்ற
உய்விநோ யென்க ணிறுத்து.**

இதுவுமது

உண்கண்கள் யானுய்யமாட்டாமைக்கு ஏதுவாகிய ஒழிவில்லாத நோயை என்னிடத்தே நிறுத்தித் தாமும் அழமாட்டா வண்ணம் நீர் வற்றிவிட்டன.

உய்வில் நோய் : உய்யமாட்டா நோய். 4

1175. படலாற்றுப் பைத லுழக்குங் கடலாற்றுக்
காமநோய் செய்தவென் கண்.

இதுவுமது

எனக்குக் கடலும் சிறிதாம் வண்ணம் பெரிதாய காம நோய்ச் செய்த கண்கள், தீவினையால் தாமும் துயில்கல்லாது துன்பம் உழந்து நின்றது.

படல் : கண்படல்; தூங்கல் என்க. துபைதல் : ன்பம். 5

1176. ஓஒ வினிதே எமக்கிந்நோய் செய்தகண்
டாஅ மிடர்ப்பட் டது.

இதுவுமது

எமக்கிந்த காம நோயைச் செய்த கண்கள் தாமும் துயிலாது இடர்ப்பட்டது மிகவும் இனிதாயிற்று.

ஓஒ என்பது ஆச்சரியம். 6

[குறிப்பு : இதற்பட்டது என்பது அச்சுப்பாடம்.]

1177. உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழந்து
வேண்டி யவர்க்கண்ட கண்.

விழைந்து உண்ணெகிழ்ந்து விடாதே விரும்பி அன்று அவரைக் கண்ட கண்கள் இனித் துயிலாது அழுதலாகிய துன்பத்தை யுழந்துழந்து தம்மகத்தே யுண்ணீர் அற்றே போக வேண்டும். 7

1178. பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணா தமையல கண்.

காதலர் பிரிந்து போகவில்லை, அவர் வருமளவும் அழாதொழி
என்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

*நம்மைப் பேணுது நம்மேல் விருப்பமுடையவர் பிரியாதிருந்த னர் மன்னோ ; அவரைக்கண்ட கண்கள் மற்றும் காணுமல் அமை கின்றன வில்லை.*

மன்னோ என்றதனல், நீ சொன்னது பொய் என்றது. கொண்கனைக் காணு தமையல கண் என்று பாடம் ஒதுவாரும் உளர். 8

1179. வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
ஆரஞ ருற்றன கண்.

இதுவுமது

*காதலர் வாராப் போதும், அவர் வரவு பார்த்துத் துஞ்சா ; வந்த போதும், அவர் பிரிவினை யஞ்சித் துயிலா ; ஆகலான் இரு வழியும் என்கண்கள் துயிலாது இடர்ப்பட்டன.*

*ஆயிடை : அவ்விடம் என்க. ஆரஞர் : இருவழியும் துன்பம் என்க.* 9

1180. மறைபெற லூரார்க் கரிதன்று லெம்போல்
அறைபறை கண்ணா ரகத்து.

காதலரை இயற்பழித்து உரையாமல் அவர் கொடுமையை மறைப்பாய்
என்ற ரோழிக்குத் தலைவி சொல்லியது.

*தலைவர் கொடுமை என்னல் மறைக்கப் படுதல் மிகவும் அரிது. ஊரார் அறிவரியரல்லர்; எளிதாய் அறிவாய் எனக் கண்களானவை பறை யறைந்து சாற்றுகின்றன. எம்போல்வாரிடத்து மறைக்கப் படுதல் அரிது.*

ஊராரறியாமல் மறைப்பது அரிதென்ருலும் எம்போல்வார்க்கு மறைப்பதரிது. அது எப்படி யென்னில் என் கண்கள் பறையறைந்து சாற்றுதல் போலச் சிலர் உளராயில் அவரிடத்து மறைப்பது எப்படி ; என் மனதில் இருப்பதனைக் கண் அறிந்து பறை அறைவது போல அவரும் அறைவர் என்றது.

அறைபறை கண்ணாரகத்து மறைப்பது அரிது எனக்கூட்டி யுரைக்க. 10

கண்விதுப்பழிதல் முற்றும்.

---

## 119. பசப்புறு பருவரல்

*அஃதாவது, காமத்தால் மேனி பசலைபூப்ப, மனம் வருந்துதல்.*

**1181. நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பயந்தவென்**
**பண்பியார்க் குரைக்கோ பிற.**

**தலைவி நெஞ்சொடு கிளத்தல்.**

*என்னை நயந்தவர்க்கு முந்திப் பிரிவினை உடன்பட்டேன்; யான் அதனை ஆற்றாது இப்போது பசலை பூத்தேன். இந்தப் பண்பினை யார்க்குச் சொல்லுவேன்?*

*நல்காமை : பிரிவு; நேர்தல் : உடன்படுதல்; பசத்தல் : பசலை பூத்தல்.* 1

**1182. அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்**
**மேனிமே லூரும் பசப்பு.**

**இது தோழிக்குச் சொல்லியது.**

*அவர் பிரிவினை நான் ஆற்றினேனாகவும், இப்பசலையானது அவர் தன்னை உண்டாக்கினார் என்னும் பெருமிதத்தினால் என் மேனியெல்லாம் ஊர்ந்து கொண்டு திரிகின்றது.*

*அவர் தந்தார் என்பது : அவர் பசலையை உண்டாக்கினார் என்றது.* தலைவர் தந்தார் என்னும் சலுகை என்க. 2

**1183. சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறா**
**நோயும் பசலையுந் தந்து.**

**இதுவுமது**

*சாயலையும் நாணையும் தலைவர் வாங்கிக்கொண்டு, அதற்கு* மறுசாக்குக்காம் *நோயும் பசலையும் எனக்குத் தந்தார்.* 3

**1184. உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமால்**
**கள்ளம் பிறவோ பசப்பு.**

**இதுவுமது**

*அவர் சொன்ன சொற்களை யான் மனத்தின்விடாது நினைப்பேன்; சொல்கின்றதும் அவர் திறங்களையே சொல்கின்றேன்; அப்படியிருந்தும் பசலை வந்து மூடியது கள்ளமாக இருந்தது.*

*தலைவர் பிரிந்தும் என்னிடத்து விடாதிருப்பவும் பசலை வந்தது கள்ளம் என்றது மாயமோ என்று தோழிக்குச் சொல்லியது.* 4

**1185.** **உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்**
**மேனி பசப்பூர் வது.**

இதுவுமது

முந்தி என்மேல் பசலையைக் காணேன் ; காதலர் பிரிந்தார், பிரிந்தவுடனே வரக்கண்டேன், என மேனிப் பசலை படர்வதனைக் காணாய், தோழி.

*உவக்காண், இவக்காண் என்பன உங்கு இங்கு என்று இடத்தின் மேனின்றன.* 5

**1186.** **விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்**
**முயக்கற்றம் பார்க்கும் பசப்பு**

இதுவுமது

*விளக்கின் மெலிவு பார்த்து நெருங்கி வரும் இருள்போலக் கொண்கன் முயக்கின் மெலிவு பார்த்து நெருங்கி வரும் பசப்பு.*

*கொண்கன் : தலைவன். முயக்கு : கல்வி.* 6

**1187.** **புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவில்**
**அள்ளிக்கொள் வற்றே பசப்பு.**

இதுவுமது

*முன்னொரு நாள், காதலரைப் புல்லிக் கிடந்தேன், அறியாது புடைபெயர்ந்தேன் ; அவ்வளவிலே அள்ளிக் கொள்வதுபோல வந்து உடம்பெல்லாம் பசலை படர்ந்தது.*

*புல்லல் : தழுவல்.* புடைபெயர்தல் : பக்கத்தில் புரண்டு படுத்தல்.

**1188.** **பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்**
**துறந்தா ரவரென்பா ரில்.**

பசக்கற் பாலை என்ற தோழிக்குச் சொல்லியது.

*இவள் ஆற்றியிராது பசந்தாள் என்று என்னைப் பழி கூறுவதல்லது, இவளை யார் துறந்து போயினர் என்று அவரைப் பழி கூறுவார் இல்லை.*

*என்பார் என்று, தோழியை வெறுத்தது.*

**1189.** பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலை யாவ ரெனின்.

இதுவுமது

யான் பட்டது படுக, என் மேனி பசப்பது பசக்க, இப்பிரிவினை எனக்கு உடன்படுத்தினர் நன்னிலையராக இருந்தால் போதும். 9

**1190.** பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றா ரெனின்.

தலைவனை யியற்பட மொழிதல்.

*அன்று தம் குறையை நயப்பித்துக் கூடினவர்க்கு, இன்று எனக்கு நல்காமையை நட்டோர் தூற்றாராயிற் பசப்பெனப் பேர் பெறுதல் நன்று.*

*நயப்பித்தல் : தங்குறையினைச் சொல்லிக் குறை முடித்துக் கொள்ளுதல். நல்காமை : தனக்கின்பம் செய்யாமை. நட்டோர் என்பது வருவித்துக் கொள்க.* 10

பசப்புறு பருவரல் முற்றும்.

---

## 120. தனிப்படர் மிகுதி

*அஃதாவது, தலைவி தனியே யிருந்து தலைவன் காமத்தை மிகுதியாக நினைத்தல்.*

**1191.** தாம்வீழ்வார் தாம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி.

*தம்மால் காதலிக்கப்படும் கணவர் தம்மைக் காதலிக்கப் பெற்ற காதலியர் பெற்றாரன்றே காமப்புணர்ச்சி என்னும் விதை யில்லாத கனியை.*

*காழ் : விதை.* முன் அனுபவித்த காமத்தை நினைத்தது.

[குறிப்பு : *தம்வீழப் என்பது அச்சுப்பாடம்.*]

**1192.** வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி.

இதுவுமது.

அறமும், பொருளும் வேண்டிப் பிரிந்த தலைவர் வந்து, நம்மால் விரும்பப் பட்ட நாயகிக்குத் தாமளிக்கும் கலவி, வானத்தை நோக்கி வாழ்வார்க்கு வானம் மழை பொழிந்தது போலும். 2

1193. வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு.

இதுவுமது

தம்மால் விரும்பிய தலைவர் விரும்பி அணையப்படுவார், பிரிவின்றி யமைந்திருப்பாராயின், அவர்க்கு அமையுமன்றோ, வாழ்கின்றோம் என்னும் செருக்கு.

பிரிந்தவர்க்குச் செருக்குண்டோ என்று தலைவி மெலிந்தது. 3

1194. வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்.

இதுவுமது

தம்மால் விரும்பப்படும் தலைவியர்க்கு நல்வினை யாட்டியாரலலர்; தீவினை யாட்டியாராவர், நன்கு மதிக்கப்படும் தலைவரால் விரும்பி அணையப் பெறுமல் வருந்துவராயின்.

*கெழீஇயிலர் என்றது, நல்வினையிலர் என்க. வீழ்வார், வீழப் படுவார், தாம் வீழ்வார் என்பவல்லாம் விரும்பப்படுதல்.* 4

1195. நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை.

நீ மிகவும் காதலர்மேல் காதலுடையை; நின் காதல் வருத்தம் ஆற்றுவாய் என்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

*நம்மால் காதல் செய்யப்பட்ட தலைவர் நமக்கு என்ன இன் பத்தைச் செய்வர்? நாம் காதல் செய்வதுபோல் தாமும் காதல் செய்யாத விடத்து.*

1196. ஒருதலையா னின்னாது காமங்காப் போல
விருதலை யானு மினிது.

**இதுவுமது**

*ஆண்பால் பெண்பால் என்னும் இருதலையினும் எண்ணு மாசை ஒருதலைக் கண்ணேயாயின் அது இன்னாது;* தராசின் தட்டுப் போல இருதலைக்கண்ணும் ஒப்பின், அது இனிது.

**1197. பருவரலும் பைதலுங் காணான்கொல் காமன்
ஒருவர்க ணின்றொழுகு வான்.**

**இதுவுமது**

*காமப் புணர்ச்சிக்குரிய இருவரிடத்தும் ஒப்ப நிற்றல் அன்றி, ஒருவரிடத்தே நின்று, பொருகின்ற காமக் கடவுள் என்னிடத்துப் பசலையான் வந்த துன்பமும் படர் மிகுதியும் அவரிடத்துக் காணான் கொல்லோ?* 7

**1198. வீழ்வாரின் னின்சொல் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில்.**

**தலைவர் தூது காணாது சொல்லியது.**

*தம்மால் விரும்பப்படுங் காதலரிடத்தில் ஓர் இன் சொல் அளவாகிலும் பெறாது உலகத்தில் பிரிவாற்றி உயிர் வாழ்வார் போலப் பெண்பாலின் வன்கண்ணார் இல்லை.* 8

**1199. நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு.**

**இதுவுமது**

*என்னால் நச்சப்பட்ட காதலர் என்கண் அன்பிலராயினும், அவர் திறத்து யாதானுமோர் சொல்லும், என் செவிக்கு இனியவாம்.* 9

**1200. உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழியென் னெஞ்சு.**

**நெஞ்சொடு புலத்தல்**

*நின்னொடு உறுதார்க்கு நின்னுறு நோயை உரைக்க லுற்ற நெஞ்சே!* நீ ஆற்றுயாயினும், கடலைத் தூர்த்தல் உனக்கரிது நெஞ்சே. 10

[குறிப்பு: *வாழிய நெஞ்சு என்பது அச்சுப்பாடம்.*]

**தனிப்படர் மிகுதி முற்றும்.**

# 121. நினைத்தவர் புலம்பல்

*அஃதாவது, தலைவி தலைவனை நினைத்துப் புலம்புதலும் தலைவன் தலைவியை நினைத்துப் புலம்புதலும். இருமைக்கும் பொதுப்பட வைத்தது.*

[குறிப்பு : *நினைந்தவர் புலம்பல் என்பது அச்சுப்பாடம்.*]

1201. எனைத்தொன் றினிதேகாண் காமந் தாம்வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில்.

**தலைவனோடுற்ற இன்பத்தை நினைத்துத் துன்பத்தை ஆற்றுவாய் என்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.**

*காமம் எவ்வளவாயினும் இனியதொன்றே காண்; தம்மால் விரும்பப்படுவாரை நினைப்ப, வருவதொரு துன்பமில்லை யாகலான்.*

உற்ற இன்பத்திலும் அவரைப் பிரிந்த துன்ப மிகுதி என்று சொல்லியது.

1202. நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்
சினைப்பது போன்று கெடும்.

**நின்னை நினைத்துத் தலைவர் கடிதின் வருவர் என்ற தோழிக்குச் சொல்லியது.**

*தும்மல் என்னிடத்துத் தோன்றுவது போன்று தோன்றாது நின்றது; ஆகலான் அவர் நம்மை நினைப்பவர் போன்று நினையார் கொல்லோ.*

தம்மால் காதலிக்கப்பட்டவர் நினைக்கத் தமக்குத் தும்மல் வருதல் பெண்கள் வழக்கம். 2

1203. மறப்பி னெவனுவன் மற்கொன் மறப்பறியேன்
உள்ளினு முள்ளஞ் சுடும்.

**இனியாவாரை நினைத்தாற்ற வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது.**

அவரை மறந்தால் யானெனன்கின்றேனாக மாட்டேன்; மறக்க வேண்டுமென்று நினைந்தாலும் மறந்தறியேன், அவர் எமக்குச் சொல்லிய வாய்மையை நினைப்பிறும் அது என் உள்ளத்தைச் சுடுகின்றது.

வாய்மை : தெய்வப் புணர்ச்சியிற் பிரியேன் என்று சொல்லிய சத்தியம். 3

1204. யாமு முளங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோஒ வுளரே யவர்.

இருவர்க்கும் ஒரு நினைப்பாம் என்ற தோழிக்குச் சொல்லியது.

என்னுடைய நெஞ்சத்து எப்போதும் அவர் இருப்பது போல, அவர் நெஞ்சத்துள்ளும் யாமும் உள்ளோம் கொல்லோ? 4

1205. தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்
எந்நெஞ்சத் தோவா வரல்.

இதுவுமது

*தமது நெஞ்சத்தின்கண் யாம் செல்லாமல் காவல் கொண்டவர், தாம் அதனை நினையாமல் எம் நெஞ்சத்தின் ஒழியாது வருவதற்கு நாணார் கொல்லோ?*

கடி : காவல். ஓவாவரல் : ஒழியாது வரல். 5

1206. விளியுமென் னின்னுயிர் வேறல்ல மென்பார்
அளியின்மை யாற்ற நினைந்து.

இதுவுமது

*தாம் என்னை எதிர்ப்பட்ட ஞான்று,* இருதலைப் புள்போல ஒன்றும், வேறல்ல *என்று கூறிய தலைவருடைய கருணையில்லாமையை நினைந்து மிகவும் கெடுகின்றது என் இனிய உயிர்.*

*விளிதல் : கெடுதல். அளியின்மை : கருணையில்லாமை. ஆற்ற என்பது, மிகவும் என்றது.*

1207. மற்றியா னென்னுளேன் மன்னோ வவரொடியான்
உற்றநா ளுள்ள வுளேன்.

இதுவுமது

*அவர் வந்து எம்மைக் கண்ணுற்ற ஞான்று அவரோடு எம்மிடை நிகழ்ந்த இன்பங்களை நினைந்து உயிர் வாழ்கின்றேன்; அதுவன்றி மற்றியான் யாதினை யுடையேன்?*

*உற்ற நாளை உள்ள உளேன் எனப்பிரித்துப் பொருள் காண்க.*

1208. விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி.

தலைவன் வரவுணர்ந்து சொல்லல்.

மதியே, வாழ்வாயாக; ஒருநாளும் ஒளியாமற் பிரிந்து போனார் யான் மனத்தானன்றிக் கண்ணினால் காண்படாது ஒழிவாய். 8

1209. உள்ளினுந் தீராப் பெருமகிழ் வெய்தலால்
கள்ளினுங் காம மினிது.

தலைவன் பாசறையில் தலைவியை நினைந்தது.

தம்மால் காதலிக்கப்பட்ட காதலியைக் கண்ட விடத்தல்லது நினைத்த விடத்தும் நீங்காத மகிழ்ச்சியைத் தரும் ஆதலான், உண்டுழியல்லது கண்டுழி இன்பம் தராத கள்ளினும் காமம் இனிது.

உள்ளுதல் : நினைத்தல். 9

[குறிப்பு : பெருமகிழ் செய்தலால் என்பது அச்சுப்பாடம்.]

1210. எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு.

இத்துன்பம் அறிந்து வந்து காதலர் நினக்கு இன்பம் செய்வர் என்றாட்குச் சொல்லியது.

தம்மை யான் எத்துணையும் மிக நினைந்தாலும் அதற்கு வெகுளார்; காதலர் எனக்குச் செய்யும் இன்பமாவது அவ்வளவன்றோ?

வெகுளாமை - அதற்குடன்பட்டு நெஞ்சின்கண் நிற்றல். தனக்கு அவ்வின்பத்தில் சிறந்த தின்மையின், அதனைச் சிறப்பு என்றாள். 'காதலர் நம்மாட்டருள்' என்றும், 'செய்யுங் குணம்' என்றும் பாடமோதுவாரு முளர். தோழி கூறிய அதனைக் குறிப்பான் இகழ்ந்து கூறியவாறு. 10

[குறிப்பு : இக்குறளின் உரை இப்பிரதியில் இல்லாமையால் பரிமேலழகர் உரை எடுத்து எழுதப்பட்டது.]

[இது முதல் 3 அதிகாரங்களுக்குரிய குறள்கள் எல்லாம் அச்சுப்பதிப்புக்களில் கூறிய முறையினின்றும் இடம் மாறிக் காணப்படுகின்றன.]

நினைந்தவர் புலம்பல் முற்றும்.

---

## 122. கனவு நலிபுரைத்தல்

அஃதாவது, கனவு கண்டு தலைவி நலிவினை உரைத்தல். கனவு காணல், தலைவன் கலவி நலத்தினைத் தலைவி கனவிலே கண்டு விழித்து நலிந்துரைத்தல்.

[குறிப்பு : *கனவு நிலையுரைத்தல் என்பது அச்சுப்பாடம்.*]

1211. நனவென வொன்றில்லை யாயிற் கனவினுல்
காதலர் நீங்க லரிது.

தன் நெஞ்சொடு சொல்லியது.

*நனவென்று சொல்லபபட்ட கொடியதொன்று இல்லையாயின் கனவிடத்துக் காதலர் எம்மை விட்டுப் பிரிதல் அரிது.*

கனவினிருத்தலை நனவு வந்து பிரித்தது என்றது. 1

[குறிப்பு : *காதலர் நீங்கலர் மன் என்பது அச்சுப்பாடம்.*]

1212. துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்து ளாவர் விரைந்து.

இதுவுமது

*யான் கண்டுயிலும் காலத்து எனது தோளிடத்தராகி, விழிக்குங்கால் விரைந்து என் நெஞ்சத்தராகி நின்ருர்; ஆதலால் தலைவர் கனவிலும் நனவிலும் பிரிகிலர்.* 2

[குறிப்பு : *நெஞ்சத்தராவர் என்பது அச்சுப்பாடம்.*]

1213. நனவினுற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது.

நனவினிடத்துக் கண்டு துய்த்த இன்பம் அப்பொழுதைக்கு இன்பமாம்; அப்படிப்போலக் கனவினிடத்துங் கண்டு துய்த்த இன்பமும் அப்பொழுதைக்கு இன்பமாம்; அத்துணையே பிறிதொரு பயனில்லை.

நனவுந்தான் கண்டபொழுதே இனிது; கனவுந்தான் கண்டபொழுதே இனிது, என்று காதலரைக் காணேன் இரண்டிடத்தும் பிரிந்தார் என்றது. 3

1214. நனவினு னல்கா தவரைக் கனவினுல்
காண்டலி னுண்டென் னுயிர்.

காதலரைக் காணாமல் எப்படி யாற்றியிருந்தாய் என்ற தோழிக்குச் சொல்லியது.

*நனவினிடத்து ஒரு நாள் வந்து நல்காதவரைக் கனவினிடத்துப் பலகாலும் காண்டலால், என்னுயிர் பிழைத்திருந்தது.*

1215. **கனவினா லுண்டாகுங் காம நனவினால்**
**நல்காரை நாடித் தரற்கு.**

இதுவுமது

*நனவின்கண் வந்து தலையளி செய்யாத காதலரைக் கனவு காட்டித் தருதலான் எனக்குக் காம இன்பம் உண்டாகின்றது.* 5

1216. **நனவினா னல்காக் கொடியர் கனவினான்**
**என்னெம்மைப் பீழிப் பது.**

நெஞ்சொடு சொல்லியது.

*ஒரு நாளும் நனவின்கண் வந்து எமக்கு அருள் செய்யாத கொடியர் அருளுடையர் போலக் கனவின்கண் பலநாளும் வந்து எம்மைத் துன்புறுத்தல் என் கருதி?*

பீடை என்ற கிரந்தச் சொல் பீழை என்றாயிற்று. 6

[குறிப்பு: *கொடியார் என்பது அச்சுப்பாடம்.*]

1217. **நனவினா னல்காரை நோவர் கனவினால்**
**காதலர்க் காணா தவர்.**

இயற்பட மொழிந்தது.

*நனவின்கண் வந்து சேராத காதலரை நொந்து உரை செய்வர்;* என்னைப் போலக் கனவிலே கண்டு இன்பம் அனுபவிக்கக் கனவின் காதலர் வருதலைக் காணாத காதலியர்.

அவரைப் போல யான் நோவாமல் காதலர் கனவின் வருகின்றார் என்றது. 7

1218. **நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினால்**
**காணார்கொ லிவ்வூ ரவர்.**

இதுவுமது

*காதலர் நனவின்கண் நம்மைவிட்டு நீங்கினார் என்று காதலரைக் கொடுமை கூறுவர்; கனவின்கண் வந்து தலையளி செய்தலைக் காணார் கொல்லோ; இவ்வூரவர்.* 8

1219. கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன்.

நெஞ்சொடு சொல்லல்.

*கயலுக்கு ஒப்பாகி மையுண்ட கண்கள் யாம் இரந்து கொண்ட அதற்கு இரங்கித் துயில் கொள்ளுமாயின் அப்போது வருவர்; வந்தால் அந்தக் கனவினைக் கலந்து பிரிந்தார்க்கு யான் உய்யும் வகை யாதென்று கேட்கச் சொல்லுவேன்?*

கேட்கச் சொல்லுதல் - குறிப்பினு லறிதல். 9

1220. காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து.

கனவில் காண்டல் நனவில் பலித்தல் கூறல்.

காதலர் நம்பால் விட்ட தூதுடனே வந்ததனுல் அப்படிக் கண்ட கனவு, நனவிற் பலித்தலால் அந்தக் கனவினுக்கு யாது விருந்தாகச் செய்வேன்.

*விருந்து செய்தல் : கனவினுக்கு வெகுமானஞ் செய்தல்.* 10

கனவு நலிபுரைத்தல் முற்றும்.

---

## 123. பொழுதுகண் டிரங்கல்

*அஃதாவது, தலைவர் பிரிந்த காலத்துத் தலைவி மாலைப் பொழுது வரக்கண்டு இரங்கல்.*

1221. காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும்.

தலைவி நெஞ்சொடு சொல்லல்.

*காதலரிவ்விடத்து இல்லாத காலம் அறிந்து, மாலைப் பொழுது கொலை செய்யும் செருக்களத்தில் பகைவர்போல வரும்.*

படைத்தலைவரில்லாத செருக்களத்தில் கொல்லப் பகைவர்போலச் செவ்வானத்துடன் மாலைப்பொழுதும் வரும் என்றது. செவ்வானஞ் செருக்களத்துக்கு ஒப்பு. 1

1222 காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை.

இதுவுமது

எனக்குத் துன்பம் செய்யாமல் (இருக்கும்) காலைப்பொழுதுக்கு யான் செய்த நன்மை யாது? துன்பம் செய்யவரும் மாலைப் பொழுதுக்கு யான் செய்த பகை யாது? 2

1223. பனியரும்பிப் பைதல் கொள்மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்.

ஆற்றாமை கூறல்.

கண்ணீர் அரும்பப் பசலை செய்தலைக் கொள்கின்ற மாலைப் பொழுது தலைவருடன் வெறுப்புத் தோன்றத் துன்பம் பெருக எம்மிடத்து வரும்.

குளிர்ச்சி உடைத்தாய்ப் புல்லென்ற மாலை என்றும் ஆம். 3

1224. காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்.

இக்காம நோயாகிய பூ காலைப் பொழுதின் கண் அரும்பி, பகற் பொழுதெல்லாம் பேரரும்பாய், முதிர்ந்து மாலைப் பொழுதின் கண் மலரா நிற்கும். 4

1225. பதிமருண்டு பைத லுழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து.

நானே மதி மயங்கி நோயுழப்பதன்றிக் கண்டா ரெல்லாம் மருளும் வகை மாலைப்பொழுது படர்ந்து வரும்போது, இப்பதியெல்லாம் மயங்கி நோயுழக்கும் அன்றே.

மாலை மயங்கி வரும்போது மதி நிலை கலங்கி நோயுரைக்கும் என்றுமாம். 5

1226. பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர்.

பொருண்மேலாசை யுடையாரை நினைத்து மயங்கும் மாலைப் பொழுதினிடத்து என் மாயாவுயிர் மாயும்.

பொருண் மாலையாளரை உன்னுதலால் உயிர் மாயாது; மாலைப் பொழுதின் துன்பத்தால் உயிர் மாயும் என்றது. 6

**1227. மாலைநோய் செய்தல் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன்.**

*எமக்கு மாலைப் பொழுது நோய் செய்யும் என்பதனை, எம்மை மணம்செய்த தலைவர் பிரிவதற்கு முன்னே அறிந்தேனாயின் இவ்வாறு உறுகின்ற நோய் தீரும் மருந்து யாதென்று கேட்பேன்; அறிகின்றிலேன்.* 7

**1228. அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை.**

தலைவர்ப் பிரிந்த மாதர்க்கு அழல் சொரிவதுபோலத் துன்பம் செய்யும் செவ்வானத்தையுடைய மாலைப்பொழுது வருகின்றதற்குத் தூதாகி ஆயருடைய வேய்ங்குழலோசை கொல்லும் படையாவது. 8

**1229. மாலைநீ யல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது.**

*மாலைப் பொழுதென்று சொல்லப் பட்டாய்; மாலையல்லை நீ; மணந்து பிரியப்பட்ட மாதருயிரை உண்ணும் இறுதிக்காலை நீ.*

*இறுதிக்காலை : யுகாந்த காலம்.* 9

[குறிப்பு : *மாலையோ வல்லை என்பது அச்சுப்பாடம்.*]

**1230. புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை.**

தன்னுட் கையாறெய்திடு கிளவி.

*மாலைப் பொழுதே நீ வாழ்வாயாக; நின் துணையாகிய கேள் வரும் எம்முடைய கேள்வரைப்போல வன்கண்ணரோ கூறுவாய்.*

*புன்கண்ணை என்பது : நீ அழகு அழிகின்றாய் என்றது. எங்கேள் : எம்முடைய தலைவர்.* 10

பொழுதுகண் டிரங்கல் முற்றும்.

---

## 124. உறுப்பு நலனழிதல்

*அஃதாவது, தலைவி தன் கண்களும் தோள்களும் முதலாய வுறுப்பு அழகு அழிதல்.*

**1231. சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண்.**

ஆற்றாமை மிகுதியான் வேறுபட்ட தலைவியை நோக்கித்
தோழி சொல்லியது.

*பிரிவென்னும் துன்பம் நம்மிடத்தே நிற்பச் சேணிடைச் சென்ற காதலரை நினைந்து அழுதலான் நின் கண்கள் ஒளியிழந்து முன் நாணிய மலர்கட்கு இன்று நின் கண்கள் நாணின.*

*சிறுமை : சிறுமைப்படுதல்.* நமக்கு ஒழிய : நமக்கு ஒழிய அவருக்கு இல்லாமை ; *சேட் சென்றார் : தூரத்தே சென்றார். உள்ளி : நினைத்து.* நறுமலர் நாணின கண் : நறுமலருக்குக் கண்கள் நாணின *என்க.*

**1232. நயந்தவர்க்கு நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண்.**

*நின் உடம்பு பசலை பூப்ப அதன்மேல் நீர்பரக்கின்ற நின் கண்கள்* நம்மேல் நயக்கப்பட்டவர் நமக்குத் தலையளி செய்யாமையை அவருக்குச் சொல்வ போலும்.

*நயந்தவர் : தலைவர்.* நல்காமை : நம்மைச் சேராமை. *பசந்து : பசலை பூத்து. பனிவாருங்கண் : நீர் சொரியுங் கண்கள்.* 2

[குறிப்பு : *நயந்தவர் நல்காமை என்பது அச்சுப்பாடம்.*]

**1233. தணந்தமை சால வறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள்.**

*தலைவருடன் கூடிய நாளிலே பூரித்த நின் தோள்கள், இன்று அவர் பிரிந்ததனை விளங்க அறிவிப்பதுபோல இளைத்தன.*

மணத்தல் : கூடுதல். தணத்தல் : பிரிதல்.

*இவையெல்லாம் தோழி சொல்லியவை.* 3

**1234. பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.**

பணைத்துப் பெருத்த நின் தோள்கள் இளைத்துப் பசும்பொன் வளையலைக் கழன்று நின்றன ; துணைவர் நீங்கிப் பழைய அழகு வாடிய நின் தோள்கள்.

தொல் கவின் : பழைய அழகு.

இதுவுந் தோழி சொல்லியது. 4

**1235. கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு**
**தொல்கவின் வாடிய தோள்.**

கொடிய தலைவர் சேராமையால் அவர் செய்த கொடுமையைச் சொல்லுதல் போலும், தொடி நெகிழ்ந்து வீழ்ந்து பழைய அழகு வாடிய நின் தோள்கள்.

தொடி : வளையல். ஓடுதல் : வீழ்தல். இது, தோழி சொல்லியது. 5

**1236. தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்**
**கொடியரெனக்கூற னொந்து.**

தலைவி சொல்லியது.

தொடிகழலுமாறு தோள்கள் இளைத்து மெலிய, என்னைக் கண்டு, தோழி நீ அவரைக் கொடியர் என்று கூறுதலைப் பொருது யான் என்னுள்ளே நோகின்றேன். 6

**1237. பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்**
**வாடுதோட் பூச லுரைத்து.**

தலைவி தன் நெஞ்சோடு கூறல்.

நெஞ்சே, இந்தத் தோழி நம் தலைவரைக் கொடியர் என்று சொல்கின்றவர்க்கு நீ சென்று என் மெலிகின்ற தோள்களின் பூசலை யுரைத்து மேம்பாடு பெறவல்லையோ ?

பூசல் : சண்டை ; சண்டைக்கு நின்று வரவழைக்க வல்லையோ என்றது.

**1238. முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது**
**பைந்தொடிப் பேதை நுதல்.**

வினைமேல் பிரிந்த தலைவன் மீண்டு வரும்போது முன் நிகழ்ந்தது முன்னி உரைத்தல்.

தன்னை இறுகத் தழுவிய கைகளை அவளுக்கு நோம் என்று கருதி நெகிழ்த்திக் கொடுக்க, அதற்குப் பொறாது பசும்பொன் தொடிகளை அணிந்த பேதையின் நுதல் பசலை பூத்தது.

நுதல் : நெற்றி. நெடுநாள் நம்மைப் பிரிந்து எவ்வாறு ஆற்றும் என்று தலைவன் நினைந்து நொந்தது. 8

1239. முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்.

இதுவும் தலைவன் சொல்லியது.

முயங்கி இறுகத் தழுவும்போது முலைச் சந்தில் சிறுகாற்று வந்து நுழைய, அதனிடையீடு பொறாது பிரிந்தோம் என்று பெரு மழை நீல நிறத்தையுடைய கண்களை யுடையாள் பசலை பூத்தனள்; காடும் மலையும் நாடும் நாம் செல்லும் இடையீடு எப்படிப் பொறுத்து ஆற்றும் என்று தலைவன் நொந்தது.

தண்வளி அற்பமாகிய காற்று. தன்னமென்ப தற்ப மெனக் கொள்க. 9

1240. கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு.

இதுவும் தலைவன் சொல்லியது.

முயக்கிடைத் தண்வளி போழ்ந்த பிரிவினால் கண் பசப்புற்றுத் துன்பமுற்றது. அது பசப்புற்றது, அதற்கு அயலான ஒள்ளிய நுதல் பசலை பூத்ததனைக்கண்டு.

கண்ணின் பசப்போ என்பது : கண் பசந்தது மாத்திரமோ, பருவரலும் எய்திற்று. பருவரல் : துன்பம் வரல். ஒண்ணுதல் செய்தது கண்டு என்பது, ஒள்ளிய நுதல் பசலை பூத்தது கண்டு எனப் பிரித்துப் பொருள் காண்க. 10

உறுப்பு நலனழிதல் முற்றும்.

---

## 125. நெஞ்சொடு கிளத்தல்

அஃதாவது, தலைவி தனது குறையை நெஞ்சொடு சொல்லுதல். குறை: தலைவன் பிரிவினால் வந்த குறை.

1241. நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கு மருந்து.

நெஞ்சே, நீ நினைத்து ஒன்று சொல்லமாட்டாயோ, எவ்வளவாகிலும் என்னிடத்துப் பொருந்திய பிரிவாற்றாமையான் வந்த துன்ப நோயைத் தீர்க்கும் மருந்து.

எவ்வளவாகினும் நோயைத் தீர்க்கும் மருந்து யாதானும் ஒன்று சொல்லாயோ நெஞ்சே என்றது. 1

1242. காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு.

*என் நெஞ்சே வாழ்வாயாக; நம்மிடத்துக் காதல் அவர்க்கு இல்லாமலிருக்கவும் நீ அவர் வரவு பார்த்து வருந்துவதற்குக் காரணம் நின் பேதைமையே பிறிதில்லை.*

*பேதைமை: அறியாமை.* அவர் காதல் வைத்து வாராதிருக்கவும், நீ காதல் வைத்து வரவு பார்த்தல் பேதைமை என்றது. 2

1243. இருந்துள்ளி என்பரித னெஞ்சே பரிந்துள்ளிப்
பைதனோய் செய்தார்க ணில்.

*இருந்து நினைத்து உனக்கு உண்டாவது என்னை, நெஞ்சே, நம்மைப் பரிந்து நினைத்து வருதல் நமக்குப் பசலை நோயைச் செய்தவரிடத்தில்லை.*

இருந்து நினைந்தாவது என்பயன், நீ அவரைப் போய் அழைத்துவா என்பது கருத்து. 3

[குறிப்பு: *பரிந்துள்ளல் என்பது அச்சுப்பாடம்.*]

1244. கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று.

நெஞ்சே! அவர்பாற் செல்லலுற்றாயாகில் கண்களையும் உடன் கொண்டு செல்வாய்; அதுவன்றி, நீ மாத்திரம் சென்றாயாகில் கண்கள் அவரைக் காட்டச் சொல்லி என்னைத் தின்கின்றன. 4

1245. செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயாம்
உற்றா லுறாஅ தவர்.

நெஞ்சே! நாமுற்றால் தாமுறாத காதலரை நம்மை வெறுத்தார் என்று கருதிப் புலந்து கைவிட்டிருக்க, நமக்கு உறுதியுண்டோ? இல்லை.

உற்றா லுறாஅதவர் என்பது நாமுறவாடத் தாமுறவாடாதவர். செற்றார் : வெறுத்தார் என்பது. 5

1246. கலந்துணர்த்துங் காதலரைக் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்தியென் நெஞ்சு.

என்னெஞ்சே! யான் அவரோடு புலந்தால் அப்புலவியைக் கலவியினாலே நீக்கவல்ல காதலரைக் கண்டால் பொய்யே யாயினும் ஒருகால் புலந்து கலவியை நீக்கமாட்டாய்; மாட்டாத நீ இப்போது அவர் கொடியர் என்று பொய்க் காய்வு காய்கின்றாய்.

புலத்தல் : பிணங்கல். 6

1247. காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு.

நன்னெஞ்சே! ஒன்று காம வேட்கையை விடு; விடமாட்டாயாகில் ஒன்று நாணத்தை விடு; விடமாட்டாயாகில் இவ்விரண்டினையும் யானோ பொறுக்க மாட்டேன்.

இவ்விரண்டினையும் நீயும் விடமாட்டாய்; யானும் விடப் பொறுக்க மாட்டேன் என்றது. 7

1248. பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் நெஞ்சு.

நெஞ்சே! நம்மேல் பரிவு வைத்துக் கருணை செயயார் என்று ஏங்கி, அதனை அறிவித்தற் பொருட்டு நம்மைப் பிரிந்தவர் பின்னே செல்லலுற்றாய்; நீ ஒன்று மறியாத பேதை.

நீ அவர் சென்ற வழியும் அவர் இவ்விடத்திருப்பா ரென்பதும் அறிதியோ, பேதாய் என்றது. 8

1249. உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு.

*என் நெஞ்சே! காதலர் நின்னிடத்தே யிருப்பக் கண்டிருந்தும் உள்ள நீ, புறத்தே தேடி யாரிடத்தே செல்கின்றாய்?*

*யாருழை : யாரிடம் என்க.* 9

1250. துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
இன்னு மிழத்துங் கவின்.

*நம்மைக் கூடாவண்ணம் துறந்து போயினாரை யாம் நெஞ்சகத் துடையேமாக, முன்னிகழ்ந்த உடலகத்து அழகே யன்றி நெஞ்ச கத்து அழகாகிய நிறையும் நாணும் இழப்போம்.*

*கவின் : அழகு.* முன் கூடியிருந்த உடம்பினழகு அவர்பிரியப் பிரிந்தது; நெஞ்சகத்துக் கூடினவர் பிரிந்தால் நெஞ்சின் அழகும் பிரியும் என்றது. 10

நெஞ்சொடு கிளத்தல் முற்றும்.

---

## 126. நிறையழிதல்

அஃதாவது, காம வேட்கை தன்னுள் அடங்காமல் பெருகலின் தன் நிறை யழிதல்.

1251. காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

*நாணுகிய தாளிட்ட நிறையென்னும் கதவினைக்* காம வேட்கை யாகிய உளி தறிக்கின்றது.

*கணிச்சி : உளி; குந்தாலியும் ஆம்.* இப்படித் தன் நிறையைக் காம வேட்கை அழிக்கின்றதென்று தோழிக்குச் சொல்லியது. 1

1252. காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை
யாமத்து மாளுந் தொழில்.

எல்லாரும் தொழில் ஒழியும் நடுச் சாமத்தும் என்நெஞ்சத்தை ஒறுத்துத் தொழில் கொள்ள நின்ற காதலால் காமமென்று சொல்லப்பட்ட ஒன்று கண்ணோட்ட மின்றாய் இருந்தது.

கண்ணோட்ட மின்மை : கருணை யில்லாமை. நெஞ்சத்தை நடுச் சாமத்துங் காமம் அலைக்கின்றது; யான் எப்படி அடக்குவேன் என்று தோழிக்குச் சொல்லியது. 2

1253. மறைப்பன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும்.

யான் என் காம வேட்கையை மறைக்கக் கருதுவேன்; அது என் கருத்தின்படி வாராது. தும்மலை அடக்க அடங்காமல் எப்படி வெளிப்படுமோ அப்படி வெளிப்படுகின்றது. 3

[குறிப்பு: மறைப்பேன்மன் என்பது அச்சுப்பாடம்.]

1254. நிறையுடையே னென்பன்மன் யானேயென் காமம்
மறையிறந்து மன்று படும்.

இன்றுவரையும் யான் என்னை நிறையுடையேன் என்று கருதியிருந்தேன்; இப்போது என் காமம் மறைக்க அடங்காமல் எல்லை கடந்து பலருங்கூடிய மன்றின் கண்ணே வெளிப்படுகின்றது. 4

[குறிப்பு: என்பேன்மன் என்பதும் யானோ என்பதும் அச்சுப் பாடங்கள்.]

1255. செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்றா ரறிவதொன் றன்று.

தன் நிறையை அழித்தவர் பின் செல்லாது பெருந்தகைமையை யுடைய காமநோயானது தன்னையுற்ற நடுவனிடத்து ஒன்றையும் அறியாமல் மயக்கும்.

பெருந்தகைமை : காமத்தின் செருக்கு. செற்றார் : தன் நிறையை அழித்த தலைவர். 5

1256. செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
எற்றென்னை யுற்ற துயர்.

என் நிறையை அழித்தவர் பின்னே சென்று வேண்டி யழைத்து வந்து அளிக்கலாகாதோ, என்னை உற்றுத் துயர் செய்வதென் கருதி இக்காமநோய்.

*அளித்தல் : கருணை செய்தல். துயர் : காமநோய்.*

செற்றவர் : நிறையை அழித்தவர். 6

**1257. நாணென வொன்றோ வறியலங் காமத்தால்**
**பேணியார் பெட்பச் செயின்.**

*பரத்தையில் பிரிந்து வந்த தலைவனொடு நிறையழிவு வரக் கூடிய தலைவியை, 'நீ புலவாமைக்குக் காரணம் யாது' என்று வினவிய தோழிக்குத் தலைவி சொல்லியது.*

*நம்மால் விரும்பப் பட்டவர் தம் காமத்தால் நாம் விரும்பிய வற்றைச் செய்யும் அன்பினர் என்று ஒன்றையும் அறிய மாட்டோ மாய் இருந்தது.*

*பேணியார் : நம்மைப் பேணப்பட்ட தலைவர். பெட்பச் செய்தல் : நாம் விரும்பினவற்றைச் செய்தல். ஆதலால் நாணென வொன்றோ அறியலம் என்றது : நாணென ஒன்றையும் அறிய மாட்டோம் என்றது; எனப் பிரித்து முன்னும் பின்னும் மாறிப் பொருள் அறிந்து கொள்க.* 7

**1258. பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்**
**பெண்மை யுடைக்கும் படை.**

இதுவுமது

*நம்முடைய பெண்மையாகிய நாணினையும் நிறையினையும் அழிக்கும் ஆயுதமாவது, பல மாயங்களை யுடைய கள்வனுடைய தாழ்ந்த சொற்களன்றோ.*

*பெண்மை யாவது : கற்புடை மகளிர் நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நான்கும் எனக் கொள்க. பன் மாயக் கள்வன் : தலைவன். பணி மொழி :* தாழ்ந்த மொழியன்றோ நம் பெண்மையை உடைக்கும் படை ஆயுதம் எனக் கொள்க. 8

**1259. புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சம்**
**கலத்த லுறுவது கண்டு.**

இதுவுமது

தலைவருடன் புலக்கக் கடவோம் என்று நினைந்து அவர் வந்த வுடனே முன்னே போனேன்; அவரைக் கண்டவுடனே தழுவிக் கொண்டேன்; என்

நெஞ்சம் நான் சொன்னபடி கேளாமல் தான் போய்க் கலந்து கொள்வதனைக் கண்டு.

*புலப்பல் : பிணங்கல் ; புல்லுதல் : தழுவுதல்.* 9

1260. நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல்.

இதுவுமது

*நிணத்தைத் தீயின் கண் இட்டால் அஃது உருகுமாறு போலத் தம் கணவரைக் கண்டால் நிறையழிந்து உருகும் நெஞ்சினை யுடைய மாதர்க்கு உண்டோ, நெருங்கிப் பிணங்கும் நிலைமை.*

*புணர்தல் : நெருங்குதல் ; ஊடல் : பிணங்கல்.* 10

நிறையழிதல் முற்றும்.

---

## 127. அவர்வயின் விதும்பல்

*அஃதாவது, தலைவனும் தலைவியும் பிரிந்த விடத்து ஒருவரை யொருவர் காண்டற்கு விரைதல்.*

ஒருவரை யொருவர் காணப் பரபரத்தற்கு விதும்பல் எனக் கூறுதல் இலக்கண வாய்பாடு.

1261. வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்.

தலைவர் வரும் வழிபார்த்து என் கண்களும் ஒளியிழந்தன. தலைவர் பிரிந்துபோன நாள்களைச் சுவரிடத்துத் தினந்தினம் கிழித்து வந்ததனைத் தொட்டு எண்ணி எண்ணிப் பார்த்து விரல்களும் தேய்ந்து போயின.

*வாளற்று என்பது : ஒளியற்று.* புற்கென்ற என்பது : கண்ணொளி மழுங்கல். நாளொற்றி என்பது : நாள்களைத் தொட்டு எண்ணல். 1

1262. இலங்கிழா யின்று மறப்பினென் றேண்மேல்
கலங்கழியுங் காரிகை நீத்து.

விடா நினைப்பினை ஒழிந்து சிறிது மறக்க என்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

*விளங்கும் இழையினை யுடைய தோழி! காதலரை யானின்று மறப்பேறுயின் என் தோள்கள் மேலும் அழகு நீங்கத் தோள் வளை களுங் கழல்வனவாம்.*

*இலங்கிழை : விளங்கும் அணிகலம்.* காரிகை : அழகு. *நீத்தல் : நீங்கல்.* 2

**1263.** **உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்**
**வரனசைஇ யின்னு முளேன்.**

இதுவுமது

*பகைவரை வெல்லும் வெற்றியை விரும்பித் தமக்குத் தம் உள்ளமே துணையாகப் போயினர் அவர் இங்கு வருவதனை விரும்புதலால் இறந்து படாமல் இன்னும் இருக்கின்றேன்.*

*உரன் : வெற்றி ; நசை : விரும்புதல் ; வரல் : வருதல்.* 3

**1264.** **கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்**
**கோடுகொ டேறுமென் னெஞ்சு.**

இதுவுமது

*கூடியிருக்குங் காமத்தினைப் பிரிந்துபோன காதலர் வருவதனை நினைத்துப்* பூரிக்கும் என் நெஞ்சம்.

கோடேறுதல் : பணைத்துப் பூரித்தல். காதலர் வருவதனைக் கொம்பேறியும், மலையேறியும், மேடேறியும் பார்க்கும் என் நெஞ்சம் என்றுமாம்.

கோடு என்பது : கொம்பும் மலையும் மேடுமாம். 4

**1265.** **காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்**
**நீங்குமென் மென்றோட் பசப்பு.**

இதுவுமது

*என் கண்கள் கண்ணாரக் காணும் வகை, என் கொண்கனை யான் காணப் பெற்றேனாகில் அப்படிக் கண்டபின் என் மெல்லிய தோள்களின் பசப்புத் தானே நீங்கும்.*

*கொண்கன் : தலைவன்.* 5

**1266. வருகமற் கொண்க ணொருநாட் பருகுவன்**
**பைதனோ யெல்லாங் கெட.**

*இத்தனை நாளும் வாராத கொண்கன், ஒரு நாள் என் கண் காண வருவானாகில் இத்தனை நாளும் பட்ட பாடெல்லாந்தீர அவனததரபானமாகிய மருந்தைக் குடிப்பேன்.* 6

**1267. புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ**
**கண்ணன்ன கேளிர் வரின்.** [கலப்பேன்கொல்

இதுவுமது

*என் கண்போலச் சிறப்பாகிய நாயகன் வருவானாகில் வந்தால் இத்தனை நாளும் வராமலிருந்தது என் என்று சண்டை கொள்வேனோ, அன்றி என் முலைகள் அழுந்தத் தழுவிக் கொள்வேனோ, அன்றிக் கலந்து கொள்வேனோ இந்த மூன்றினுள் யாது செய்வேன் ?*

*புலத்தல் : பிணங்கல் ;* **புல்லுதல் : தழுவுதல் ; கலத்தல் : கூடுதல் ;** *கேளிர் : கணவன்.* 7

**1268. வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து**
**மாலை யயர்கம் விருந்து.**

**வினைமேற் பிரிந்த தலைவன் தலைவியை நினைந்து சொல்லுதல்.**

**வேந்தன் பகைவர் மேல் வினை செய்தலைப் புரிந்து வென்று நம்மை யனுப்பில் யாமும் மனைவியைச் சென்று கூடியிருந்து மாலைப் பொழுதிற்கு விருந்து செய்வேம்.**

*மனை : மனைவி ; மாலை : மாலைப் பொழுது ; அயர்தல் : செய்தல் ;* அயர்கம் : வியங்கோள் ; *விருந்து : வெகுமானம் செய்தல்.*

*வினை கலந்து வென்று ஈக வேந்தன் எனப் பிரித்து வேந்தனைத் தலைவனாகவும் தலைவி சொல்லியதாகவும் சொல்வாரும் உளர்.* 8

**1269. ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்**
**வருநாள்வைத் தேங்கு பவர்க்கு.**

இது தலைவன் சொல்லியது.

*சேணிடைச் சென்ற தம் காதலர் மீண்டு வரக் குறித்த நாளை வைத்தெண்ணி ஏங்கியிருந்து வருந்து மாதர்க்கு* ஒருநாள் எழுநாள் போல நீட்டித்துக்காட்டும்.

*சேண் : தூரம்.* 9

1270. பெறினென்னும் பெற்றக்கா லென்னு முறினென்னும்
உள்ள முடைந்துக்கக் கால்.

இது தலைவன் சொல்லியது.

*காதலி நம் பிரிவினை ஆற்றாது உள்ளம் உடைந்து இறந்து பட்ட வழி நம்மைப் பெறினென்னுவள் ; பெற்றக்காலென்னுவள் ? நாமவள் மெய்யுறக் கலந்தாலென்னுவள் ?* அப்படி இறந்துபடுமுன்னே போக வேண்டும்.

இறந்துபடுதல் *:* இளைத்துச் சோர்ந்து மூர்ச்சை யாகுதல் ; உள்ளம் உடைந்துக்கக்கால் என்பது : நினைவில்லாமல் மூர்ச்சை வருதல். 10

அவர்வயின் விதும்பல் முற்றும்.

---

## 128. குறிப்பறிவுறுத்தல்

அஃதாவது, பிரிந்து வந்து கூடிய தலைவன் வேட்கை மிகுதியான் கலவி மிகுந்து பாராட்டத் தலைவி அக் குறிப்பினைக் கண்டு அஞ்சிய இடத்துக் குறிப்பினை யறிந்து தலைவிக்குந் தோழிக்குந் தலைவன் சொல்லுதல்.

1271. கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்கண்
உரைக்க லுறுவதொன் றுண்டு.

தலைவன், கலவியின் மிகுதிகண்டு அஞ்சிய குறிப்பினை யறிந்து சொல்லுதல்.

நீ சொல்லாது மறைப்பினும் நின் மறைப்பினில்லாது நின் மையுண் கண்கள் உரைக்கின்றதொன்று உண்டு ; அதனை நீயே தெளியச் சொல்வாய்.

தலைவன் கலவியின் மிகுதியால் இன்னும் பிரிவானென்று தலைவி கண்கள் காட்ட தலைவன் தலைவியை வினவியது.

*கரத்தல் : மறைத்தல் ;* கையிகத்தல் : வெளிப்படுதல். 1

1272. கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது.

[இக்குறள் முதல் 8-ஆவது குறள் வரையில் உரை காணப்படவில்லை. அவற்றிற்குப் பிரதியாக பரிமேலழகர் உரையிலிருந்து கொள்ளப்பட்டது.]

நாணுல் அவள் சொல்லாளாய வழி அவன் தோழிக்குச் சொல்லியது.

என் கண்ணிறைந்த அழகினையும், வேயை யொத்த தோளினையும் உடைய நின் பேதைக்கு பெண்பாலாரிடத்து நிறைந்த மடமை அவ்வளவின்றி மிகுந்தது. 2

1273. மணியுட் டிகழ்தரு நூல்போன் மடந்தை
அணியுட் டிகழ்வதொன் றுண்டு.

இதுவுமது

கோக்கப்பட்ட பளிக்கு மணியகத்துக் கிடந்து புறத்துப் புலனும் நூல் போல, இம்மடந்தை அணியகத்துக் கிடந்து புறத்துப் புலனுகின்றதொரு குறிப்பு உண்டு. 3

[குறிப்பு: மணியிற்றிதழ்தரு, அணியிற்றிதழ்தரு என்பன வேறு பாடங்கள்.]

1274. முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.

இதுவுமது

முகையது முகிழ்ப்பினுள தாய்ப் புறத்துப் புலனுகாத நாற்றம் போல, நின் பேதை என்னேடு நகக்கருதும் நகையது முகிழ்ப்பின் உளதாய்ப் புறத்துப் புலனுகாததோர் குறிப்புண்டு. 4

1275. செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து.

இதுவுமது

நெருங்கிய வளைகளை யுடையாள் என் கண் இல்லாத தொன்றனை உட்கொண்டு அது காரணமாக என்னை மறைத்துப்

போன குறிப்பு, என் மிக்க துயரைத் தீர்க்கும் மருந்தாவ தொன்றனை உடைத்து. 5

1276. பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
அன்பின்மை சூழ்வ துடைத்து.

தலைமகன் குறிப்பறிந்த தலைமகள் அதனை அது தெளிவிக்கச் சென்ற தோழிக்கு அறிவுறுத்தது.

காதலர் வந்து தம் பிரிவினானாய துன்பத்தினை மிகவுமாற்றி நாம் மகிழும் வண்ணம் கலக்கின்ற கலவி, இருந்தவாற்றான் மேலும் அத் துன்பத்தினை அரிதாக ஆற்றியிருந்து அவரன்பின்மையை நினையும் தன்மையுடைத்து. 6

1277. தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினும்
முன்ன முணர்ந்த வளை.

இதுவுமது

குளிர்ந்த துறையை யுடையவன் நம்மை மெய்யால் கூடி யிருந்தே மனத்தால் பிரிந்தமையை, அவன் குறிப்பான் அறிதற்கு உரிய நம்மினும் இவ்வளைகள் முன்னே அறிந்தன. 7

1278. நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமும்
எழுநாளே மேனி பசந்து.

இதுவுமது

எம் காதலர் பிரிந்து போயினர் நெருநற்றே; அப்பிரிவுக்கு யாமும் மேனி பசந்து எழு நாளுடையமாயினேம். 8

1279. தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது.

தலைமகள் குறிப்பறிந்த தோழி அதனைத் தலைமகற்கு அறிவித்தது.

நீ யனுப்ப யான் தலைவியிடத்துச் சென்றேன்; சென்றபோது தலைவி தன் தொடியை நோக்கித் தன் மெல்லிய தோள்களை நோக்கித் தன் கால்களை நோக்கி நின்றாள்; அது மாத்திரம் அவள் அவ்விடத்துச் செய்தது.

*தலைவனே நீ இக் குறிப்பை யறிவாய் என்றது. குறிப்பறிதல் : யாம் பிரியிற்றொடி விழுமென்று நினைத்து பார்த்தாள் ; தோள் மெலியுமென்று நினைந்து பார்த்தாள் ; கால்களைத் தலைவன் பிறகே கூடச் செல்வாய் என்று பார்த்தாள் என்று தலைவன் அறிந்தது.* 9

1280. பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினால்
காமநோய் சொல்லி யிரவு.

இதுவுமது

தலைவன் பிரியாமல் தோழி குறிப்பாகச் சொல்லியது.

*மாதர் தம் காம நோயைத் தோழியர்க்கும் அவர்பால் சொல்லாது கண்ணினால் சொல்லி, அது தீர்க்க வேண்டும் என்று அவரை இரந்து உடன்போதல் குறித்துத் தன் கால்களை யிரத்தல் தமக்கியல்பாகிய பெண்மை போலுமொரு பெண்மையுடைத்து என்று சொல்லுவர் அறிந்தோர்.*

*தலைவியுடன் போதல் தோழியால் தெளிந்தானாதலின் தலைவன் அவள் பெண்மையினை வியந்தது.* 10

குறிப்பறிவுறுத்தல் முற்றும்.

---

## 129. புணர்ச்சி விதும்பல்

*அஃதாவது, தலைவனும் தலைவியும் புணர்ச்சியின் விரைந்து நிற்றல்.*

1281. உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்துக் குண்டு.

பிரிதல் குறிப்புடைய தலைவனொடு புலவாமைக்குக் காரணம் யாதென வினவி நகைத்த தோழிக்குத் தலைவி சொல்லியது.

நினைக்க மகிழ்ச்சியாதலும் காண மகிழ்ச்சியாதலும் கள்ளுக் குடித்தாலொழிய இல்லை ; காமத்துக்கு உண்டு.

களித்தலும் மயங்கலும் : உணர்ச்சியில்லாமல் மயங்கல். 1

[குறிப்பு : *காமத்திற்குண்டு என்பது அச்சுப்பாடம்.*]

**1282. தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையும்
காம நிறைய வரின்.**

**இதுவுமது**

*மாதர்க்குத் தினையளவு பொழுதாகிலும் ஊடாதிருக்கவேண்டும், பனையளவு போலக் காமம் நிறைய வரின்.*

தினை பனை என்பது சிறுமை பெருமைக்குச் சொல்லியது. ஊடலும் புலவியும் : தலைவனெடு பிணங்கல் எனக் கொள்க. 2

**1283. பேணது பெட்பல செய்யினுங் கொண்கனைக்
காணு தமையல கண்.**

**இதுவுமது**

*நம்மை அவமதித்துத் தான் வேண்டியன செய்யினும் கொண்கனை என் கண்கள் காணுது அமைகின்றனவில்லை.*

*பேணுது பெட்பல செய்தல் : தலைவியை அவமதித்துத் தலைவன் தான் வேண்டியவாறே செய்தல்.* 3

[குறிப்பு : *பெட்பவே செய்யினும் என்பது அச்சுப்பாடம்.*]

**1284. ஊடற்கட் சென்றேன்மற் றேழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு.**

**இதுவுமது**

*தோழி, தலைவரைக் காணுமுன்னர், அவரோடு, அவர் செய்த பிழையை நினைத்து ஊடவேண்டும் என்று சென்றேன் ; அவரைக் கண்டவுடனே அதனை மறந்துவிட்டேன் ; அவரோடு கூடுதற் கண்ணே சென்றது என் நெஞ்சு.* 4

**1285. எழுதுங்காற் கோல்காணுக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து.**

**இதுவுமது**

சித்திரமெழுதும் தூரிகைக் கோலை முன்கண்ட கண்கள் எழுதும்போது காணமாட்டா ; அதுபோலக் கொண்கனுடைய பழியை அவர் வாராதபோது கண்டேன் ; அவர் வந்தார், வந்தவுடனே என் சொல்கேன் ! அவர் செய்த பிழையைக் காணேன். 5

1286. காணுங்காற் காணேன் தவறாய காணக்கால்
காணேன் தவறல் லவை.

இதுவுமது

கொண்கனை யான் காணும் பொழுது அவர் செய்த தவறான வற்றைக் காணக் காண்கிலேன்; காணாதபோது அவன் செய்த தவறல்லது பிறிதொன்றும் காண்கிலேன். 6

1287. உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோல்
பொய்த்த லறிந்தென் புலந்து.

இதுவுமது

தம்மை இழுத்துக் கொண்டு போதல் அறிந்தும் புனல் பாய்ந்து விளையாடுபவரைப் போல முன் தலைவனோடு புலந்து பிணங்கி னேன்; பிணக்கினாற் பிரிந்தேன்; அதனாற் பொய்யினை அறிந்தேன் இனிப் புலக்க லாகாது என்று.

புலத்தல்: பிணங்கல். பிணக்கு வந்தாலும் பிணங்காமல் புணரவேண்டும் என்று பொய்யினை அறிந்தேன் என்றது. இது தோழிக்குச் சொல்லியது. 7

1288. இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.

இது தோழி தலைவனுக்குச் சொல்லியது.

எல்லாரும் நகைக்கத் தக்க பொல்லாத மயக்கத்தைச் செய் தாலும் கள்ளுக் குடிப்பவர்க்குக் கள்ளின் மேல் ஆசையாவது போல எங்கட்கும் நீ பொல்லாதன செய்தாலும், கள்வனே, அக் கள்ளினையே ஒக்கும் நின் மார்பம்.

பொல்லாதன: நாணம் ஒழுக்கம் உணர்வு மயங்கி நீங்கல். 8

1289. மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்.

தோழிக்குத் தலைவன் சொல்லியது.

காம இன்பம் மலரினும் மெல்லியதாய்க் கசங்காமல்கூட வேண்டும்; அப்படி அறிந்து கசங்காமல் பிணக்கில்லாமல் கூடும் நாயகனும் நாயகியும் சிலருண்டு; நின் தலைவிக்கு அது இல்லை.

நின் தலைவி ஊடலும் புலவியும் செய்கின்றாள் என்று தலைவன் தோழிக்குச் சொல்லியது. 9

1290. கண்ணிற் றுனித்தே கலங்கினாள் புல்லுதல்
என்னினுந் தான்விதுப் புற்று.

இதுவுமது

காதலி முன்னொரு ஞான்று புலவி விதுப்பினால் சென்ற என்னோடு தன் கண் மாத்திரம் துனிகள் வீழக் கலங்கினாள்; அப்போதே மறந்தாள்; தழுவுதல் என்னினும் பரபரத்துத் தழுவினாள்.

விதுப்புறுதல் : பரபரப்பு. 10

[குறிப்பு : *கண்ணிற் றுனித்தே என்பது அச்சுப்பாடம்.*]

புணர்ச்சி விதும்பல் முற்றும்.

---

## 130. நெஞ்சொடு புலத்தல்

*அஃதாவது, காரண முண்டான வழியும் புலக்கக் கருதாது புணர்ச்சி விதும்புகின்ற நெஞ்சொடு தலைவி புலத்தலும் தலைவன் புலத்தலும் ஆம். புலத்தல் : தலைவியும் தலைவனும் பிணங்குதல்.*

1291. அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது.

தலைவனிடத்துத் தவறுண்டாய வழியும் புலவி கருதாத நெஞ்சுக்குத் தலைவி சொல்லியது.

*அவர் நெஞ்சு அவருக்குத் துணையாக நிற்றல் கண்டிருந்தும்,* நெஞ்சே, நீ எமக்காகத் துணையாக நில்லாது அவரை நினைத்தல் காரணம் யாது ?

அவர் நெஞ்சு அவருக்குப் புலவிக்கு உடன்பட என் நெஞ்சு எனக்குப் புலவிக்கு உடன்படாதது என் என்றது. *அவர் : தலைவர்.* 1

1292. உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
செறாஅ ரெனச்சேறியென் னெஞ்சு.

இதுவுமது

என் நெஞ்சே, நம்மிடத்து அன்புடைய ரல்லாத காதலரை உள்ளவாறறிந்தும், அவரிடத்துச் சென்ருல் வெகுண்டுரையார் என்பது நினைந்தோ நீ செல்கின்றது ?

உருமை : பொருந்தாமை ; கண் : இடம் ; செருர் : வெகுளார் ; சேறி : செல்லுதல் எனப் பதம் பிரித்துப் பொருள் காண்க.

1293. கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல்.

நெஞ்சே என்னிடத்து நில்லாது நீ அவரை விரும்பி உறவாய் அவரிடத்துச் செல்லுதல், கெட்டார்க்கு நட்டார் உலகத்தில்லை யென்பதோ, நின் இயல்பு கூறுய்.

பெட்டல் : விரும்பல். 3

1294. இனியன்ன நின்னெடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.

இதுவுமது

இனி அப்படிக்கொத்த நின்னெடும் ஒரு காரியங்களை நினைப்பவர் யார், நெஞ்சே, காதலர் தவறு செய்தது கண்டு அவரொடு பிணங்குதல் செய்து பின்பு அவரொடு கலந்து அனுபவியாய்.

சூழ்தல் : நினைத்தல் ; துனி : பிணக்கு ; துவ்வாமை : அனுபவியாமை. 4

1295. பெருஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சும்
அருஅ விடும்பைத்தென் னெஞ்சு.

தோழிக்குச் சொல்லியது.

காதலரைப் பெருத போதும் அஞ்சும் ; பெற்ற போதும் பிரிவினை நினைந்து அஞ்சும் ; எப்போதும் அருத துன்பத்தை உடையது என் நெஞ்சு. 5

1296. தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
தினிய விருந்ததென் னெஞ்சு.

இதுவுமது

என் நெஞ்சு தனியே இருந்து காதலரைப் பிரிந்த கொடுமையை நினைத்தக்கால் தான் சும்மா இராது என்னைத் தின்பது போன்ற துன்பத்தைச் செய்ய நின்றது. 6

1297. நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
மாணு மடநெஞ்சிற் பட்டு.

இதுவுமது

தன்னை மறந்த காதலரைத் தான் மறக்க மாட்டாத என் மாட்சிமை யில்லாத மட நெஞ்சுடனே கூடி, என் உயிரினும் சிறந்த நாணம் தன்னையும் மறந்து விட்டேன்.

மாணு நெஞ்சு : அடங்காத நெஞ்சு. 7

1298. எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திறம்
உள்ளு முயிர்க்காத னெஞ்சு.

இதுவுமது

உயிர்மேல் காதலை உடைய என் நெஞ்சு, நம்மை எள்ளிச் சென்றா ரென்று நாமும் எள்ளுவோமாயின், பின் நமக்கு இளிவரும் என்று கருதி அவர் திறத்தினை நினைக்கும்.

எள்ளுதல் : வாயில் மீறுத்தல் ; இகழ்ச்சி செய்தல். இளிவு : கெடுதல். அவர் திறம் உள்ளல் : அவரொடுகூட நினைத்தல். 8

1299. துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி.

தலைவி வாயில் மறுக்கப்பட்ட தலைவன் சொல்லியது.

ஒருவர்க்குத் துன்பம் வந்த விடத்து அத்துன்பத்தை நீக்குதற்குத் தாம் உரித்தாக உடைய நெஞ்சு துணையாகாத வழி, வேறு துணையாவார் யார்? ஒருவரு மில்லை.

நெஞ்சு சொன்னபடிக் கேளாமல் மறுத்த தலைவியை இரக்க நினைத்தல். 9

1300. தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி.

இதுவுந் தலைவன் சொல்லியது.

*தாமுரித்தாக உடைய நெஞ்சம் ஒருவற்குத் தமரல்லாத வழி அயலார் தமரல்லா ராதல் சொல்ல வேண்டுமோ?*

*தமர்: உறவு. நெஞ்சு உறவாகா வழி அயலார் உறவாகா மையைச் சொல்ல வேண்டுமோ என்று (தலைவியை உறவாகவும்) தலைவன் சொல்லியது.* *10*

நெஞ்சொடு புலத்தல் முற்றும்.

---

## 131. புலவி

*அஃதாவது, தலைவனுந் தலைவியும் ஒருவரோ டொருவர் பிணங்குதல்.*

**1301. புல்லா திராஅப் புலத்தை யவருறும்**
**அல்லனோய் காண்கஞ் சிறிது.**

வாயிலாகச் சென்ற தோழி தலைமகள் வாயில் நேர்தல் பொருட்டு
அவளோடு நகையாடிச் சொல்லியது.

*காதலர்படும் அல்லல் நோயினை யாம் சிறிது காணக் கடவோம்; நீ அவரை விரைந்து சென்று புல்லாதே புலவித் தொழிலை மேலிட்டிருந்து புலப்பாயாக.*

புல்லாது என்பது, புல்ல வேண்டாம் என்றது. இராப் புலத்தை என்பது, சும்மா இராது புலவி செய் என்றது. புல்லல்: தழுவல்; புலத்தல்: *பிணங்கல் என்க.* *1*

**1302. உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது**
**மிக்கற்றா னீள விடல்.**

புலவி ஒழிந்து வாயில் நேர்தற்குத் தோழி சொல்லியது.

*புலவி கலவியின்பம் செய்தற்கு வேண்டுமளவிற்று, ஆதலால் உப்பு புசிப்பனவற்றை இன்சுவை யாக்கற்கு வேண்டுமள விற்றா தல் போலும்; அதனை அவ்வளவிற் சிறிது மிக விடுதல் உப்பு அளவின்றி மிகுந்தாற் போலும்.*

கறிக்கு உப்பிடுதல்போலக் கலவிக்குப் புலவி வேண்டும்; மிகுந்தால் சுவை கெடும் என்று தலைவிக்குத் தோழி சொல்லியது. 2

1303. அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.

பரத்தையில் பிரிந்து வந்த தலைவனொடு தலைவி சொல்லியது.

*தம்மைப் பெறாது புலந்த மாதரைப் புலவி நீக்கிப் புல்லாத கணவர் வருதல், பண்டே துன்பமுற்றவரை மிகவும் துன்பம் செய்தது போலும்.*

*தம்மைப் புலந்தாரை என்பது, தம்மொடு தழுவாமல் பிணங்கினவரை என்பது. புல்லா விடல் என்பது, தழுவாது நீங்கி விட்டவரை யென்க.* 3

1304. ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று.

இதுவுமது

*தம்மோடு ஊடிய பரத்தையை ஊடல் தீர்த்துக்கூடா தொழிதல் பண்டே நீர் பெறாது வாடிய கொடியை அடியிலே அரிந்தால்போலும்.*

*பரத்தை யூடல் தீராது வரவேண்டாம் போம் என்று தலைவற்குத் தலைவி சொல்லியது. ஊடல் : பிணங்கல் ; உணர்தல் : பிணக்குத் தீர்தல்.* 4

1305. நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து.

தலைவி புலவி நீக்கிக் கூடிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.

*நற்குணங்களால் தகுதியுடைய தலைவர்க்கும் அழகாவது பூவன்ன கண்ணார் நெஞ்சில் நிகழும் புலவி மிகுதியன்றே.*

*காதலற்கு மிகுந்த இன்பம் தருவது நாயகியிடத்துப் புலவி மிகுதிவரின் என்றது.* 5

1306. துனியும் புலவியு மில்லாயிற் காமம்
கனியுங் கருக்காயு மற்று.

இதுவுமது

*துனியும் புலவியும் உண்டாயின் காமம் கனிபோலச் சுவையும், துனியும் புலவியும் இல்லையாயின் காமம் இளங்காய்போலச் சுவை இல்லைமையும் (பெறும்).*

துனி : பெரும் பிணக்கு ; புலவி : சிறுபிணக்கு. *முதிர்ந்த காலமாகிய துனியும் இளைய காலமாகிய புலவியும் இல்லையாயின்* காமம் செவ்விதாக முதிராத பழமும் இளங்காயும் என்றுங் கொள்க. 6

1307. ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று.

இதுவுமது

*புணர்ச்சி நீட்டிக்குமோ நீட்டியாதோ என்று கருதலான் இன்பத்திற்கு இன்றியமையாத ஊடலின் கண்ணே நிகழும் துன்பம்.* 7

1308. நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியும்
காதல ரில்லா வழி.

உணர்ப்பு வயின் வாரா ஊடற்கண் தலைவன் தலைவியோடு சொல்லல்.

*இவர் நம்பொருட்டு நொந்தாரென்று நோவினை அறியும் அன்புடையாரைப் பெறாத வழி* ஆடவர் நோகின்றதனால் பயன் என் ?

*காதலர் : அன்புடையவர் ; ஆடவர் : கணவர்.* 8

1309. நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது.

இதுவுமது

*நீரும் நிழற்கண்ணே இருப்பின் குளிர்ச்சியாக இனிதேயாம் ; புலவியும் தாம் விரும்பும் மாதர் கண்ணே இனிதாம்.*

அன்பில்லாத மாதரிடத்துப் புலவி ஆகாது என்று வெறுத்துத் தலைவன் சொன்னது. 9

**1310. ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சம்
கூடுவே மென்ப தவா.**

**இதுவுமது**

*தானூடற் கண்ணே மெலிந்து நிற்கவும், விட்டிருக்க வல்லாரோடே கூடக் கடவோம் என்று என் நெஞ்சு முயல்கின்றது;* வேறொன்று மில்லை அவா.

ஊடல் : *பிணங்கல் ;* உணங்க ஊடல் : பிணக்குத் தீர்ப்பாரை வருத்தம் செய்து ஊடல். *அவா : ஆசை.* *10*

**புலவி முற்றும்.**

---

## 132. புலவி நுணக்கம்

*அஃதாவது, தலைவனும் தலைவியும் ஒரு சயனத்துக் கூடியிருந்து தலைவனொடு தலைவி காதல் மிகுதியால் நுட்பமாகிய புலவி கூறல்.*

**1311. பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு.**

நிறை, நாண், முறை இல்லாத, வடிவினால் பெண்ணியல்பினையுடைய பரத்தையர் யாவரும் கண்ணால் பொதுவாக ஒண்ணும் மிச்சிலாகிய நின் பரந்த மார்பினை யான் பொருந்திலேன்.

பரந்த மார்பு என்பது : பரத்த மார்பாயிற்று.

**1312. ஊடி யிருந்தேமாத் தும்மினார் தம்மைநாம்
நீடுவாழ் கென்பாக் கறிந்து.**

சயனத்தலத்தின் நிகழ்ந்ததமை தலைவி தோழிக்கு உரைத்தல்.

*தலைவரும் யானும் ஊடி உரையாதிருந்தோமாக, அப்போது தலைவர் தும்மினார், அது யாதென்னில் அவ்வூடல் நீங்கத் தலைவரை யான் நீடுவாழ்க என்று உரையாடக் கருதி.*

*தும்மும்போது வாழ்த்தலியல்பாகலால் தும்மினார் என்றாள் என்க.*

[**குறிப்பு :** *யாந்தம்மை என்பது அச்சுப்பாடம்.*]

1313. கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று.

தலைவன் தோழிக்குச் சொல்லியது.

கொம்பில் பூத்த செண்பகப் பூவை மாலையாகத் தொடுத்துச் சூடினேன்; அதனை நிலைக்கண்ணாடியில் பார்த்து நன்றாக இருந்ததனைக் கண்டு வெகுண்டாள், *நும்மால் காதலிக்கப்படும் ஒருத்திக்கு இப்பூவணி காட்டவேண்டிச் சூடினீர் என்று.* 3

1314. யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று.

*காமத்தில் இருவராயினார் யாவரினும் யாம் மிக்க காதலை உடையோம் என்பது கருதி, யாரினும் காதலம் என்றேனாக, உன்னுடைய தலைவி அது கருதியது காதலிக்கப்பட்ட மாதர் எல்லாருள்ளும் நின்கட் காதலை யுடையார் யாரினும் யாரினும் யான் காதலை உடையேன் என்று புலந்தாள்.*

*யான் அன்பு மிகுதியால் சொல்ல, வேறு கருதினாளென்றது.*

1315. இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்.

இதுவுமது

*காதல் மிகுதியின் இம்மையாகிய பிறப்பின்கண் யான் நின்னைப் பிரியேன் என்று சொன்னேனாக, அதனால் என்னை மறுமையாகிய பிறப்பின் பிரிய விடுதியோ என்று கருதிக் கண்ணிறைந்த நீரினைக் கொண்டு அழுதாள்.* 5

1316. உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள்.

இதுவுமது

*இடையீடின்றி நினைத்தேன் என்னும் கருத்தால், யான் நின்னை நினைத்தேன் என்றேன்; என்றவுடனே தன்னை மறந்தே*

னுகக் கருதி, என்னை யிடையே மறந்தீரோ என்று சொல்லி முன் தழுவுதற்கு அமைந்தவள் அதனை யொழிந்து வெகுளுதற்கு அமைந்தாள்.

புலத்தல் : பிணங்கல். 6

1317. வழுத்தினா டும்மினே னாக வழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று.

இதுவுமது

கூடியிருக்கின்றபோது யான் தும்மினேனாக, உலகத்தியற்கை பற்றி வாழ்த்தினாள்; வாழ்த்திய தானே மறித்து நும்மை நினைந்திருக்கும் மாதருள் யார் நினைக்கத் தும்மினீர் என்று அழுதாள்.

அன்புடையார் நினைக்கத் தும்மல் தோன்றும் என்பது பெண்டிர் வழக்கம். 7

1318. தும்முச் செறிப்ப வழுதாள் நுமருள்ளல்
எம்மை மறைத்திரோ வென்று.

இதுவுமது

எனக்கும் தும்மல் தோன்றிய வழி, யார் நினைப்பத் தும்மினீர் என்று பிணங்குதலஞ்சித் தும்மலை அடக்கினேன்; அதனைக் கண்டு நின்மேல் காதலுடைய மாதர் நினைப்ப நுமக்குத் தும்மல் தோன்ற அவரை எனக்கு மறைத்தீரோ என்று அழுதாள். 8

1319. தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீர்
இந்நீர ராகுதி ரென்று.

இதுவுமது

அப்படிப் பிணங்கிய தன்னை, யான் பணிந்து வணங்கி இனிய சொல்லி யுணர்த்தும் போதும் வெகுண்டாள்; நின்மேல் காதலுடைய பிற மாதருக்கும் பிணங்கினவிடத்தும் இவ்வாறே பணிந்துரைக்கும் குணத்தை யுடையவர் நீர் என்று சொல்லி. 9

**1320. நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று.**

**இதுவுமது**

என் சொற்களும் செயலும் கண்டு வெகுண்டாள்; அதனை எப்படித் தீர்ப்போ மென்று நினைத்து வேறொன்றும் சொல்லாமல் தன்னுடைய வடிவழ கெல்லாம் பார்த்துக் கொண்டிருப்பவும் என்னை வெகுண்டாள்; என் அவயவமெல்லாம் நோக்கிப் பார்க்கின்றீர், அதற்கு ஒப்புமையான மாதரை யாரை நினைத்துப் பார்க்கிறீர் என்று சொல்லி. 10

**புலவி நுணுக்கம் முற்றும்.**

---

## 133. ஊடலுவகை

அஃதாவது, இப்படி யூடிக் கூடிய தலைவனுந் தலைவியும் அவ் வூடலை உவந்து சொல்லுதல். ஊடிக்கூடிய இன்ப மிகுதியினால் உவகை கூறல்.

**1321. இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு.**

**இது தலைவி தோழிக்குச் சொல்லியது.**

தலைவரிடத்துத் தவறில்லை யாயினும் நமக்கு அவர் தலையளி செய்கின்ற அதனால் ஊடுதல் வலியவரும்.

நம்மிடத்துச் செய்யும் கருணைபோல் பிற மாதரிடத்தும் செய்வார் என்னும் கருத்தால் ஊடல் வரும் என்றது. 1

**1322. ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும்.**

ஊடலேதுவாக நம்மிடத்துத் தோன்றுகின்ற சிறு துனி தன்னால், காதலர் செய்யும் நல்ல தலையளியூடி வாடுமாயினும் பின்பு பெருமை யெய்தும். 2

சிறு துனி : சிறு பிணக்கு.

**1323. புலத்தலிற் புத்தேளு ருண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து.**

நிலத்தொடு நீர் கலந்தாற் போல ஒற்றுமையுடைய காதலரிடத்துப் புலத்தல் போல நமக்கு இன்பம் தருவது தெய்வவுலகத்து முண்டோ? இல்லை.

புலத்தல் : பிணங்கல். 3

**1324. புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
உள்ள முடைக்கும் படை.**

காதலரைப் புல்லிக்கொண்டு பின் விடாமைக்கு ஏதுவாகிய புலவியிடத்தே உளதாம், என்னுள்ளத்தை உடைக்கும் படைக்கலம்.

காதலரைத் தழுவிப் பின் அவர் பரத்தையிடத்து நீங்காமைப் பொருட்டு என்னுள்ளத்தைக் கலங்கச் செய்யும் புலவியாகிய படைக்கலம் என் காதல் மிகுதியிற் புலவி தோன்றும் என்றது. 4

**1325. தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோள்
அகறலி னாங்கொன் றுடைத்து.**

தலைவன் நெஞ்சொடு கிளத்தல்.

நாயகர் தங்களிடத்துத் தவறிலராயினும், தவறுடையார் போல ஊடப்பட்ட விருப்பமுடைய நாயகி யுடைய மெல்லிய தோள்களைக் கூடப் பெறுமல் வருந்திய வருத்தந்தானே கூடியபோது ஓர் ஆனந்தமுடைத்து.

ஆங்கொன்றுடைத்து என்பது, ஆங்கோர் பேரின்பம் உண்டென்றது. ஊடிக்கூடிய இன்பம் பேரின்பம் என்று தலைவன் சொல்லியது என்க. 5

**1326. உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது.**

இதுவுமது

ஒருவன் உண்பதிலும் முன் உண்ட உணவு செரித்துப் பசி எடுத்தல் இனிது; அதுபோலக் காமத்திற்குமேல் புணர்தலினும் முன்னைத் தவறு பற்றி நாயகி ஊடுதல் இன்பந்தரும்.

முன் உண்டது செரிக்கில் பின் உண்பதினிது ; முன் ஊடல் செய்து பின் நாயகி கூடுதல் இனிது என்றது. 6

1327. ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னும்
கூடலிற் காணப் படும்.

இதுவுமது

*காமம் அனுபவித்தற்குரிய இருவர் ஊடலினிடத்துத் தோற்றவர் வென்றார் ; அதனை அப்போது அறியப்படா தாயினும் பின்பு புணர்ச்சியின் அறியப்படும்.*

*தோற்றல் :* ஊடல் பொறுக்க மாட்டாமை ; அவர் புணர்ச்சியின் பேரின்பம் பெறுவர் என்றது. 7

1328. ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு.

இதுவுமது

*இப்போது இவள் நுதல் வியர்க்கும் வகை கலவியின்கண் உளதாகிய இனிமையை இன்னும் ஒருநாள் ஊடிக் கூடிப் பெறுகுவங் கொல்லோ, அவ் வின்பத்தை.*

உப்பு : இன்பம். இவ்வின்பம் ஊடிப் பெற்ற இன்பம் என்றது. *ஊடல் : பிணக்கு.* 8

1329. ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா.

இதுவுமது

*ஒளியிழையினை யுடையாள் இன்னும் மேன்மேல் எம்மொடு ஊடுவாளாக ; அவ்வூடல் தீர்த்தற்கும் யாம் இரந்துகொண்டு நிற்றற்கும் நீட்டித்து விடியாது நிற்க வேண்டும் இராப் பொழுது.*

*ஒளியிழை : ஒளி பொருந்திய ஆபரணம். ஊடிப் பெற்ற இன்ப மிகுதியான் ஊடுக நீடுக என்று நாயகன் சொல்லியது.* 9

1330. ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.

இதுவுமது

காமம் அனுபவித்தற்கு இன்பமாவது நாயகனும் நாயகியும் ஊடுதல்; அவ்வூடுதற்கு இன்பமாவது ஊடல் நீங்கிக் கூடி முயங்கிப் பெறுவாராயின் ஊடிய இன்பமும் கூடிய இன்பமும் உளதாம் ஊடலுவகையுடத்து என்றவாறு. கூடி முயங்கப்பெறின் என்பது: கூடி அனுபவிக்கப் பெறின் எனக் கொள்க.

ஊடலுவகை முற்றும்.

கற்பியல் முற்றும்.

காமத்துப்பால் முற்றும்.

திருக்குறள் முற்றும்.

திருக்குறளின் சிறப்புப்பாயிரமாகிய

# திருவள்ளுவ மாலை

---

## அசரீரி

திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க—விருக்க
வுருத்திர சன்ம ரெனவுரைத்து வானி
லொருக்கவோ வென்றதோர் சொல். 1

## நாமகள்

நாடாமுதன் மறைநான் முகனுவிற்
பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு 2

## இறையனுர்

என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினு
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்க்—குன்றுத்
செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போன்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல். 3

### உக்கிரப்பெருவழுதியார்

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
ருன்மறைந்து வள்ளுவனுய்த் தந்துரைத்த—நூன்முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ்
சிந்திக்க கேட்க செவி. 4

### கபிலர்

தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தால்—மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனுர்
வெள்ளைக் குறட்பா விரி. 5

### பரணர்

மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்
ஞால முழுது நயந்தளந்தான்—வாலறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத்தா
ருள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து. 6

### நக்கீரர்

தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளா
லானு வறமுதலா வந்நான்கு—மேனேருக்
கூழி னுரைத்தாற்கு மொண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னுற்று மற்று. 7

### மாமூலனுர்

அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவ னென்பானேர் பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார். 8

### கல்லாடனூர்

ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனி
னன்றென்ப வாறு சமயத்தார்—நன்றென
வெப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி. 9

### சீத்தலைச்சாத்தனார்

மும்மலையு முந்நாடு முந்நதியு முப்பதியு
மும்முரசு முத்தமிழு முக்கொடியு—மும்மாவுந்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றாரன்றோ
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால். 10

### மருத்துவன் தாமோதரனார்

சிந்தைநோய்க் கண்டஞ் செவிகுத்த் தேனளாய்
மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்—காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலாற்
றலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு. 11

### நாகன்தேவனார்

தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவார் தண்ணீரை
வேளா தொழிதல் வியப்பன்று—வாளாதா
மப்பா லொருபாவை யாய்பவோ வள்ளுவனார்
முப்பான் மொழிமூழ்கு வார். 12

### அரிசில்கிழார்

பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தொறுஞ் சேரச்—சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல்
வல்லாரார் வள்ளுவரல் லால். 13

### பொன்முடியார்

கானின்ற தொங்கலாய் காசிபனுர் தந்ததுமுன்
கூறின் றளந்த குறளென்ப—நூன்முறையான்
வானின்று மண்ணின் றளந்ததே வள்ளுவனுர்
தாநின் றளந்த குறள். 14

### கோதமனுர்

ஆற்ற லழியுமென் றந்தணர்க ளுன்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழிதா—ரேட்டெழுதீ
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனுர் முப்பாலைச்
சொல்லிடினு மாற்றல்சோர் வின்று. 15

### நத்தத்தனுர்

ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னேடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம். 16

### முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்

உள்ளுத லுள்ளி யுரைத்த லுரைத்ததனைத்
தெள்ளுத லன்றே செயற்பால—வள்ளுவனுர்
முப்பாலின் மிக்க மொழியுண் டெனப்பகர்வா
ரெப்பா வலரினு மில். 17

### ஆசிரியர் நல்லந்துவனுர்

சாற்றிய பல்கலையுந் தப்பா வருமறையும்
போற்றி யுரைத்த பொருளெல்லாந்—தோற்றவே
முப்பான் மொழிந்த முதற்பா வலரொப்பா
ரெப்பா வலரினு மில். 18

### கீரந்தையார்

தப்பா முதற்பாவாற் றமாண்ட பாடலினன்
முப்பாலி னற்பான் மொழிந்தவ—ரெப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள் ளுவர். 19

### சிறுமேதாவியார்

வீடொன்று பாயிர நான்கு விளங்கற
நாடிய முப்பந்து மூன்றேன்றாழ்—கூடுபொரு
ளெள்ளி லெழு திருபதிற் றைந்தின்பம்
வள்ளுவர் சொன்ன வகை. 20

### நல்கூர் வேள்வியார்

உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தா
னுத்தர மாமதுரைக் கச்சென்ப—விப்பக்க
மாதானு பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு. 21

### தொடித்தலைவிழுத்தண்டினர்

அறநான் கறிபொரு ளேழொன்று காமத்
திறமூன் றெனப்பகுதி செய்து—பெறலரிய
நாலு மொழுந்தபெரு நாவலரே நன்குணர்வார்
போலு மொழிந்த பொருள். 22

### வெள்ளிவீதியார்

செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா
வதற்குரிய ரந்தணரே யாராயி னேனை
யிதற்குரிய ரல்லாதா ரில். 23

### மாங்குடி மருதனார்

ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோ
ருள்ளுதொ றுள்ளுதொ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு. 24

### எறிச்சலூர் மலாடனார்

பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றூழாக—வாய
வறத்துப்பா னல்வகையா வாய்ந்துரைத்தார் நூலின்
றிறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து. 25

### போக்கியார்

அரசிய லையைந் தமைச்சிய லீரைந்
துருவல் லரணிரண்டொன் றொண்கூ—ழிருவிய
திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றெண்பொரு ளேழா மிவை. 26

### மோசி கீரனார்

ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லடுத்தன்பு
பூண்பா லிருபாலோ ராறாக—மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனார் நன்கு. 27

### காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்

ஐயாறு நூறு மதிகார மூன்றுமா
மெய்யாய வேதப் பொருள்விளங்கப்—பொய்யாது
தந்தா னுலகிற்குத் தான்வள் ளுவனாகி
யந்தா மரைமே லயன்.

### மதுரைத் தமிழ்நாகனார்

எல்லாப் பொருளு மிதன்பா லுளவிதன்பா
லில்லாத வெப்பொருளு மில்லையாற்—சொல்லாற்
பரந்தபா வாலென் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை. 29

### பாரதம்பாடிய பெருந்தேவனார்

எப்பொருளும் யாரு மியல்பி னறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாஞ் செப்பவரு—முப்பாற்குப்
பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர். 30

### உருத்திரசன்மகண்ணனார்

மணற்கிளைக்க நீரூறு மைந்தர்கள் வாய்வைத்
துணச்சுரக்குந் தாய்முலை யொண்பால்—பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பான் மதிப்புலவோர்க்
காய்தொறு மூறு மறிவு. 31

### பெருஞ்சித்திரனார்

ஏதமில் வள்ளுவ ரின்குறள்வெண் பாவினு
லோதிய வொண்பொரு ளெல்லா—முரைத்ததனாற்
றூதவிழ் தார்மாற தாமே தமைப்பயந்த
வேதமே மேதக் கன. 32

### நரிவெரூஉத்தலையார்

இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கு
முன்பறியச் சொன்ன முதுமொழிநூன்—மன்பதைகட்
குள்ள வரிதென் றவைவள் ளுவருலகங்
கொள்ள மொழிந்தார் குறள். 33

மதுரைத் தமிழாசிரியர் செங்குன் றூர்கிழார்

புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்
சிலவர் புலவரெனச் செப்ப—னிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுங்
கறங்கிருண்மா லைக்கும் பெயர். 34

மதுரை யறுவை வாணிகன் இளவேட்டனர்

இன்பமுந் துன்பமு மென்னு மிவையிரண்டு
மன்பதைக் கெல்லா மனமகிழ—வன்பொழியா
துள்ளி யுணர வுரைத்தாரே யோதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து. 35

கவிசாகரப் பெருந்தேவனர்

பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புனத
மாவிற் கருமுனியா யானைக்—கமரரும்ப
ரேவிற் றிருமா லெனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா. 36

மதுரைப் பெருமருதனர்

அறமுப்பத் தெட்டுப் பொருளெழுப தின்பத்
திறமிருபத் தைந்தாற் றெளிய—முறைமையால்
வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனு
ரோதவழுக் கற்ற துலகு. 37

கோவூர் கிழார்

அறமுத லன்கு மகலிடத்தோ ரெல்லாந்
திறமுறத் தேர்ந்து தெளிய—குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனர் பான்முறைநே ரொவ்வாதே
முன்னை முதுவோர் மொழி.

### உறையூர் முதுகூற்றனார்

தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள்வெண்
பாவிற் சிறந்திடுமுப் பால்பகரார்—நாவிற்
குயலில்லை சொற்சுவை யோர்வில்லை மற்றுஞ்
செயலில்லை யென்னுந் திரு. 39

### விழிகட்பெருங்கண்ணனார்

இம்மை மறுமை யிரண்டு மெழுமைக்குஞ்
செம்மை நெறியிற் றெளிவுபெற—மும்மையின்
வீடவற்றி னின்கின் விதிவழங்க வள்ளுவனார்
பாடின ரின்குறள்வெண் பா. 40

### செயிர்க்காவிரியார்மகனார் சாத்தனார்

ஆவனவு மாகா தனவு மறிவுடையார்
யாவரும் வல்லா ரெடுத்தியம்பத்—தேவர்
திருவள் ளுவர்தாமுஞ் செப்பியவே செய்வார்
பொருவி லொழுக்கம்பூண் டார். 41

### செயலூர்க் கொடுஞ்செங்கண்ணனார்

வேதப் பொருளை விரகால் விரித்துலகோ
ரோதத் தமிழா லுரைசெய்தா—ராதலா
லுள்ளுந ருள்ளும் பொருளெல்லா முண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு. 42

### வண்ணக்கஞ் சாத்தனார்

ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் திதனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதா—லாரியம்
வேத முடைத்துத் தமிழ்திரு வள்ளுவனா
ரோது குறட்பா வுடைத்து. 43

சளத்தூர்கிழார்

ஒருவ ரிருகுறளே முப்பாலி னேதுந்
தரும முதனன்குஞ் சாலு—மருமறைக
ளைந்துஞ் சமயநூ லாறுநம் வள்ளுவனர்
புந்தி மொழிந்த பொருள். 44

நச்சிமனர்

எழுத்தசை சீரடி சொற்பொருள் யாப்பு
வழுக்கில் வனப்பணி வண்ண—மிழுக்கின்றி
யென்றெவர் செய்தன வெல்லா மியம்பின்
வின்றிவ ரின்குறள்வெண் பா. 45

அக்காரக்கனி நச்சுமனர்

கலைநிரம்பிக் காண்டற் கினிதாகிக் கண்ணி
னிலைநிரம்பு நீர்மைத் தெனினுந்—தொலைவிலா
வானர் மதியந் தனக்குண்டோ வள்ளுவர்முப்
பானு னயத்தின் பயன். 46

நப்பாலத்தனர்

அறந்தகளி யான்ற பொருடிரி யின்பு
சிறந்தநெய் செஞ்சொற்றீத் தண்டு—குறும்பாவா
வள்ளுவன ரேற்றினர் வையத்து வாழ்வார்க
ளுள்ளிரு ணீக்கும் விளக்கு. 47

குலபதி நாயனர்

உள்ளக் கமல மலர்த்தி யுளத்துள்ள
தள்ளற் கரியவிரு டள்ளுதலால்—வள்ளுவனர்

வெள்ளைக் குறட்பாவும் வெங்கதிரு மொக்குமெனக்
கொள்ளத் தகுங்குணத்தைக் கொண்டு. 48

## தேனீக்குடிக் கீரனுர்

பொய்ப்பால பொய்யேயாய்ப் போயினபொய் யல்லாத
மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே—முப்பாலிற்
றெய்வத் திருவள் ளுவர்செப் பியகுறளால்
வையத்து வாழ்வார் மனத்து. 49

## கொடிஞாழன் மாணிபூதனுர்

அறனறிந்தே'மான்ற பொருளறிந்தே மின்பின்
றிறனறிந்தேம் வீடு தெளிந்தே—மறனெறிந்த
வானார் நெடுமாற வள்ளுவனுர் தம்வாயாற்
கேளா தனவெல்லாங் கேட்டு. 50

## கவுணியனுர்

சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த விருவினைக்கு மாமருந்து—முந்திய
நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனுர்
பன்னிய வின்குறள் வெண்பா. 51

## மதுரைப்பாலாசிரியனுர்

வெள்ளி வியாழம் விளங்கிரவி வெண்டிங்கள்
பொள்ளென நீக்கும் புறவிருளைத்—தெள்ளிய
வள்ளுவ ரின்குறள் வெண்பா வகிலத்தோ
ருள்ளிரு ணீக்கு மொளி. 52

### ஆலங்குடி வங்கனார்

வள்ளுவர் பாட்டின் வளமுரைக்கின் வாய்மடுக்குந்
தெள்ளமுதின் றீஞ்சுவையு மொவ்வாதாற்—றெள்ளமுத
முண்டறிவார் தேவ ருலகடைய வுண்ணுமால்
வண்டமிழின் முப்பான் மகிழ்ந்து. 53

### இடைக்காடர் பாடல்

கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்.

திருவள்ளுவ மாலை முற்றும்.

---

# செய்யுண் முதற்குறிப்பகாரதி

[எண் — செய்யுள் எண்]

# அரும்பத முதலியவற்றின் அகராதி

[ எண் — செய்யுள் எண் ]

ஊ



எ

ஏ



ஐ



ஒ

### கா

### சோ



### ஞா



### த



### தா

## தி



## தீ



## து

## தூ



## தெ



## தே



## தொ



## தோ

## பூ



## பெ



## பே



## பை



## பொ

### போ



### ம

## மா



## மி

### மோ



### யா



### வ

# சில குறள்மணிக் கடிகைகள்

## [ அகர வரிசை ]

# பிழை திருத்தம்

| குறள் | அடி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 20 | 2 | தமையா | றமையா |
| 32 | 1 | அறத்தினூங் | அறத்தினூஉங் |
| 45 | 1 | னில்வாழ்க்கைப் | னில்வாழ்க்கை |
| 52 | 1 | யில்லார் | யில்லாள |
| 88 | 2 | வேள்வித் | வேள்வி |
| 143 | 1 | வேறல்ல | வேறல்லர் |
| 149 | 2 | பிறர்க்குரியா | பிறற்குரியர் |
| 175 | 1 | யாாமட்டும் | யார்மாட்டும் |
| 180 | 1 | மென்னுது | மெண்ணுது |
| 205 | 1 | செய்யற்க | செல்யற்க செய்யின |
| 207 | 1 | விளைப்பகை | விணைப்பகை |
| 250 | 1 | நினைக்கத்தான் | நினைக்கதான் |
| 267 | | நோக்கிற்பவர்க்கு | நோற்கிற்பவர்க்கு |
| 292 | 1 | பொய்மையும் | பொய்ம்மையும் |
| 315 | 2 | தன்னேய் | தந்நோய் |
| 355 | 1 | எப்பெரு | எப்பொரு |
| 376 | 1 | யுய்த்துச் | யுய்த்துச் |
| 472 | 1 | தறிந்தூன் | தறிந்ததன் |
| 510 | 1 | தேருன் | தேரான் |
| பக். 134 | வரி 27 | தழாஅல் | தழால் |
| 545 | 5 | விளையுங் | விளையுளுந் |
| 623 | 1 | இடும்பைப் | இடும்பை |
| ,, | 2 | இடும்பைப் | இடும்பைப் |
| 653 | 1 | ஓதல் | ஓஒதல் |
| 659 | 1 | தெல்லா | வெல்லா |
| 660 | 2 | மெய்திரிஇ | பெய்திரீஇ |
| 663 | 1 | கடக் கொட்கச் | கடைக் கொட்கச் |
| ,, | ,, | யிடக் கொட்கின் | யிடைக் கொட்கின் |
| 685 | 2 | பயப்பாதாந் | பயப்பதாந் |
| 698 | 1 | ரென்றிகழா | ரென்றிகழார் |

| | | | |
|---|---|---|---|
| 716 | 2 | ஏற்றுவார் | ஏற்றுணர்வார் |
| 724 | 1 | கற்ருருட் | கற்ருர்முற் |
| 740 | 1 | பயமின்றி | பயமின்றே |
| 744 | 1 | பேரிடத் | பேரிடத்த |
| 759 | 1 | செறுநர்ச் | செறுநர் |
| 773 | 1 | தறுகணெண் | தறுக ணெண் |
| 782 | 1 | நிரைநீர | நிறை நீர |
| 799 | 1 | கெடுங்காலே | கெடுங்காலேக் |
| 883 | 1 | யஞ்கித்தற் | யஞ்சித்தற் |
| 890 | குறிப்பு | உடம்பாடிலாவர் | உடம்பாடிலாதவா |
| 919 | 1 | மென்ருேட் | மென்ருேள் |
| 947 | 1 | தீயனவின்றித் | தீயனவன்றித் |
| 996 | 1 | பண்புடையார் | பண்புடையார்ப் |
| 1032 | 1 | தற்ரு | தாற்ரு |
| 1051 | 1 | சுரப்பின் | கரப்பின் |
| 1053 | குறிப்பு | காப்பிலா | கரப்பிலா |
| 1059 | 1 | ணெனனுண்டார் | ணென்னுண்டாங் |
| 1108 | 1 | வளியிடைப் | வளியிடை |
| 11-1 | 1 | பாலாடு | பாலொடு |
| 1134 | 2 | மடல்ல | மடலல்ல |
| 1136 | 2 | படலொல்லாப் | படலொல்லா |
| 1160 | 1 | பிரிதாற்றிப் | பிரிவாற்றிப் |
| 1177 | 1 | விழைந்திழந்து | விழைந்திழைந்து |
| 1181 | 1 | பயந்தவென் | பசந்தவென் |
| 1250 | 1 | துன்ஞர் | துன்ஞத் |
| 1257 | 2 | பெட்பச் | பெட்ப |
| பக். 342 | வரி 11 | புலவி நுணக்கம் | புலவி நுணுக்கம் |

